உ

திருவருட்சகாயம்.

# திருக்குருகூர்ச் சித்தமான்மியம்.

இந்நூல்

புரசை அஷ்டாவதானம் சபாபதி முதலியாரவர்கள் மாணாக்கரும்

சென்ட்தோம் காலேஜ் இயற்றமிழ்ப் போதகாசிரியரும்

ஆகிய, மகா-ள-ள-ஸ்ரீ

திருமயிலை-சண்முகம் பிள்ளையவர்களால்

இயற்றப்பெற்று



'பென்ஷன் டிப்டிகலெக்டர்'

திருநெல்வேலி

ஸ்ரீமாந்-சண்முகம் பிள்ளையவர்களால்



மதுரை:

தமிழ்ச் சங்க முத்திராசாலையிற்

பதிப்பிக்கப் பெற்றது.



முதற்பதிப்புப் பிரதி ௧.

சோபகிருது௵.

இதன் விலை அரை ரூபா.



உ

திருச்சிற்றம்பலம்.

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறையாதீன வித்துவானும்,

வைதிகசைவசித்தாந்த பரிபாலகருமாகிய,

யாழ்ப்பாணத்து வடகோவை,

ஸ்ரீமத்-சபாபதிநாவலரவர்களியற்றியது.

——:o:——

ஒன்றன்றி யிரண்டன்றி யொன்றிரண்டு மன்றி
யொன்றுநிலை யத்துவித சித்தாந்த மெனவே
நன்றருளுந் திரவிடமா பாடியகு ரிசிற்
நாளுமெழுந் தருளினரென் றியாருமகிழ்ந் தேத்தத்
தென்குருகூர்ப் பதிதோன்றித் திகழ்ஞான சித்தர்
சிவைபுவனம் பிகையருளிற் சித்தாடல் விளக்கி
நின்றமிழ்மன் னியநன்ற பாடினனந் நண்ப
னியல்வல்லான் றிருமயிலைச் சண்முகபண் டிதனே.

————



"சங்கு சக்கரத் தாளிணை வாழியே சத்தி யாயுதம் பெற்றகை வாழியே
கங்கை தங்கு கமண்டலம் வாழியே கவினும்வாழி கருணையும் வாழியே
துங்க மாமரு மாலையும் வாழியே சுந்த ரம்மிகுஞ் சிந்துரம் வாழியே
நங்க ளுக்கருண் ஞானசித்தகுரு நாதன்வாழி நலம்வாழி வாழியே"

14-1



ஸ்ரீமத் ஞானசித்தசுவாமியார்

ஸ்ரீ:

# முகவுரை.

ஸ்ரீயப்பதியாய், அவாப்தஸமஸ்தகாமனாய், அனந்தகல்யாண குணநிதியாய் எழுந்தருளியிராநின்ற ஸர்வேசுவரன், முன்னர்த் தன் அம்சபூதரான ஸ்ரீகாரிமாறப்பெருமானை "குன்றம்போன் மணிமாட நீடு திருக்குருகூரதனுள்" அவதரிக்கச் செய்து நம்மை வாழ்வித்தருளியவாறே, கலிவலிமை மிக்க இக்காலத்தும் அத்திருப்பதியின் கண்ணேயே ஸ்ரீ ஞானசித்தரென்னும் நலமிகுயோகியை அவதரிக்கச் செய்து இத்தென்றமிழ் நாட்டை முழுவாழ்வடைவித்த திருவருட்பெற்றியின்றிறத்தை என்னென்று புகழவல்லேம்! என்சொல்லி யாற்றுகிற்பேம்! அப்பெரியார் கருவிலே திருவுடையராய், குழவிப்பருவத்தே யாவுங்கோதறவுணர்ந்து, இளமையிற்றுறந்து, பச்சைமலைச்சித்தரின் பேரருள்படைத்து, பற்பலவாய அற்புதச்செயல் இயற்கையினிகழ்த்தி, இவ்வுலகில் நிலவிவருகின்றமை அறியாதார் எவருமிலர். முற்காலத்துச் சிவனடியார்பாலும் திருமாலடியார்பாலும் இயற்கையினிகழ்ந்த அதிசயங்கள் பல நம் சித்தமூர்த்திகளிடம் அவ்வப்போது காணப்படுதல் நந்நாட்டு அறிஞரெல்லாம் அறிந்த உண்மையாதலின், அவற்றை நாம் இங்கு எடுத்துமொழிதல் மிகையேயாகும். ஆயினும், இவ்வுலகம், புலனறைபோய பொறியிலிகள் சிலரையுந் தள்ளாது தாங்கிநிற்றலால், அவர்கள் தெளியும்பொருட்டு இரண்டொரு விஷயங்கள் மட்டில் இங்கு யான் எடுத்துக்கூறல் ஒருபோதும் மிகையாகாதென்று துணிகின்றேன். அவையாவன :—

நம் சித்தமூர்த்திகள் திருவடித் தொண்டர்களாய் இத்தமிழ் நாட்டினும், பிறவிடங்களினும் வாழ்வார் அளப்பிலராவர். இப்பெருமானது திருவருட்கிலக்காயவருள், யோகீசுவரரும், குறுநிலமன்னரும், பெருஞ்செல்வரும், பிறசமயத்தவரும் பலப்பலர் ஆங்காங்கு இன்றும் விளங்குகின்றனர். நாக்கொண்டு மானிடம்பாடவொருப்படாத யதீந்திரர்களும், அந்தணச்செல்வர்களும், மடாதிபதிகளும் எத்தனையோபேர் நம் சித்தர்மேற் பாமாலை சாத்திப் புனைந்திருக்கின்றனர். அன்றியும், அருணகிரியாரின் அம்சமோவென்று புக

மூப்படுபவரும், திருப்புகழ்ச் சுவாமி யென்னும் மறுபெயரினருமாகிய முருகதாச சுவாமிகளை நந்நாட்டில் அறியதாருமுளரோ? அச்சுவாமிகளது அற்புத வாக்கின்றிறத்தையும், இறைவனையன்றி எவரையும் பாடவிசையாத அவரது திடபத்தியையும் வியவாதார் அறியரன்றே? நம் சித்தமூர்த்திகள் அவதரித்த தென்பாண்டிநாட்டினராய அப்பெரியார் அவ்வக்காலங்களில் சித்தபிரானின் அற்புதச் செயல்களையும் ஞானவைராக்கியங்களையுங் கண்டு வியந்து அகங்குழைந்து பாடிய செய்யுட்கள் பலவுள. அவற்றுட் சில அடியில் வருமாறு:—

"ஞானசித்த மூர்த்திகளிந் நாட்டினிடை கூடியதால்
ஈனசித்தர் நாசமுற லென்றென்று—மானசித்த
முள்ளதொண்ட ரெல்லா மொருங்குதுதித் தேத்துகின்றார்
வள்ளலருண் மாட்சி மதித்து.

"கொலையும் புலையுமறுங் கொற்றமன்னர் நீதி
நிலைதவறார் செந்தமிழ்ச்சீர் நீடுந்—தலையாய
வானகத்துள் ளாரு மனிதருங்கூ டிக்களிப்பார்
ஞானசித்த னுடல்செயு நாள்.

"மரகதகி ரிக்கிறைவன் மாமலர்த்தாட் கன்பாச்
சரதபத்தி யாற்பதிகஞ் சாத்தி—விரதபயன்
பெற்றுயர்ந்த ஞானசித்தன் பீடும் பெருந்தகவுங்
கற்றுணர்ந்தோ ரேயறிவர் காண்.

"ஞானசித்த னையொருவ னல்லோர் நடுக்குலவி
வானகமும் பூதலமும் வாழ்வதனுக்—கானதமிழ்ப்
பாமாரி பெய்வதனைப் பார்ப்பதென்றன் வேட்கை யென்றல்
காமாரி யாணையுண்மை காண்.

இவ்வாறு திருவருள்விளக்கமுற்ற பெரியோரெல்லாஞ்சித்தனைப் போற்றி புகழவேண்டுமென்னுங் கடமையும் விதியும் அவர்கட்கு எதன்பொருட்டோ? அறிந்துகூறுமின்; இன்னும் ஏறக்குறைய அறுபத்துநான்குக்கு மேலாகச் சித்தமூர்த்திகள்பேரிற் பிரபந்தங்கள் அவ்வப்போது பாடப்பெற்றுள்ளன. பிரபந்தமியற்றியோருள் கல்வி

ச்செல்வமிக்குப் பொருளையொருபொருளாக் கனவினுங் கருதாதவரும் பற்பல பட்டம் விளங்கப் பெற்றோருமாகிய வித்துவசிரோமணிகள் பலராவர். அந்நூல்கட்குப் பாயிரம் பாடிய பண்டிதமணிகளையுஞ் சேர்த்தெண்ணின், நந்தமிழ்நாட்டுப் புலவர் பெருமக்கள்களுள் ஞானசித்தப் பெருந்தகையைப் பாடாதார் அரியரினுமரியர் என்றே முடிக்கலாம். இனி இத்தனைஅறிஞர்களும் தம்மைப்பாடச் செல்வரொருவர் முயல்வாராயின், அவர்க்கு எத்துணைப்பொருள் செலவாகவேண்டுமென்பதை நினையுங்கள். நம் சித்தரையும் அவ்வொருவராகக் கருதுவிரேல், அவர்கள் அவ்வாறு பொருட்செல்வ மிக்காராகயாரேனு மறிந்ததுண்டா? அவ்வாறாயின், நடுநிலைசிறிதுந் தவறு உயர்நிலையாளருமோ சித்தபெருமானை வாளாபோற்றிப் புகழ வொருப்படுவர்; ஒருபோதுமில்லை: யாமிங்குக் காட்டிய இச்சிறுநியாயங்களே சித்தரின் திருவருட்செல்வப் பெருமையை வெள்ளிடை மலைபோல் விளக்கத்தக்கன. இன்னும் இதற்கு எம்மையொத்த நண்பர்கள் நேரிலறிந்த அற்புதமொன்றை இனி எழுதுவோம்.

சென்னையிற் பிரஸித்திபுற்ற வித்துவானாக விளங்கும் திருமயிலைச் சண்முகம்பிள்ளையவர்கள் மதுரைநான்காந்தமிழ்ச்சங்கத்துக்குச்சென்று திரும்பித் திரிசிரபுரந் தங்குகையில், ஆங்கு அவர்நண்பினராய புலவர்பலர் நம் சித்தமூர்த்திகளின் அற்புதங்களைப் பிள்ளையவர்களறியச்சொன்னார்கள். அவரும் தாம் அப்பெரியார் பெருமையைக்கேட்டறிவதுண்டெனவும், அடுத்துப் பழகியதில்லை யெனவும் கூறியவளவில், நண்பர்கள் அவரைத் திருவானைக்காவுக்கு அழைத்துச்சென்று, சித்தமூர்த்தியை நேரிற் றரிசிக்கச் செய்தார்கள். பின்பு அவ்வூரிற் சிலர் பிள்ளையவர்கள்பால்வந்து புலவரே? சித்தமூர்த்திகள் திவ்வியசரிதத்தை எங்கட்குப் பாடித்தரவேண்டும் என்று வேண்டினார்கள். முன்பு, தமக்கு ஒரு சாலைமாணாக்கராகிய, தமிழ்ப்பண்டிதர் திருவாரூர்ச் சின்னச்சாமிபிள்ளையவர்கள் முதலாய வித்துவசிரோமணிகள் பெருங்காவியமாகப்பாடியிருத்தலால், சித்தர் மாட்சிசெவ்வனே விளங்குவதாயினும், தாம் அவ்வாறு பாடற்கு அற்புத நிகழ்ச்சியேதேனும் நேரிற்கண்டாலன்றி இசைவதரிதா மென்று விடைபகர்ந்து, காவை நீங்கித் திரிசிரபுரத்தே சின்னாள் வதியுங்காலத்து

ஓர்நாள் பிள்ளையவர்கள் கனவிடை, அவர் வழிபடுந் தெய்வமாகிய முருகக்கடவுள் தோன்றி 'அன்ப! ஞானசித்தனது பெருமையை அறியாது மயங்கினுய்: நீ அவன் சரிதத்தைப் பாடாது மறுத்தல் எமக்குத் திருத்திதருவதன்று; விரைந்து முடிக்க' என நனவேபோ ற்கூறி மறைந்தவளவில், பிள்ளையுந் திடுக்கிட்டு விழித்து ஒன்றுமறி யாது மருண்டசிந்தையராய்ப் பின்னர்த் தெருண்டு, 'இஃதோரதிசய மிருந்தவாறென்னே' என்று பெருவியப்பெய்தி நடந்ததைத் தம் நண் பர்கட்குக் கூறித் திரும்பவுங் காவைசேர்ந்து, சித்தமூர்த்திகளைத் திருவடிதொழுது நிகழ்ந்த வரலாற்றைக் கூறி 'மூர்த்திகளே! சிறி யேன் செய்பிழையைப் பொறுத்தருண்மின்' என்று போற்றிப் புகழ்ந்து சித்தசபை முன்னர் அப்போதே 'பணிகை தன்னடியார்க் கென' என்று தொடங்கித்திருக்குருகூர்ச் சித்தமான்மியத்தை ஒரா ந்து நாளிற் பாடிமுடித்தனர். இவரது பாடல் விரைவைக்கண்ட அவ்வூர் அறிஞர்கள் பெரிதும் வியந்து இராமகாதையை ஏழுநாளில் முடித்த கவிச்சக்கரவர்த்தியாரின் அம்சமோ இவர் எனப்புகழ்ந்து கொண்டாடினார்கள். அப்போது அவரது பாடற்றிறத்தைக் கண்ட திசயித்தவருள் ஒருவராகிய திருப்பிடவூர்த் தருமகர்த்தரவர்கள் பிள்ளையைத்தந்தலத்திற்கோர் புராணம் பாடித்தரவுங் கேட்டுக்கொ ண்டார்கள். பிள்ளையவர்கள் சித்தமான்மியத்தை விரைந்து பாடி வருவதைக் கண்டிருந்த நண்பர்கள் 'பிள்ளையே அவகாசத்திற்பாடி முடிப்பின் நூல் அழகு பெற்றுவிளங்கும்' என்று கூறித் தடுத்தும், அவர், முருகக்கடவுள் ஆவேசித்து என்பணியை இதுபோது நிறைவேற்றலால், தாமாக அதனுட்பாடுவதொன்று மின்றெனவும் இறைவன் ஆட்டுவித்தால் அதனை இடை நின்று தடுக்க வல்லாரு முளரோ வென்றும் அதிசயிக்க அப்போது விடைபகர்ந்தனர். அங்ஙனம் அவர் பாடிய மான்மியம் அமிர்தம்போலமைந்து மிளிருவ தைக் கண்கூடாக நாங்காணலாம். இச்செய்தி எம்மனோர்முன்னர் நிகழ்ந்ததோர் அற்புதநிகழ்ச்சியாகும். இவ்வற்புதத்தை வித்துவ சிரோமணியாகிய ஸ்ரீமத்-சபாபதிநாவலரவர்கள், பங்களூர்ப் பண்டி தர் ஸ்ரீ. உ. வே. சௌந்தரராஜஐயங்கார்ஸ்வாமி முதலியோராற் கே ள்வியுற்றுத் திருவருட்டிறத்தை வியந்துபாராட்டி, தம்மாப்தராகிய மயிலைச் சண்முகம்பிள்ளை யவர்கள் லோகோபகாரமாகப் பாடிய

சித்தமான்மியத்துக்கு அப்போதே பாயிரச்செய்யுளொன் றெழுதி செய்யூர் ஜமீந்தாரவர்கள் மூலம் அனுப்பிவைத்தார்கள். பிள்ளையவர்கள் பாடிய மான்மியத்துள் பதினொரும் யாகக்கதை மட்டும் முன்னரே அடியார்களால் அச்சேற்றப்பட்டது. இப்போது அதுவுமுள்பட நான் முழுதும் இனிது வெளியிடப்பெற்றது. இம்மான்மியத்துட் கண்ட கதைகளை ஒருங்கு திரட்டி அழகிய செந்தமிழ் வசனரூபமாக, சென்னையிற் பிரஸித்தியுற்ற வித்துவானுக விளங்குவோரும், சித்தமூர்த்திகள் பேரருட்குரித்தானவருமாகிய ம-௱-௱-ஸ்ரீ அஷ்டாவதானம் பூவை கல்யாணசுந்தர முதலியாரவர்கள் எழுதியுள்ளார்கள். அவர்கள் எழுதியது, அறிஞர்க்கேயன்றி அனைவர்க்கும் பெரும்பயன்றரத்தக்க தென்பது ஒருதலையாகும். ஸ்ரீமத்-ஞான சித்த மூர்த்திகள் திருவருள் உலகைப் பெருவாழ்வடையச் செய்வதாக!

இங்ஙனம்,

அன்பில். ஸ்ரீவெங்கடாசாரியார்,

'அமிர்தவசனி' ப்பத்திராதிபர்.

ஸ்ரீரங்கம்.



திருவருட்சகாயம்.

# சிறப்புப்பாயிரம்

---

சென்னைப் ‘பிரஸிடென்ஸி’ காலேஜ்’ தமிழ்ப்பண்டிதரும்
மகாவித்வானுமாகிய
ப்ரும்மஸ்ரீ
உ. வே. சாமிநாதையரவர்கள்
இயற்றியது.

தேர்ச்சித் தகைஞான சித்தன்சி ராயகுரு
கூர்ச்சித்த மான்மியத்தை யோதினனார்த்—தார்ச்சித்தன்
தென்மயிலைச் சண்முகப்பேர்ச் செம்மலெனக் கேட்டடைந்த
வென்மகிழ்வுக் கெல்லையுண்டோ வின்று.

---

சேலம் ஜில்லா பென்ஷன் போலீஸ் இன்ஸ்பெக்டரும்,
இயற்றமிழ்ப்பண்டிதரும் ஆகிய தில்லையம்பூர்ச் சோமயாஜி
ஸ்ரீ உ. வே. வெங்கட்டராம ஐயங்காரவர்கள்
இயற்றியவை.

சித்தசித்தோடிறையாகுமுப்பொருளின் றிறமுணரச்செகத்தின்மாந்
கத்தவ்யச் சீர்படியச் சித்த சுத்தி யதிலாரக் கலியை யோட்ட [தர்
முத்தசுத்த நிலைபெறவே முகுந்தனுவந் தளித்தமுதிர் ஞானசித்த
ரொத்தசுத்த பலவேள்விபுரிவித்தவொருதிறத்தையுரைப்பார்யாரே.

மத்தமா கரிபணிந்த வளநகரா மானைக்கா வளம்பெற் றோங்குஞ்
சித்தசபை யின்சிறப்பு மவனுடல் செய்வதையுஞ் செவ்வே யன்ப
ரெத்தலத்தும் வெளியிட்ட பன்னூலு மிதற்குநிக ரில்லையென்ன
மொத்தமாத் திருக்குருகூர்ச் சித்தமான்மியமெனவே மொழிந்தான்
[மன்னே.

மயிலைவருஞ்சண்முகனுவல்வனருட்டன்மைகொண்டுவகுத்தவிந்நூற்
பயிலுமவர்க் கன்பறிவா தியகுணமு பாத்திகத்தின் பற்று மோங்கி
யியலுமிக பரசுகமு மெய்துமே யிதன்சீர்மற் றென்னே சொல்கேன்
குயிலுமிசை யாழுமெனச் செவிக்குணவு செய்திடுமின் கோட்டி
[கொண்டே.

மதப்பேயுங் குலப்பேயுங் குதித்தோடு மனச்சாந்த மருவி வாழும்
பதப்பேய ரிலக்கணிகள் பொருட்பேயாந் தார்க்கிகர்கள் பன்ன
லோயுங், கதப்பேயின் மகளாகுங் கொலைப்பேயுங் கடந்தோடுங் கல்
விசெல்வ, விதப்பேயும் வெருண்டோடும் விண்ணெறியின் சுகங்கா
ணும் விரும்பினோர்க்கே.

---

புரசை அஷ்டாவதானம் சபாபதி முதலியாரவர்கள் மாணாக்கரில் ஒருவரும்

யூனிவர்ஸிட்டி பிரதான பரீக்ஷகருள் ஒருவருமாகிய மகா-௱-௱-ஸ்ரீ

## தண்டலம்-பாலசுந்தரமுதலியாரவர்கள்

இயற்றியது.

சுத்தசத்தி பீடமெட் டெட்டின் மேலாந்
துவாதசாந் தத்தலம்வா ழெல்லாம் வல்ல
சித்தனெனத் திகழ்சோம சுந்த ரேசன்
திருவிளையாட் டுலகுபமுன் றெரித்த சைவப்
பத்திமிகும் பரஞ்சோதி யார்போன் றங்கம்
பாவையா மயிலைச்சண் முகப்பா வல்லோ
னித்ததியில் ஞானசித்த னெழிற்சீர் முற்று
மியற்றமிழா னியற்றினனஃ திலக மாதோ.

---

சென்னைக் கிறிஸ்டியன் காலேஜ்

தமிழ்ப்பண்டிதர் மகா-௱-௱-ஸ்ரீ

## ஈக்காடு-இரத்தினவேலு முதலியாரவர்கள்

இயற்றியது.

கண்ணுதலின் றன்னருளாற் புகலியர்கோ னென்புபெண்ணாக்
கண்டசீர்த்தி, நன்னுமயி லாபுரியோன் பல்சமய மாண்புகளு நலமிக்
கோர்ந்த, வன்மைச்சண் முகப்பெயரோ னருங்கலைகள் பலபயின்
றே னன்பு கூர்ந்து, மண்ணவரும் விண்ணவருங் களிகொள்சித்த
மான்மியநூல் வழங்கி னனே.

"திருநாவுக்கரசு" பத்திராதிபரும்
திருநெல்வேலிஇந்துகாலேஜ் தமிழ்த்தலைமைப்பண்டிதருமாகிய மகா-௱-௱-ஸ்ரீ
தி. பா. சிவராமபிள்ளைபவர்கள்
இயற்றியவை.

புன்குருகைக் கொள்ளான் புகழ்சால் புவனியருண்
மன்குருகைக் கொண்டவருள் வள்ளன்மற்—றென்குருகை
ஞானசித்தன் காதை நவின்றான் றிருமயிலை
மோனசித்த னுஞ்சண் முகன்.

அவனே கடவுட் டமிழ்ப்பயன்கை கண்டோ
னவனே திருத்தக்க வண்ண-லவனேகா
ணைம்மாறு மெம்மை யுடையாட் கினியரெவர்
தம்மாலும் பேசுந் தரம்.

---

பங்களூர் 'சென்ற் சோஸப் காலேஜ்' தலைமைத் தமிழ்ப்பண்டிதர்
ஸ்ரீ. உ. வே. சௌந்தரராஜையங்காரவர்கள்
இயற்றியது.

சித்தர்பதி னெண்மரொரு வடிவாகக் குருகூரிற் றிகழ்ந்தா லென்ன
வித்தரையி லவதரித்த ஞானசித்த யான்மியத்தையெவருந்தேர்வான்
சுத்தமிகு சொற்சுவைச்செந் தமிழ்ப்பனுவ லாலியற்றித் துலங்க
வைத்தான், புத்தியிற்புங் கவர்குருவா யுயர்மயிலைச் சண்முகநற்
[புலவ ரேறே.

---

மதுரை ஜில்லா முறையூர்,
ஸ்ரீமாந் பழ. சி. சண்முகஞ்செட்டியாரவர்கள்
சமஸ்தானவித்துவான், கோட்டாம்பட்டி. மகா-௱-௱-ஸ்ரீ
எம். கருப்பையாப் பாவலரவர்கள்
இயற்றியது.

மோனசித்தர் குழுமுழுது முன்னுதிருக் குருகைவந்த முதன்மை
மூர்த்தி, யானசித்த ரருணடி பணிமயிலைச் சண்முகவே ளறிவோ
டாய்ந்திங், கூனசித்தா மெனவெண்ணி யுயர்சித்தா நெறிநாடி யுணா
த்த நூலை, ஞானசித்த யான்மியமென் றுரைப்பரே லதன்பெருமை
நவிலற் பாற்றே.

திருச்செங்கோட்டு முத்தமிழ் வித்துவான் மகா-ா-ா-ஸ்ரீ
விசாகப்பெருமாள் முதலியாரவர்கள்
இயற்றியவை.

இருக்குமுத லுன்மறையா றங்கமெலாங் கற்றறிந்த வெழினீர்விப்ரர் பெருக்குமிகு மினிமையெனும் பொருள்கொள்ளுந் தமிழ்க்கடலைப் பெட்பாயுண்ட, மருக்குலவு கவிஞர்பலர் முன்றவத்தாற் சித்தனென வந்தா னேங்குந், திருக்குருகூர் நகரதனி லென்றுநிதஞ் சொலும் வண்ணஞ் சிறப்பு நேரும். (க)

தத்துவநூ லாய்ந்ததனிற் சொன்முறையே யொழுகிமகந் தகவியற் றிச், சித்துபல வாங்காங்குச் செய்தெவரு மியம்பவொணுச் சிறப்புக் கொண்ட, சத்துநிறை ஞானசித்த சுவாமிகளின் பண்புமிகு சரித்திரத் தை, யித்துகடி ரவனியுளோ ரெஞ்ஞான்று மோதியுவப் பெய்த மேன்மேல். (உ)

மருமயிலை யிந்துளநேர்ந் தெழிலடியார் பவவினைகண் மாற்றுஞ்சீரார் ஒருமயிலை யிவரொருவன் பதவனச நெஞ்சினிடை யுறத்துதித்தே கருமயிலை சிவப்புமிலை வெண்மையதே யெனுந்தகையாள் கருணை கொண்டு, திருமயிலை நகரிலுதித் திவன்சனக னென்னேற்றுன்தெரிந் திலோமால். (ங)

எனமகிழ்வாற் கல்விவலார் புகழவிலக் கணந்தகைகொ ளிலக்கி யந்தா ன், மனமுறவாராய்ந்தெொடு நாற்கவியுஞ் சொலுந்திறத்தான் மதுர வாக்கி, தினமும்விடா தன்பர்கள்சூழ் திருக்குருகூர்ச் சித்தமான்மிய மென்றோர்நூல், கனமிகநேர் சண்முகநா வலனினிய செந்தமிழாற் கழறி னனே. (ச)

---

இந்நூலாசிரியர் மாணக்கரும்,
சென்னை, எஸ். பி. ஜி. ஹைஸ்கூல் தமிழ்ப் பண்டிதரும் ஆகிய மகா-ா-ா-ஸ்ரீ
கா. நமச்சிவாய முதலியாரவர்கள்
இயற்றியது.

சமரபுரிக் குகன்சித்தர் போற்சென்றெற் பாடென்று தாத்திற்கூறக் குமரனடிக் கேசொன்மா லைகள்சூட்டி யருள்பெற்ற குரிசி லையேற் கமையவெழுத் துணர்த்துமெழிற் சண்முகப்பே ரியல்வல்லோ னன் பிற்சொற்றுன், உமைபுவன யருள்பெற்ற ஞானசித்த மான்மிய மென் றேது நூலே.

திருமயிலை வித்வான்
மகா-ள-ள-ஸ்ரீ
வி. சுந்தரமுதலியாரவர்கள்
இயற்றியது.

செல்லாரும் பொழில் புடைசூழ் திருக்குருகூர் ஞானசித்தர் சீர்த்தி யெல்லாஞ், சொல்லாலும் பொருளாலுஞ் சுவைமுதிரப் பத்தியமாச் சொற்றளித்தா, னல்லாருங் களப்பெருமா னடியலாற் பிறிதொன்று மகத்தி லுன்னுப், பல்லாரும் புகழ்மயிலைச் சண்முகப்பே ருலகோங்கும் பாவலோனே.

---

திரிசிரபுரம் 'நாஷனல் ஹைஸ்கூல்'
தமிழ்ப்பண்டிதர் மகா-ள-ள-ஸ்ரீ
தி. ச. ஆறுமுகநயினாரவர்கள்
இயற்றியது.

கேடருமி ராமகதை யவன்றனைய ரவனவையிற் கேட்பித் தாங்குப்
பாடல்சால் சிறப்பிற்றாங் குருகைவரு ஞானசித்தர் பண்பார் காதை
மாடமிகு திருமயிலை வாழன்பன் சண்முகநா வலவனெற்கு
நாடுமிய னனியுணர்த்து நல்லோனே பாடியரு ளலம்பெற் றானால்.

---

பாளையங்கோட்டை
ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரதேசிகரவர்கள்
இயற்றியவை.

பன்னு திருமயிலைப் பாவலனாஞ் சண்முகமான்
மன்னு திருக்குருகூர் வந்தருளி—மின்னு
வளம்படைத்த ஞானசித்தர் மான்மியநூல் பாடி
யுளங்களித்தான் யாமதுபார்த் தோம்.

வாய்ந்தசீர் ஞானசித்தர் மான்மியத்திற் சிற்சிலவே
யாய்ந்தறிய லானோ மநேகம்பின்—னேய்ந்த
மதிவலார் பாடுகென வைத்துவிட்டான் போலு
மதுசொலவும் வல்லா னவன்.

---

திருநெல்வேலி ஜில்லா பெருங்குளம்
மகா-௱-௱-ஸ்ரீ மார்த்தாண்டம் சிதம்பரம் பிள்ளையவர்கள் குமாரர்
சுப்பிரமணியபிள்ளையவர்கள்
இயற்றியவை.

நவலிங்க மாபுரமு நாடறிய வோர்கா
னவமாக் குருகூராய் நன்மைப்—புவனமிசை
யெல்லோரும் போற்றவரு ளீவதற்கே ஞானசித்த
வல்லோ னுதித்தான் மகிழ்ந்து. (க)

இப்பெரிய மாதவத்தோ னெய்தியங்கங் காடல்செயுஞ்
செப்பரிய மான்மியங்கள் சேர்த்தொருநா—லொப்பி
றிருமயிலைச் சண்முகவேள் சீர்த்திபெறச் செய்தல்
பெருநிலத்தோர் செய்ததவப் பேறு. (உ)

---

ஸ்ரீவைகுண்டந்தாலுகா ஆற்றூர் மகா-௱-௱-ஸ்ரீ
திருச்சிற்றம்பலம்பிள்ளையவர்கள் குமாரர்
இராமலிங்கம் பிள்ளையவர்கள்
இயற்றியது.

மலர்மகள் வாழ்க்கை நலமுறப் பொலிய
நிலமகள் குலத்தின் றலைமக ளென்ன
உலகெலாந் தந்த வலகில்சீ ரெந்தாய்
மலைமகள் கேள்வன் மகனிவர் புயமேற்
றங்கிவீற் றிருந்த மங்கையா யென்றும்
பங்கமில் சீர்த்தி யெங்குமே வீசித்
தென்றிசை முழுதுஞ் செந்தமிழ் தெரிக்குந்
தென்னா டென்று மிந்நாள் பூர்வ
நோக்குற மார்ப நீக்கற விருதோட்
கிருகவ ராகப் பிரிவதில் வலபா
னித்திலத் தொடையோ வித்திறத் தென்னப்
புலவோர் பலருந் தலைத்தலை யயிர்ப்ப
விலைதரு முத்தை மலைதரு மணியை
யலைதரு பொருளைக் கிலகிய தென்சார்

நிலவிய மாறன் றலமெனுங் குருகூர்ச்
சேத்திர மதன்கட் சாத்திர முறைதேர்ந்
தேத்தியும் பலவா தோத்திரஞ் செய்து
நல்லோர் பலரும் பல்லூழி கால
மெல்லாம் வல்ல கல்லானை தின்னக்
கரும்பருத் தியவெம் மரும்பெரு மணியைத்
திருவருட் சுடரைத் திகழொளிப் பரப்பை
யருவுரு வாகி யமர்ந்தவெங் காவைச்
சத்தியுஞ் சிவமு மானதற் பரனைப்
பயின்றருச் சித்த பாக்கிய மெனவே
தோன்றிய ஞானி தொல்சீ காழிப்
பிள்ளையே யென்னப் பிறங்குறு மெழிலோன்
றுகளறு பத்திச் சுத்தமெய்ஞ் ஞான
நிகழுறு மழகே யொழுகிய வதன
னட்டமா சித்தியு மெட்டினுந் தரமென
விட்டன னாகியே நிட்டையி லிருந்து
தானே யெவர்க்கு ஞானமுஞ் சித்தி
யருள்புரி முனிவர னாதலான் மேலோர்
வானமு முவக்கு ஞானசித் தன்னெனப்
போற்றுறுங் குருகூர்ப் புனிதமார் சித்த
மான்மிய மெவரு மண்டல வரைப்பிற்
றெரிவா னுய்வான் சீர்மயி லைப்பதி
றன்னி லுதித்தோன் றுழாக் கீர்த்தி
தாங்கிய புலவோன் சண்முகம் பிள்ளை
நாவலர் போற்றி நாத்தழும் பேறச்
செந்தமிழ்ப் பாவாற் றந்தனன் றனே.



மதுரைஜில்லா இளையான்குடி ஸ்பெஷல் மாஜிஸ்திரேட்டும்,
சிவகங்கைதாலூகாபோர்ட்டுமெம்பரும்,
பரப்பிரம்மப்பதிகமுதலியபலநூல்களியற்றியவரும்ஆகியமகா-ா-ஸ்ரீ
எம். கே. எம். அப்துல்காதிறுராவுத்தரவர்கள்,
இயற்றியவை.

புயன்மேவுந் தடஞ்சோலைப் பூவுதிரப் புடைத்தெழுந்து பொருவி லாச்சேற், கயன்மேவும் பொருநைநதிக் கரைக்குருகூ ரியற்றுதவக் கருணா னந்தச், செயன்மேவும் படிதோன்றிச் செயற்கரிய பலசெய்து செவ்வை யாகா, மயன்மேவு மனத்தினர்க்கு வஸ்துநிலை நன்குணர்த் தும் வள்ளலாகி. (க)

அகத்தியரா தியமுனிவ ராச்சிரமம் புகுந்துறைந்தே யருளான்மிக்க மகத்துவமுற் றேதாமே வன்கலைகள் முழுதுணர்ந்து மதியுமோவ்வா முகத்திலருள் நனிவிளக்கி மூர்த்திதல முதற்சிறந்த மூன்றீர் சூழுஞ் செகத்திலதி வளம்படைத்த திருவானைக் காவடுத்துச் சீர்சான்றுற் [றேன். (உ)

தண்டமிழ்ப்பா மாலையினூற் றக்கமழை வருவித்துந் தரணி யோர்தாங், கொண்டவிடத் துயரொழித்துங் கொடியபிணி பலவிலக்கிக் குருக்கள் கோவாய்க், கண்டவருங் கேட்டவருங் கைகூப்பிக் களிதூங்கக் கவினத் தோன்றி, எண்டிசையுஞ் சித்தர்புக ழெடுத்தோ தவாழ் பெரிய ரிவரே யென்ன. (ங)

முத்தமிழ்நற் றுறைபோய முனிவர்குழா மோதரிய முன்னூல் தேர்ந்து, வித்தகத்துக் குறைவிடமாய் வியன்வாணி பீடமுமாய் விளங்கத் தோன்றிப், பத்தியநேர் வழிகாட்டும் பன்னூல்க ளொருங்கியற்றிப் பாரில் ஞான, சித்தரெனும் பெயர்வகித்துப் புவியனைத்தும் புகழ் படைத்தான் சிறப்பான் மன்னோ. (ச)

பூமாது செய்தவமோ புகழ்க்குருகூர் செய்தவமோ பூவில் வாழும் நாமாது வாணிதன்னூற் றலைக்காட்ட வவதரித்த நலனோ மேன்மைக் கோமாது சேர்முனிவர் குலனோற்ற விரதமோ குரவர் கூத்தோ மாமாது புகழ்ஞான சித்தனிவ ணவதரித்த மகிமைதானே. (ரு)

இன்றுவரை யெண்ணிரண்டாமிட்டிமுடித்திசைபடைத்து மியல்பாற் றீட்சை, நன்றுதரு ஞானசித்தர் ஞானசித்தரெனவோதும் நாம முள்ளார், என்றுமுயர்ந் தோரறிந்த விவர்சரித மான்மியத்தை யாருங் கேட்பத், தன்றமிழின் வலிகாணத் தகுமொருநூ லினிதிசைத்தான் தவத்தான் மிக்கோன். (௬)

இன்னவன்யாரெனிற்புகல்வா மெழின்மயிலை நகர்வாழு மேந்த லான தன்னிகர்சண் முகப்புலவன் றன்மட்டோ தவமுடையான் தருநேர் கையான், நன்னரிந்நூ லினிதோது நாவலருங் காவலரு நரர்களியாரும், மன்னுதவ முடையரெனின் மற்றதன்சீர் எவராலும் வழுத்தற் பாற்றோ. (எ)

---

திருநெல்வேலி மகா-௱-௱-ஸ்ரீ சோணசலம்பிள்ளையவர்கள் குமாரர்

காந்திமதிநாத பிள்ளை யவர்கள்

இயற்றியவை.

பொய்யரவங் கொண்டு பொழுதுவிளை யாட்டயரச்
செய்வர் சிறுவர் தினந்தினமும்—மெய்யரவம்
முத்தமிடப் பெற்ற முதல்வராம் மெய்ஞ்ஞான
சித்தர்திற மன்றோ திறம்.

திறநன் குணர்ந்த திருமயிலை தன்னி
லுறைசண் முகக்குரிசி லோர்ந்து—முறையி
னளிவந்த சித்த ரணிமான் மியத்தை
வெளிவந்து சொன்னான் வியந்து.

---

# சிறப்புப்பாயிரம்.

திருக்குருகூர் என்னும் ஆழ்வார்திருநகரியில்
எஸ். பி. ஜி. ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீ. உப. வே.
அப்பு சடகோபராமானுஜாசாரியரவர்கள்
இயற்றியவை.

நேரிசையாசிரிப்பா.

திருவுறு செந்தமிழ் திகழ வருளிய
வொருமுனி கையி னுறுகமண் டலந்தரப்
போந்த புண்ணியப் பொருநை புனைந்த
சாந்து புன்னை தமாலம் வகுளம்
நாக நரந்த நாரி கேளம்
பூகம் வாழை பொலிமா வருக்கை
நிங்கரும் பேனை திகழுறு சோலை
மாங்குயில் வாய்மொழி மதுரமாய்ப் பாடும்
மைசேர் தவள மாடத் தும்பர்ப்
பைசே ரல்குற் பாவையர் சிலம்பொலி
யாவிசேர் துணையுறா வன்ன மயங்கும்
வாவிசேர் சங்கணி வான்றுறை சேர்ந்த
கருவூர்ச் சித்தனுங் கரிய குயலியும்
பருவரன் மூவரும் பரபத முற்ற
அகப்பொருள் பிரயோக மலங்காரங் கோவை
மிகுவட மொழியினு மேலுறு நூற்களும்
பொற்புற வியற்றிய புலவர் வாய்ந்த
நற்பலக் கலியின் றுயர்க ளிங்கச்
செங்கண்மா லுனை செறிபவக் கடதீர்
நங்கை சுதன்முத னன்மூவ ருவாஞ்
சித்தர்வாழ் குருகை சிறக்க வுதித்தோன்
வித்தகர் புகழும் விபுதர் தலைவன்
காளமே கம்மெனக் கவிமழை பொழிவோன்

வேறு.

சற்குருவின் தரிசனத்திற்குக் காவைநோக்கிச்செல்லுதல்.

அடையு நீணெறி வயினரு மறையொடா கமத்து
முடியினோங்கிய துணிபொருண் மொழியினிங் கபேதங்
கடைய னேனிருட் செறிவொழித் தெனைக்கடைக் கண்பார்த்
துடைய சற்குரு தேசிகன் வருவதென் றுணர்க்கின். (௪அ)

மெய்யன் பாளருக் கிரங்கிடும் பிரமமெய்ஞ் ஞானத்
துய்யன் சற்குரு மணியரு ளின்றுசூழ் பாசம்
பொய்யில் கேள்வியாற் கட்பது புணரியைப் புணைகொண்
டைய மின்றியே கடந்திலாத் தன்மையாங் கமையும். (௪௯)

இன்ன தன்மையா னம்மிறை யின்பவி டெய்த
மன்னு மாசையாற் பிணிப்புண்டு மறையொடா கமத்துச்
சென்னி மேல்விளை சின்மய ஞானதே சிகனை
இன்ன ருட்சொரு பனையென்று காண்பலென் றெய்தும். (௫௦)

சற்குரு இலாங்கலி வனத்தில் வீற்றிருத்தல்.

எய்தும் போதரு மறையொடா கமமுடி யிலங்குஞ்
சைவ நீறணி தேசிகன் றபோதனர் நால்வர்க்
கைதி னின்றுகல் லாலடி யமர்ந்ததே மான
மெய்தி கழ்ந்தவி லாங்கலி வனத்திடை மேவி. (௫௧)

என்று தான்வரு நம்மடித் தொண்டனென் றெண்ணி
யொன்று மன்பினை ளெங்கிவீற் றிருந்திட வொருபான்
மன்ற நான்மறை யோர்ந்தவே தியர்கண்மற் றொருபாற்
றுன்று மாகமச் சிர்விரித் துரைப்பவர் பலரே. (௫௨)

அன்று வாதவூ ரடிகளுக் கருள்பெருந் துறையி
னின்ற சீர்ப்பெருங் குருந்துறை நீழவி னிமலன்
சென்று வீற்றிருந் தருளிய தென்னவே திகழ்ந்தா
னென்று சீர்ப்பச்சை யலேவிடுத் தெழுந்தரு ளொருவன். (௫௩)



திருவருட்சகாயம்.

# திருக்குருகூர்ச் சித்தமான்மியம்.

## முற்பகுதி.

### காப்பு.

சித்திமத வேழத்தைத் திருவானைக் காவுறையுந் தேவ தேவை
முத்தநகை யகிலாண்ட வல்லிதனைச் செவ்வேற்கை முருக வேளைக்
கத்துநீ ருலகுபுகழ் காளகண்ட வயிரவரைக் கடைக்கூட் டற்கா
நத்துதிருக் குருகூர்வாழ் சித்தமான் மியங்கூற நாடு வாமால்.

### ஸ்ரீபுவநாம்பிகை.

பூவைநிறத் தொருமாலும் புண்டரிக மேயானும் போற்றிக் காணுக்
காவைவயி னகிலாண்டம் படைத்தாளாய்க் கன்னியாய்க் கவின மேவி
யாவயினம் மறைகிளத்து மரும்பொருளாஞ் சிவஞ்சத்தி யாக வந்தத்
தேவிபர சிவமாக வரும்புவனை யிருபாதஞ் சிந்தித் துய்வாம். (க)

### பதினெண்சித்தர்.

எண்வகைய யோகவுறுப் பெய்துநருக் களித்தென்று மிறுதி யின்றி
நன்சொருப நிலைகாட்டிப் படைத்தன்முத லைந்தொழிலு நடத்திக்
காட்டு, மொண்டவமா தனத்தவரைத் தேவிபுவ நாம்பிகைதன் னுரி
மையாலே, பண்வகுத்த சீர்மலியு மீரொன்பான் சித்தர்பதம் பரவி
வாழ்வாம். (உ)

நூல்வருங் காரணம்.

பணிகை தன்னடி யார்க்கெனப் பணித்தொரு களவு
துணிகை யாற்கந்த கிரியினை யகன்றுதோ மிகந்த
அணிகை வால்வளைக் குறத்தியை யருமணம் புணர்ந்த
தணிகை வேலவன் பணித்திட விதுசொலத் தக்கேன். (௩)

## நூல்.

### நாடு.

கார்பூத்த கடனிலயத் தொருமலையத் துவசன்செய் கவின்ற வத்தின்
பார்பூத்த சிற்றுதரத் துமைகயற்க ணம்மையாய்ப் பரிவி னண்டு
நீர்பூத்த சடையானுக் களித்துப்பின் மைந்தனுமே நெறிவ ழாமை
யேர்பூத்த செங்கோல்கைக் கொண்டாண்ட கௌரியன்ற னெழில்
[கொணாட்டில். (க)

### நகர்.

வாய்முத்த நனிவேட்டுக் குறிச்சியிடைச் சென்றுசிறு வள்ளியின்பந், தோய்முத்தன் றப்பனமர்ந் துயிர்க்கமல நிலையருளச் சூழ்ந்துபோற்றத், தாய்முத்த முறுவனுமை காந்திமதி யொருபாகந் தயங்கும் பெம்மான், வேய்முத்த னினிதுறையு நெல்லைநகர்க் கணுக்கமா மேவு மாலோ. (உ)

### ஊர்.

மாமறையிற் சாமமுமான் கலைதன்னி லாகமமு மனுவி லைந்தை
நாமவெழுத் தஞ்சுமிபத் தொருவெள்வா ரணமுநதி தன்னிற் கங்கை
யேமநிதி போன்றுமணி மாடநிறை மேலைப்பா ளயத்து நாளுங்
காமருவே ளான்மரபின் முத்துசுவா மிப்பெரியோன் கனிவி னம்பா.

### தந்தையார் சாஸ்திர ஆராய்ச்சி.

முற்செய்தவப் பயனுநம் மெய்கண்ட சந்தான மொழியா நிற்கும்
விச்சைதரு சித்தாந்த சாத்திரங்க ணனியோர்ந்து விளம்பு மின்முன்
னிச்சயமா நிலைநின்று சதுரகிரி தனையெய்தி நெடுகா லங்கோர்
சிற்சுகமே வடிவாய சித்தரைக்கண் டனுபூதித் திறம்பெற் றுரால்.

### தந்தையார் முதன்மணம்.

இன்னவா றெழுகுநா ளாசிரிய ஞானியின னின்ன நல்லோர் தன்னிகரில் வளஞ்சாலும் வீரரா கவபுரத்திற் சாலி யன்ன மின்னெனுநன் னிடையொருபைங் கிளியென்னு மடவரலை விதியி வேட்டங், கன்னதா னந்தனையே ரன்னதா னம்பலவு மாற்றின் னாரால். (௫)

கரும்பனைய மொழியொருபைங் கிளியொடுசின் னாளிவர்தாங் காதல் பற்றி, வரும்பொழுது கணவன்முன் னிறப்பதே நலமென்னக் கருது மாதர், விரும்புநெறிக் கியையவவ டன்முன்னை வினைநலத்தான் விமலை யெல்லாந், தருங்கருணை வல்லியடித் தாமரையினிழல்புக்காள் சதுரின் மாதோ. (௬)

### திருக்குருகூர்.

இந்நாடு செய்தவமாச் சங்கமொரு மூன்றனுடொன் றினிதுவைக முன்னாடு பருந்தமிழ்நா வலர்முறையே செந்தமிழ்மா மொழிம டந்தை, தன்னாடு சீர்த்திவளர்த் தன்றியொரா யிரமறையுந் தமிழ தாகப், பொன்னாடு மருமத்தோ னெனும்பொலிந்து நின்றபிரான் பொருந்து மூதூர். (௭)

கண்டாரும் மொழிமடவார் நீராட விழிக்கயலி னீழல் பாய வொண்டாரு மாவிடைவாழ் குரண்டமொரு கயலென்ன வுன்னிக் குத்துந், தண்டாத புனற்பொய்கை பலசூழ்ந்து வான்றவழுங் கடங் காப் பல்ல, கொண்டாடு மணிமாடம் பலவுடுத்த தொருகுருகூர்க் கோதில் வைப்பில். (௮)

### மாதாமகர்.

பரம்பரையா வாயுர்வே தியரெனச்சொல் பான்மையினாற் பலரும் போற்றும், வரம்பில்புக ழினையபண் டிதரெனுமுத் துச்சாமி வள் ளல் வாழ்க்கை, நிரம்பவருந் தவநடத்துந் தேத்தின்று மொடுக்க மென நிலவா நிற்கு, மரந்தைதவி ராதிநா தப்பெருமாள் சந்நிதிநே ரறியா ரியாரே. (௯)

அத்தகுசீ ரொடுக்கத்தே நின்றினிய பண்டிதரு மருந்த வத்தைச் சித்தமகிழ்ந் தேபுரிய வெழிற்சித்தர் முனிவர்செப்புங் கலைக ளோர் ந்து, சுத்தசிவா கமமுரைத்த படியறிந்தே யனமடியார் துய்க்க நாளுங், கைத்தெல்லாஞ் சிந்தியரும் புண்ணியத்தைக் கைக்கொண் டார் கடைப்பிடித்தே. (௧௦)

### தவத்தின்பயன்.

சங்கரமாமூர்த்தியையம்பட்டர்பெருந்தவச்சிற்றம்பலமெய்ஞ்ஞாநி
யங்கனவா யவதூத வடிகளருங் குணங்குடியா னமலஞான
மங்களமா மாத்திலாக்கோ லாரெழின்மா ராசகுரு சாமி யாதி
துங்கசிவ யோகரமு தருந்துபல னோர்மகவாய்த் தோன்றிற் றம்மா.

### மகவின்பெயர்.

அறந்தயங்கு மம்மகப்பே ரான்ற சிதம் பரவடிவா மம்மை யென்னு
மறந்தயங்கு கண்ணுளை நாளொருமே னியும்பொழுதோர் வண்ண
மாக, விறந்தவருந் தவக்குரிசின் முத்துசுவாமிப் பெரியார் மிகவ
ளர்த்துச், சிறந்தவநு பூதியெய்துந் திறல்வாய்ந்தோர்க் களிப்பலெ
னச் சிந்தித்தாரால். (கஉ)

### தந்தையார் இரண்டாந் திருமணம்.

அன்னவர்பாத் திரமறிந்தே யையமிட வேண்டுமென்றிங் கான்றோர்
கூறும், பொன்னனைய மொழிக்கிணங்கப் பொருவில்செந்திற் பதி
வாழும் புனித மூர்த்தி, தன்னனிகர் சேவடியா லென்மலமோ சனஞ்
செய்குகன் றனத ருட்கே, மன்னுமிருக் கையதாகப் பொருந்துதன்
பே ருடையானா வருவித் தன்றே. (கங)

தெய்வமொடு காந்தருவம் பைசாச மாரிடமாச் செறியு மின்ன
மெய்வகைய மணமெட்டிற் றெய்வதமா மணம்புரிவித் திருந்த பின்
னர்ச், செய்வகையெல் லாமுருகன் செயலென்னு மருகனையே தெரி
ந்து நாடி, யுய்வகைவேண் டுவநல்கி மகளையுந்தன் னில்லினிறீஇ
யோங்கினரால். (கச)

### மகவின்றி வருந்தலும் வழிபாடும்.

இனையரிரு வருமில்லத் தன்றிலென வின்பம்விளைந் திருக்கு ஞான்று
மனைமாட்சி தனக்கொருமக் கட்பேறே கலனென்ன வகுத்த நல்லோர்
தனிமொழிக்கிங் கிலக்கியமா வருத்தமுற்றீஇ யவர்தமனக் கினிய
வைவேற், றினகரனைச் செந்திலடைந் தரியபல கட்டளைகள் செறி
வித் திட்டார். (கரு)

### முருகக்கடவுள்பேரிற் பாமாலை பாடல்

இன்னபடி செய்ததன்றிக் கந்தனிடத் தன்பினு ளிருங்கன் னெஞ்ச
நன்னயமா நொந்துகரைந் துருகிமுரு காகுமரா நம்பன் செந்தி
யன்னவிழி வருங்குகா வெனநவின்று கந்தசட்டி யாதிச் செய்யுட்
கன்னலமு துங்கைப்பப் பாடியா டிப்பணியக் கந்த னுரும். (கசு)

கனவின்காட்சி.

செயந்தனருங் கனவினில்யான் குமர னுந்தை வேண்டலினுற் செந் திற் போந்தே, னயந்தகுமிந் நகர்வந்து நமைக்காப்ப நாடியொரு நல்ல தூது, வியந்தபுகழ்ச் சூரிடையே செலுத்தினு மவனும்மை விழைந்து காண்பான், சயந்தனையெய் திக்கடையி னும்முலகந் தரு வமெனச் சாற்று மாபோல். (கஎ)

தேவரொடு மாமுனிவர் கனவினுங்காண் பரியபிரான் சேவ லங்கை மேவுநெடுங் கேதனனம் முத்துசுவா மிக்குரிசில் விரும்பி யாற்றும் பூவமரர் தமக்கன்ன தானமொரு சகத்திரமே புரிந்து மெந்தை மாவமருங் குறிநினைந்தே யுபவாச மிருத்தலையு மனத்துட் கொண்டு

கனவிடையி லெழுந்தருளி யஞ்சேனந் தமையடைந்தாய் களிகூ ரென்று, முனிவருஞ்சிற் சுகமளிக்கும் பெருவாழ்வை நினக்களிக்கு மொரும கப்பே, றினலறத்தந் தனமவனம் மடித்தொண்ட னெம்ம லையத் திலஞ்சி மேய, முனைவனெனு மன்னுன்மற் றவன்சீர்த்தி யின் னதென மொழிந்து மாலோ. (கக)

முருகக்கடவுள் கனவில் அவதார மகிமைகூறல்.

சுக்கிரநன் னுடியொடு நந்தியெழிற் கமலமுனி சொல்லுஞ் சீர்த்தி தொக்கவொரு குறுமுனிக்கு நாங்கூறுஞ் சோதிடநா றுலைவி லோனை, மிக்கபெரு நால்முறு வனைத்துமவன் பிறப்பினையே விய ந்து கூறு, மிக்கனைக்கா னம்மருளி லுதிப்பன்முற் றவப்பேற்றி னினிது மாதோ. (உ௦)

வேறு.

உத்தம ரேகாலக்ஷணம்.

சங்காழி மறுமாலை யொடுமச்ச ரேகைதனை
யிங்கான பதமார்பு வெங்கென்ப முன்னுய
மங்காத பத்தடையா ளங்களொடும் வருவனெனப்
பொங்குதிரு வருட்கருணை பூரித்துப் பினும்புகலும். உக

நாமம்.

குருவருள்பெற் றவனுலகிற் கொடும்பாச மிரித்தவருக்
கரியசிவ ஞானுந பவமருளு மதனுனும்
பெருவலிய வுடற்பிணியைப் பேர்க்குமருந் திறலானு
மொருபெரிய ஞானசித்த னென்றுரைக்கப் வோங்குமால். (உஉ)

அவதாரநாள்.

சகவாண்டா யிரநாற்பான் மூன்றுபிர பவசாற்றுந்
தகைபெறுமுன் னாண்டுதனுர் மதியினில்யாந் தழைத்திடுஞ்சீர்
மிருகசீர்ஷ கத்திருநாண் மிதுனவோ ரையின் யார்க்குஞ்
சுகநிலைகாட் டத்தக்கான் சுதன்றோன்று மெனக்கழற. (உங)

திருக்குருகூர்வாசம்

ஆங்கதனர்த் தவரன்றே யாயிரமா மறையெல்லா
மீங்கெவருந் தாமோத விருந்தமிழ்மா மறையுரைத்த
தேங்கமழ்தண் டார்மாறன் றிருவவதா ரஞ்செய்த
பாங்குபெறும் பெரும்பதிக்குப் பையமனையோ டடைந்தார். (உச)

அடைந்தொருசின் னாள்கழிய வவர்மனைவி கருப்பமுற
மிடைந்தநுதல் வியர்ப்பெய்த வியன்முகமா மதியன்றித்
தொடர்ந்தவுடன் முழுதுமவ்வா றேதோன்ற வயர்வெய்தி
யடர்ந்தவூண் முதலவெறுத் தாண்டிருந்தா ளமர்ந்தன்றே. (உரு)

கிரகநிலையும், திருவவதாரமும்.

இன்னவா றிரைந்து மதிகழிய வெழிற்கர்தன்
றன்னருளா னேந்தின்மதி சனிபுதனு றினிலொன்பா
னென்னுமிடத் துயர்கேது பொன்னேழிற் சேய்வெள்ளி
மன்னிரவி கிரகநிலை யெனயாரும் வழுத்திடவே. (உசு)

வலம்புரிச்சங் கதுவினு மாமுத்த மெனச்செந்திற்
குலம்புரிமே லோர்வழுத்துங் குமரனரு ளாலன்று
நலம்பெறுநங் குமரகுரு பராமுனிவ னாட்டுவரும்
பொலம்புரிசீர் போன்றவர்பாற் புதல்வனுத யஞ்செய்தான். (உஎ)

அற்றைஞான் றலமந்தே யாழியிடை மந்தரயாம்
பொற்றைநிறீஇ யுரகநெடுந் தாம்பியாத்துப் புலவரொடு
மற்றையவு ணருங்கடைய மருந்துதோன் றிடவமரர்
பெற்றமகிழ் போன்மைந்தர் பெற்றவுடன் பெற்றனரால். (உஅ)

தானதருமங்கள்புரிதல்.

பெற்றிறைவ னாலயக்குப் பெருவிழா வயர்வித்துக்
கற்றமறை வேதியர்க்கு மாதுலர்க்குங் கனதான
முற்றுமறை சொற்றபடி முன்னடத்தி யாங்கெவரும்
பெற்றபடி யானுரைக்கும் பெற்றியது வன்றன்றே. (உகூ)

### மகராஜயோகிவருகையும் நாமகரணமும்.

என்றுமவன் விற்றிருக்கு மெழின்மகரா சப்பெயர்கொ
டுன்றுதவத் தோர்சித்தர் தோன்றியதூ கித்துணர்ந்து
நன்றிவர்தோற் றியவாறு மிவர்ஞான சித்தரென
வொன்றுதன்முற் பேறென்றே யொருங்கான்றோர் நூல்பகரும்.

### சித்தர் லக்ஷணங்கூறுநூல்கள்.

அன்னநூ லெவையென்னி னகத்தியனா ரளித்தருளு
மன்னுபெருங் காவியத்தும் வயங்கியதிக் கைவிதிமற்
றுன்னுகே சரிகுருநூ லோங்கியமுற் றவக்குறையார்
நன்னரிலக் கணமனைத்து நவில்கிற்குங் காண்டியால். (௩௧)

### மகவளர்த்தல்.

என்றுகுணத் தந்தையிட மியம்பிடக்கேட் டுளமகிழ்ந்து
கொன்றைசடை மிலைந்தபிரான் குரைகழல்போற் றிடுந்தவத்தோர்
நன்றுமகிழ்ந் தெதிர்பார்த்த நன்மையெலா மாவவென
வென்றிமிகுஞ் சித்தர்தமை விருப்பத்தின் வளர்த்தாரால். (௩௨)

### சித்தர்க்குவருமூன்றமாண்டுத்தந்தும் அதனிவிர்த்தியும் ஒரு சிவயோகியாருளியது.

மூவாண்டு வரவிவர்க்கு முன்னைவினை யானரவான்
மேவாண்ட வினையெய்தும் விடத்தான்மற் றதுதிரும்
நாவாண்ட சுருதிக்கு நம்பனரு ளாலென்றோர்
சேவாண்ட பெருமானோர் சிவயோகி யாரொருவர். (௩௩)

### அரசடியில் அரவமுத்தமிடல்.

ஆங்கனமே யந்நகரி லாண்டபெரு மாள்துறையிற்
றிங்ககற்று மரசின்பாற் சேடனிக ரோரரவ
மோங்கிவள ருவதுணர்ந்து மூவந்துசித்தர் தமைக்கொணர்ந்து
பாங்குறவைத் தேகலுமே பரிந்துமுத்த மிட்டதுவே. (௩௪)

### முத்தானந்தப் பெயர் புனைதல்.

அதுகண்ட பெற்றோரு மற்றோரு மதிசயித்தார்
விதுவனபா முகச்சிறுவர் விளங்குமுத்தா னந்தனெனச்
சதுரினொரு புதுப்பெயருந் தாங்கினார் சகமுள்ளா
ரிதுநிகழ்ந்த பரிசுணர்ந்தே யிறைவனருள் பாடினரால். (௩௫)

அரவமுத்த மிட்டதனு லருட்பெரியார் பணித்தமையாற்
றிரைகடற்செந் திற்குமரன் சித்தனிவ னென்றமையாற்
கருதுசித்தர் நாலுரைக்குங் காரணத்தாற் கல்விபயில்
பருவமெல்லா மழகுசெய்து பரிவொடுபார்த் திருந்தனரே. (௩௬)

ஓதாதுணர்தலும் அற்புத நிகழ்ச்சியும்.

இன்னவைமற் றிவர்கல்வி யில்லாமை மடந்தையர்போ
னன்னயமா வளர்த்துவர நாடுமுன்னைத் தவக்குறையான்
மன்னுகல்வி முதலான மகத்துவங்கள் பற்பலவு
மிந்நிலஞ்செய் புண்ணியத்தா லியற்கையா னெய்தினவே. (௩௭)

செந்திலடைந்து முருகனருட்பா முதலிய பாடல்.

பத்தாண்டி னடந்தகதை பரிவாக வெடுத்துரைப்பாஞ்
சத்தான கல்வியெலாந் தாமோதா மேயுணர்ந்தே
யத்தார கன்முன்னு மவுணர்தமை யட்டபிரான்
வித்தார மிகவோங்கும் வியன்செந்திற் பதியடைந்தே. (௩௮)

மன்னுசை பெண்ணென்ப மரபினெறுத் தமரேசன்
றன்னார்பூங் கழற்கன்பே சாருமடி யார்பரவு
மன்னுவெற் கருளென்ன வறுமுகவன் றிருவருளாற்
பன்னுரு முருகனருட் பாவெனுநூல் பாடினரே. (௩௯)

ஞானதேசிகனென்னும் நாமம் பெறுதல்.

பரிவொடுமெய்ப் பத்திஞா னம்பயக்கு மெனப்பகரும்
பொருவருஞ்சீர் ஞானபாற் கரோதயமென் றொருநாலுந்
தரணிவயி னல்கியது பூதிவாய்ந் திடுதகவா
னொருஞான தேசிகனென் றுலகறிய வயர்ந்தனரால். (௪0)

சற்குருவைநாடித் திருக்குற்றாலஞ் சார்தல்.

இன்னபடி யுலகுரைக்கு மினியாரு மென்ஞான்று
மன்னுசுக நிலையுணர்த்து மாஞான குருத்தேட்ட
முன்னியருந் தமிழ்நாட்டு மூதூர்கள் பலகடந்து
சென்னிலவு பொதிகையைநேர் திரிகூட மலைசேர்ந்தார். (௪௧)

## திருக்குற்றால மலைச்சிறப்பு.

அன்னகிரி செண்பகா டவியருந்தே னருவியொடு
தன்னிகரில் பொங்குமா கடறருசித் திரகங்கை
யென்னுமிவை யேயன்றி யெழிற்காய சித்தியினே
டுன்னுதிரி காலவுணர்ச் சியையுதவுந் தருவுமுள. (௪௨)

சோதிவிருக் கம்மெழிலா ருரோமவிருக் கஞ்சொல்லு
மேதியொடு சாயாவி ருக்கஞ்சல் லியகரணி
யோதுசௌபாக் கியகரணி யுயர்சஞ்சி வியகரணி
தீதிலாச் சந்தான கரணிமுத லனசெறியும். (௪௩)

மற்றும்ருத சஞ்சிவி வயங்கியகந் தகமடுவு
முற்றிடுரு தக்கினை முயர்ந்தகதிர்க் காந்தமொடு
சொற்றமதிக் காந்தம்யக் காந்தஞ்சொல் லியபலவும்
பெற்றிமிகுங் கருநெல்லி பேணியவெண் சாரையுள. (௪௪)

## ஆச்சிரமநிலை.

அத்தகுமால் வரையிடைப்பல் குகைகளுள வாங்கென்றுஞ்
சித்தர்சாத் தியரனந்தர் செறிந்திடுவர் செப்புமந்த
வித்தகவெற் பிடையேதே னருவியென விளம்புமிடத்
துற்றகுகை யிற்சித்த ருறைந்துமர வுரியுடுத்து. (௪௫)

கந்தமூ லம்மருந்திக் கடலையருந் தியமுனிவன்
கந்தமலர்ப் பதம்பணிந்து கருத்திருத்தி வதியுங்காற்
கந்தனடிப் பதமறவாக் கலைமுனிவர்க் ககவலொடுஞ்
சந்தமலி சித்தர்கள்பா மாலைபந்தா தியுஞ்சாத்த. (௪௬)

## சித்தநாதப்பெயர் புனைதலும் அகஸ்தியர் ஆணைகோடலும்.

அதுபொழுதாங் குள்ளவருந் தவர்சித்த நாதரெனக்
கதுமெனவே யுரைசெய்யக் கலயமுனி வரனருளா
னிநிவளஞ்சா லும்மானைக் காவைநீ யடைதியென்ன
மதிவளத்தா லீயாரு மரபினு னடந்தனரால். (௪௭)

முன்னு ளினது நகர்செலென மொழிந்த பொழுதே யுரைத்தநெறி
தன்னை மறந்தாய் தாயுரையுந் தடுத்தாய் தந்தை தனக்குரைத்த
மன்னு முறுதி யும்மறந்தாய் மைந்தா சித்த மார்க்கமதுள்
ளுன்னு நிலையு நம்மரபுக் கொத்த விதமு மோர்ந்திலனீ. (ருOஉ)

ஆதலாலென் சொன்மறுத்தா யன்று திருவள் ளுவமூர்த்தி
நீத முளவா சுகியுடனே நின்ற கருத்துங் காயகற்பம்
பேத மிலாது முடித்திடற்குப் பேணு மேலே லச்சிங்க
நாத ரெமக்கன் றருளியது நாமிங் குரைக்கு நன்மையதே. (ருOங)

புனிதர் முனிவ ரிருடியெலாம் பொருந்துஞ் சித்தித் திறம்வருமட்
டினிதாக் கிரகத் தாச்சிரமத் திருந்தார் யாமங் ஙனமாய்ப்பின்
றனியா யிந்த வரையின்பாற் சார்ந்தோ நிளக்குந் தக்கதெனக்
கனிவி னுரைத்தோ மற்றவைபின் கழறு வோமென் றருளவவர். ()

திருவுள்ளப்படியே சித்தர் செய்வேன் என்பது.

அடிக ளுணர்த்தும் படிவிடுத்த தறியேன் மறுபத் திரிகைதனிற்
கொடிய வுரையாற் றேவரருள் கொண்டே வரைந்த குறிப்பறிந்தர்
நொடியிற் றிருமுன் வந்தனனுந் நோக்க மதுபோற் செய்வேனிப்
படிமீ தெனெக்கை விடாதருளல் பார மெனவே விடை பகர்ந்தார். ()

வேறு

சித்தர் திருவாணைக்காவடைந்தது.

இவ்வண்ணம் பச்சைமலைச் சித்தபெரு மானருளா லிணைவி லாராய்
மெய்வண்ணத் தமிழ்மாலை பலவியற்றித் திரும்பும்வழி மிகவு மன்பா
அய்வண்ணந் துரைச்சாமிக் குரிசிறமக் குரைத்தவணம் பிரம்ப
லூர்க்குட், கைவண்ண மாகவந்து நோயுடையோன் றனைக்கூட்டிக்
[காவை வந்தார். (ருOசு)

திருவரங்கத் திருமாலை செய்தல்.

வந்துசித்த சபைதனிலே வதிந்தசில நாட்குளரு மருந்தே யாதி
முந்துமணி மந்திரத்தாற் றீராநோய் தீர்த்தருளு முனிவர் முன்னர்ப்
பைந்துளவத் தோனருளைப் பருகுசட கோபரைப்போற் பரிவினீ
ருஞ், சிந்தைகளி கூர்தருமார் திருவரங்க மாலைசெய்மின் னென்றார்
[சில்லோர். (ருOஎ)

காணுமற்கண்ட களிப்பு.

இன்ன வாறவ னினிதுவிற் றிருந்திட வெங்கோன்
றன்னை யேயறி யாதிரு கரமலர் தனது
சென்னி மீதினிற் செறிதர விழிப்புன றுளிப்பத்
தன்னி ரண்டுகா லோய்ந்திடத் தானனி நடந்தான். (௫௪)

நடந்த நாயகன் றன்னையே காண்கையி னடவை
யிடந்தனிற் செல்வோர் பித்துடை யானென வேசக்
கடந்து தான்மல பாகமெய் திடக்கவி நாலாத்
தொடர்ந்த சத்தியே பதிதரத் துதிபல பாடி. (௫௫)

சென்னி யிற்சுமை தாங்கிய வொருவனைத் தினித்த
வன்ன தாஞ்சுமை யிழிந்தவா றும்பிணி தாக்க
முன்ன லைந்திடு மொருவனை மொய்த்தவப் பிணிபோய்
நன்ன லச்சுக முறனுமொத் துறுஞ்சித்த நாதன். (௫௬)

என்னை யேயெனைக் காண்புழி யிருஞ்சுமை நீத்தான்
றன்னை யொப்பவு மழலிடு மெழுகெனத் தானே
நின்று ருக்கிடுந் தன்மையு நெறிமுறை நோக்கி
னின்று காண்பனற் சத்குரு தரிசன மென்று. (௫௭)

பாண்டி நாட்டினு னிலமொரைந் திணைபரிந் தகன்றிட்
டீண்டு பொன்னிநாட் டிருந்தளி பலகடந் திறையோ
னாண்டு செல்கெனக் குண்டிகை யோடுசென் றடைந்த
நீண்ட மாமுனி கரகநீர்க் காவிரி கடந்தான். (௫௮)

சித்தநாதர் காவையை யடைந்தது.

காண்ட கும்பர னொருமடந் தைக்குளங் களித்து
வேண்டத் தாயுருக் கொண்டவன் மிகுதுயர் தவிர்த்த
நீண்ட வெஞ்சிலம் பகன்றகி லாண்டநே ரிழையோ
டாண்ட வன்கனி வோடமர் காவையை யடைந்தான். (௫௯)

குருப ரன்றனைக் காண்பதற் குளங்குழை கிற்போர்
தரும மால்விடைச் சங்கரன் றழற்கரங் கொண்டோ
னரவ ணிந்தவ னம்பிகை பாகத்தா னமரும்
திருவ மர்ந்தமேல் வாயிலின் கோபுரஞ் சேர்ந்து. (௬௦)

கோபு ரந்தனைப் பணிந்துளே நுழைந்துகூத் தாடி
மாப ரன்புகழ் பாடிநின் றருமறை வடித்த
தாப தக்குலச் சிரியர் தாம்புடை வரவே
நீப நற்றொடை யோனிகர் குருமணி நிலையே. (௬௧)

சந்தரு தரிசனம்.

மேவி யன்னவன் வந்திலாங் கலிவியன் பொழிலி
லாவ லான்வட மேற்றிசை யமர்ந்தமை கண்டு
தேவ தேவசிற் பரபர சிவவொரு நீயிந்
நாவ னீழல்விட் டிவணடைந் தமையெவ னென்னா. (௬௨)

மலய வெற்பினீ வழங்கிய வொருமணி வார்த்தை
நிலைமை மாறிடா வணமிவ் ணிகுறித் தெய்துந்
தலைமை சான்றமெய்த் தகைமையை யாதெனப்பேன் றயாவின்
மலவி மோசனம் புரிந்திடத் தோன்றினை மன்னோ. (௬௩)

எனவு ரைத்தவ னிணையடி முடிமிசைச் சூடிக்
கனவின் காட்சிபோல் வினைக்கரி சனைத்தும்வே ருக
வனக வெற்கரு ளென்றருந் துதிபல கூற
மனம கிழ்ந்தவன் மலர்முக நோக்கியே மாதோ. (௬௪)

சந்தரு அநுஞதல்.

மைந்த கேளுனைச் செந்திலான் வயங்குமுற் றவத்து
வந்தி டுங்குறை யாலொரு குழவியா வழங்க
வந்தி னம்மலை யாசலத் தருள்பதி வித்திட்
டிந்த நற்பதி யிற்கரு ணைக்கிலக் கானாய். (௬௫)

வேறு.

அணிமாவாதித்தன்மையும், பதிவிளக்கமும்.

அன்றுகல்லா னையருந்து மாறுகரும் பளித்துப்பின் னங்கே தோன்றி
நின்றவினை யாரைமுதி யாராக முதியாரை நெறிமை யாகத்
துன்றுமினை யாராகத் தோகையரா டவராகத் தொடுநீர் வைப்பிற்
பின்றுமா டவரையே பிரசமொழிப் பேதையராப் பிறங்கச் செய்த

இன்னவிளை யாடலெலாம் விளையாட்டுச் சித்தனையே யின்னே கொண்டு, பொன்னெனச்செம் பிளையேவே திகைபிட்டுச் செய்வதுபோற் பொய்திர் நோக்கான், மன்னுமொழி யாற்பரிசத் தால்வயங்கும் பாவனையா லாக மத்தா, லுன்னுமௌத் திரியினுற் சாலநினை யுணர்த்திநா மாக்கிக் கொள்வேம். (௬எ)

திருவருட்பேறு.

அஞ்சேலென் மகனேயென் றடியிணையை முடிசூட்டி யன்று கல்லால்
விஞ்சியநீ ழலினல்வர்க் குணர்த்தியவவ் வரியநிலை விளக்கிக் காட்டித்
துஞ்சிடக்கற் பதுகல்வி யேயன்று துஞ்சாதிங் கிருக்குங் கல்வி
யின்சுகா தனத்திருந்து காண்டியெனப் பின்னுமவ னிரங்கிக் கூறும்.

வானிடையே பிறக்க மண்ணி லேறுழைய வானவரா னவர்வணங்க, வூனுடம்பிற் புகுகவுளத் தொருவர்நினைத் தமையுறைப்ப வுடம்பை நீத்துப், போனவுயிர் தனையெழுப்ப வின்னனபல் சித்தியெலாம் புரிந்திட் டாலு, ஞானசா தகன்றனடிப் பொடியொவ்வா வனையவெலா நன்கு தேர்தி. (௬௯)

ஆதலின னுமிருக்கும் பச்சைமலை யடைந்துசிவா றுபவ ஞான
போதநிலை பாஞ்சித்தியெய் துவையென் றேமுனநாட் பொருவில் செங்
லாதிபனு நினதங்கத் துறுதருமா றடையாள மருளா நின்றான் [தி,
பேதமறத் தேர்நிசிறி திண்டுமுத்தி நிலையதன்சீர் பேசு வாமால்.

வேறு.

தசகாரியம்.

தனைமுதன்முப் பானுறு காண்பதுதத் துவரூபந்
தனைமுதல மலஞ்சடமென் பதுவுந்தத் துவக்காட்சி
தனைமுதல வகையினிலா தேசசிசே கரனருளா
லொருவல்சுத்தி யாய்க்கருது முயர்ந்திடுமா கமமனைத்தும். (எக)

இருணீங்கி யொருஞானங் காண்டலான் மாவடிவ
மொருநீநின் செயலொன்றின் றியுநிற்ற றரிசனமா
மருவுநின் னியல்கேட்டு மன்னுபொரு ளிற்றேன்றுப்
பரிசான்ம சுத்தியெனப் பகருமிறை யாகமமே. (எஉ)

எவ்வுருவு மொருதானு யெழிற்பரைதன் வடிவாகிக்
கவ்வுமலத் தான்மாவைக் கருதியொடுக் கியுமாக்கிச்
செவ்வையாய் மலபாகஞ் செறியுமள வினிற்சத்தி
யவ்வயினிற் பதிவிப்ப தறிவதுகாண் சிவரூபம். (எங)

நான்பிரம மெனுஞானத் தழுந்தாது நாடுங்கான்
மான்மழுவைக் கரந்துவந்த வள்ளலரு ளென்றுணர்ந்து
மேன்முறையிற் பரானந்த மேவருதல் சிவனுண்மை
யானதரி சனமென்றே யாகமமெல் லாங்கறையும். (எச)

வேறு.

தனுகரணு திகளினறம் விகாரமென யாவுந் தான்கண்டங் குயிர்கண்டு தன்னையுணர் விக்கும், நினைவரிய வருள்கண்டங் கிறையுண்மை கண்டு நின்றவனைத் தைபுமதனு னேர்தரவுண் ணேக்கிப்-பினையுமிறை செய்வதுவே நினைப்பதுவே யுணர்வு பெரிதுபுசிப் பதுமதுவே யொருதானே யாகி, யினியிவணைப் பொருளுமசை வின்றெனவப் பொருளோடிசைதல்சிவ யோகமென விசைத்திடுமா கமமே. (எரு)

பாதகஞ்செய் யினுங்கொலையே கட்களவு சாலப் பயின்றிடினு நெறியல்லா நெறியொழுகி வரினுஞ், சாதிகுலந் தவறினுமெத் தவறுகளுற்றிடினுந் தனக்காமோர் செயலற்றுத் தானதுவாய் நிற்கிற்-பேதமறவவனுடலோ டுயிராகி யுண்டு பின்னுறங்கி நடந்துசா னுபோகம் புசித்து, நாதனிவன் றனையென்றுந் தானுக்கு மதுவே நாடுசிவ போகமென நவின்றிடுமா கமமே. (எசு)

வேறு.

சிவானந்தச்செம்பொருளுரைத்தல்.

இன்ன வாறுநல் லாகம மியம்பிடு கிற்கு
முன்னு சிர்த்தச காரிய மெனைத்தையு மொழிந்து
தன்னை யவ்விறை யடிநிழ லிற்றக நிறுத்து
மன்ன நன்னிலை யாவதுங் காட்டிப்பின் னறையும். (எஎ)

குருமூர்த்தியுடன் சித்தநாதரும் பச்சைமலைக்கெழுந்தருளல்.

வேத வாகம மெய்ந்நிலை யாவது ஞான
போத கர்க்குறு மார்க்கமு மிதுவெனப் புகன்று
சாத னஞ்செயத் தன்னுடன் பச்சையா மலைவாழ்
நாத னும்மறைத் திருப்பிடம் புக்கன னலத்தால். (எஅ)

குருதலவாசம்.

இன்ன தேசிகர்க் கேழிரண் டகவையா மிவரும்
அன்ன சற்குரு தேசிக னருள்வழி நின்று
சொன்ன நன்னிலை தன்னனு பவந்தனிற் றோய
மன்னு வற்சர மதன்பினோ ராண்டென வயங்கும். (௭௯)

ஸ்ரீபுவனும்பிகை யாகாரம்பம்.

இனைய தேசிக ரியம்பிய திருவரு ணெறியே
மனமெய் வாக்கற்று மன்னுமெய்ப் பூரண வடிவாய்
யினறெ றுத்திவ னின்றுழி யென்னையோ வெனையா
ளனையு மன்பொடு நனவினிற் சுழுத்தியாங் குணர்ந்து. (௮௦)

சென்று சித்தர்கள் முனிவர்க டிறத்தொரு நம்மை
யொன்ற வேகினைத் துயர்தரு வேள்விசெய் தனரான்
மன்ற வேயதற் கியாமிறை யாதலின் மகிழ்ந்து
நன்று வேள்வியைப் புரியத னியலுநன் கின்னே. (௮௧)

குரவ னோதுவ னென்றருள் குறிப்பினை யறிந்து
திருவு ளத்தொடு மருகிருந் திடும்பெருங் கருணை
யுருவி னனையன் பொடுபணிந் தேத்திட வவனு
முருகு நெஞ்சினோ டினிவரு வனவெலா முரைக்கும். (௮௨)

குருவாணையால் மலை அகன்றது.

நீக டந்துசென் றினியுன திருக்கையை நேடித்
தான டைந்துகண் டங்குள செய்தியைத் தானே
மேன லக்கவே யுணர்குவை யென்றனன் விழைவா
னன சற்குரு வாணையி னடங்கிநின் றகன்றார். (௮௩)

மஞ்ச ளாவிய பொழிலிடை வானவ ருந்தாஞ்
செஞ்ச டாடவிச் சிவபரம் பொருளெனச் சிவனும்
விஞ்சு மாமருந் துதவிடுங் குகைபல மேவு
தஞ்ச மேழிரு கரணிசூழ் தருபச்சை மலையே. (௮௪)

அனைய மால்வரை தன்னையே யரிதினி னகன்று
நினையு மாத்திரத் தேபல காவத நெறிச்சென்
றினையு மாருயிர்ப் பாவமோ சனமினி தாற்றுந்
தனையொ வாதசிர்க் காவிரி நதிதனைத் தாண்டி. (௮௫)

தாயுந் தந்தையு மில்லவ னுந்தனி முதல்வன்
ருயெ னுந்தரத் தொருவந்தி யாளெனத் தானே
யேயென் மாத்திரை மண்சுமந் தடிபிரம் பாலேய்
தாய சீர்மலி வைகையா நதியகன் றதற்பின். (அரு)

வேழ வெண்மருப் பகிலொடு வெறியசந் தனத்துக்
காழி ருந்துணி திரையெனுங் கரத்தினன் வீசி
யூழி னத்திரு நாட்டிரு மருங்குசென் றுலாவும்
பூழி யர்க்கொரு பேறெனும் பொருநைநன் னதியே. (அஎ)

சிந்துபூந்துறை சேர்தல்.

சிறிய வாடியிற் பெரியதோர் பொருள்செறித் தாங்குக்
குறிய தோர்வடி வத்தரும் பெருந்தவங் குலவுங்
குறிய மாமுனி யிடக்கைகொள் கமண்டலங் குலவு
நறிய நீர்ப்பொரு நைச்சிந்து பூந்துறை நன்னி. (அஅ)

சித்தநாதனைக்காணுது பெற்றோர் வருந்தல்.

செல்லும் வேலையிற் றிருக்குரு கூரிடத் திருந்து
நல்ல மைந்தனை நீங்கிட வுளநனி நைந்து
கல்லு மிங்குரு கும்படி கண்டன மென்னே
சொல்ல லாவதென் றேபெற்றோர் சோம்பினர் மன்றோ. (அகூ)

தங்கையார் பிறப்பு.

சோம்பி டாதநஞ் சித்தனுர் தோன்றிய பின்னர்க்
காம்ப ணைந்ததோட் கனிமொழிக் கயல்விழி யிடைநூற்
றேம்ப றந்தபூங் குழலொரு மானெனச் செப்பத்
தாம்ப யந்தனர் பெண்மக வினைத்தர ணியின்மேல். (கூ0)

சிதம்ப ரப்பெய ரன்னையார் நல்கிடத் தேவர்
பதம்ப ரிந்துபூ சித்தல கிடவரும் பாவை
யிதம்பெ றப்பலர்க் கின்னருள் சுரந்திடும் வைவேற்
கதம்ப ரைத்தருங் காந்திமா மதியெனக் கழறி. (கூக)

அன்னையார் மேலைப்பாளையம் அடைதல்.

தந்தை யாகிய முத்துச்சா மிப்பெயர்த் தக்கோர்
சிந்தை யேகனி தரவவர் கைக்கொடு செய்யாள்
வந்த தேயெனத் திகழ்தரு காந்திமா மதியோ
டந்தின் மாபணை வாளர்வா ழிருக்கையா மென்னும். (கூஉ)

பெற்றோர் சித்தநாதனைத்தேடல்.

மேலைப் பாளையம் வந்தடைந் திருந்தவர் விழைந்து
சாலப் பத்திவை ராகமே தழைத்தவெம் மைந்தன்
ஞாலத் தெம்மருங் கிருக்கினுங் கொணர்கென நாட
மூலைக் கோரள வில்லவர்ச் செறித்தனர் முறையே. (கஙஈ)

தேடி யேதிரிந் தெங்கணுங் கண்டிலர் திகைத்தார்
நாடு றும்மவர் காண்கிலர் நாஞ்செய்வ தென்னென்
றோடி யாண்டுஞ்சென் றுணர்கில ரொருங்கெந்த மருங்கு
நீடு வேலவ னருளெந்த வகையென நினைவார். (கஙச)

இன்ன வாறவர் சொல்லிய வுணர்ந்திரு வருமே
பொன்னு மாமணி போலுமெய்ப் புதல்வனைப் பெற்று
மின்ன தீர்ந்தில மெனநினைந் தேகருத் தினைவார்
முன்னின் றேபலர் சுபமொழி மொழிகுவ ராஞர். (கஙரு)

வேறு.

பெற்றோர் சித்தானந்தர் வரவுணர்தல்.

கருமாலிற் பட்டழிவோர் கதிநாடித் திரிதரவான் பொருளைக் கண்ணு, முருமாமலைக்குமரன் சந்நிதிக்குப்போந்தனிடத் தோன்று கண்டோ, மருளாளராம்வரிட்டன் வரன்முதலோர் சூழநம தரிய மைந்தர், குருவான சித்தரா னந்தரெனும் பெயரோடுங் கூடினு [ரால். (கஙசா)

புதல்வர்க் காண்டல்.

எனவுரைத்த மொழிகேட்டுத் தாய்கழிபே ருவகையளா யாவரோடுந் தினகரரா யிரம்போலுஞ்செவ்வேற்கை கொண்டோங்கு சேந்தன் மேவும், புனைமணிமா டங்குலவுந் திருவுருமா மலையடைந்து புதல் வர்க் காணக், கனைகடலுங் கலைமதியாற் களிப்புறல்போ லவருள் ளங் களித்ததம்மா. (கஙஎ)

அன்னையார் இருவரங்கேட்டல்.

மகவழைத்துக் கொடுசென்று மரவுரியை நனிநீத்து மைந்தகேளென் றகமகிழ்வி னுடுத்திடவா டையுமுதவி நினைக்கல்வி யடையா வன் ணஞ், சகமிசையின் னணமாவை யென்றேயோ தாதுசெய்தாந் தனி த்தெங் குற்றாய், தகவினிரு வரமெனக்குத் தருதியெனத் தாய்பி னிதைச் சாற்றுமன்றே. (கஙஅ)

கௌபாலசித்தர் காதை.

சின்னுன்முற் கௌபால ரெனுஞ்சித்த ரொருவருளார் தாய்சிற் றேவ, லென்னுமென் பதுகருதி யொருவியா சாரியர்பா லினிதி னெய்திப், பன்னுளு முயன்றரிதிற் பெற்றபல சித்தியெலாம் பரி விற்றன்னை, யுன்னுவந் தடைந்தவருக் கெலாமுதவ வவருமவை யுற்ருரன்றே. (கூகூ)

அடைந்தார்பெற் றதையன்றி யடைவித்தார் மனநிற்ற லடையா வாற்ரு, லுடைந்தோதுந் திறலின்றி யாசிரியர் தம்பாலொல் லையின் வந்தெய்தி, யிடைந்தேனென் செய்கேனிப் பரிசென்னை யெய்திய திங்கென்னே யென்னே, கடைந்தேயார் கலியினின்று மெடுத்தவமு தெனக்குரவன் கழறுமாலோ. (க00)

மனநினைக்குந் திறலினைநீ யடையாமை சதுரகிரி வரையி லெம்மைக் கனிவொடுமெய் திக்கைகாட் டொருநிலையைப் பெற்றுள்ளாய் காத லானின், றனையுதவுந் தாய்க்குரிமைக் கடன்செய்யா வாற்ருலித் தகைய துன்பங், கனைகடல்வைப் பிற்பெற்ரு யதுவேதாய் சாப மெனக் கடைப்பி டிப்பாய். (க0க)

அன்னதா யிஞ்ஞான்றெம் மன்னலா ரூரனுர்க் கஞ்ஞான் றீச னன்னயமாத் தூதுமட மாதுபாற் சென்றதோர் நகரா மந்த மன்னுசிர் மலிநகரின் முதற்குலத்தி லொருவன்மனைக் கிழத்தி யாகி நின்றனன்மற்றவளிடத்தேநீசென் றுபணிபுரிந்தானீங்கு மென்ருன். மொழிந்தபடி கேட்டன்ன வணஞ்சென்றம் மொய்குழலை முன்னே கண்டு, தொழுந்தகைமை யாப்பணிகள் பலபுரியத் தாய்சாபத் தொடக்கு நீங்கி, யெழுந்தமதி யரவினுற் பிணிப்பகன்ற படிகலக்க மெல்லாந் தீர்ந்து, கழிந்தபிறப் பனைக்குணர்த்தித் தானுமந்த நகரை விட்டுக் *கமனஞ் சென்ருர். (க0உ)

இன்னபடி யொருகாதை யுளதானீ யென்சொன்மரு திறைவன் முன்னுட், டன்னிகரில் வெண்காட்டெம் மடிகளையு மாட்கொண்டுந் தாய்க் கே செய்யுந், தன்னுரிமைக் கடன்கழிப்பப் பிறவிடந்தான் செலா திருந்த சூழ்ச்சி யோர்தி, மன்னுமறை மொழியும்புத் திரனென்ற தென்குறித்தோ மரபி னேக்காய். (க0ச)

* கமனம் ஆகாயமார்க்கமாகச்செல்லுதல்.

நன்புலத்தார் நனிநாடு நான்மறைநூல் வல்லவச்செந் நாப்போ தாருந்
தென்புலத்தார் தெய்வம்விருந் தொக்கலொடு தானென்று செப்பா
நிற்கு, மைம்புலத்தா ரோம்பறலே யென்றனர்முன் னையதெந்த மரபி
னோர்க்குஞ், செம்புலத்தாற் கொண்டொழுகுந் தகைத்ததனை யுள்ள
படி தெரிந்து கொண்ணீ. (கoரு)

ஆதலினங் குழந்தாயெற் குரிமையாங் கடன்செயவு மகிலத் தார்போ
லேதமிலா வுலகியலே யாற்றவுமிவ் விரண்டுவர மீவா யென்ற
சோதிமதி நுதற்குய்சொற் கிணங்கிமறு மொழிசொல்லா திருந்தா
ரன்றே, போதமக் கருளிறையு மிவன்செலுத்தும் புலமிதென்றே
பொருந்த நோக்கி. (கoசு)

இவ்விருவர் பேசுமொழி கேட்டதந் தையுமத்தா யினையே யீன்ற
செவ்வியருள் பெற்றமா தாமகருஞ் செறிந்தமற்றை யுறவி னோரும்
பௌவமீ ரிடையமுதந் தோன்றியபோ தமரருற்ற பான்மை யுற்று
ரெவ்வமகன் றனரொத்தார்யாமவரெய்தியதன்மையியம்பற்பாற்றோ.

தன்னுடைச்செல் வப்புதல்வன் வந்தமையுந் தன்மொழியே தவறு
வண்ணா, நின்றமையு நனிகேட்டுக் கழிபெருமா மகிழ்ச்சியுற நிலமேல்
வாழ்க்கை, மின்னிடைச்செங் கனிமொழியார் சிதம்பரநல் வடிவம்மை
வியந்து சின்னு, ளிங்கிலையி னின்றருள்கூ ரிமயமபி லடிநீழ லெய்தி
னாரே. (கoஎ)

வேறு

அன்னையார் அம்பிகையடியிற் கலத்தல்.

ஆண்டு கொல்லமிங் காயிரத் தைம்பதோ
டீண்டொன் பானெழி லாடிப் பதினொன்று
நீண்ட தேதி நிகழ்பூ ரணைநிசி
யாண்ட வன்னை யடைந்திடு நாளரோ. (கoகூ)

வேறு

அன்னையம்மை யடிநிழலை யடைந்தமைகண் டஞ்ஞான்று ளகமெ
லிந்து, பொன்னின்மே னியையெடுத்துத் தழற்படுத்துப் பொருவி
லொன்பா னிரண்டு நாளு, மின்னுசிவா கமவழித்தாய்ச் செயுங்கரும
மினிதியற்றி வேதி யற்கு, மன்னுபல தானதரு மம்புரிந்து சின்னு
ளே வதிந்த பின்னர். (கக0)

ஞானசித்தர் குருகூர் அடைதலும், சுந்தர சாஸ்திரிகள் சந்தித்தலும்.

தாயுந்தன் முய்தனேயே யீன்றதா தையுந்தங்கை யுந்தொ டர்ந்து போதவிழும் வாவிகள்சூழ் குருகூர்ப்பூம் பதியெய்திப் பொருவில் சுற்ற, மாதரவி னடையவமர்ந் திருந்துழிமுன் னுட்செய்தவ மன்ன பண்பார், வேதியராஞ் சுந்தரசாத் திரிஞான சித்தரிருக் கையைமே வுற்றார்.

(கககஅ)

குருவருளெய் துவதென்று கூடுமெனுங் கருத்துள்ளங் கொண்டு மேவும், பொருவரிய சுந்தரசாத் திரியெனும்வே தியர்பெருமான் போத ஞான, மருவியமெய்ஞ் ஞானசித்தப் பெருமானை நிழலே போன் மருவிநின்று, கருநெறியை யிகந்துநிற்கு மநுபவநன் னெறிசாலக் கடைப்பி டித்தார்.

(கககஉ)

சித்தர்க்குத் திருமணஞ் செய்யத் தந்தையார் கருதல்.

இத்தகுமெய்ஞ் ஞானநிலை கைகூடி வேதியர்தா மிருக்கு ஞான்று மைத்தமணி கண்டனருட் புதல்வனடிக் கேகுழையும் வள்ள லாருஞ் சித்தமல மாசறுத்த நிலையுணராத் தந்தைமுன்னோர் செறிந்தில் வாழ்க்கை, யுத்தமமென் றொருமடந்தை தனைவதுவை செயற்கென்றே யுள்ளங்கொண்டார்.

(கககங)

சேந்திற்குமரன் வதுவை தாழ்க்கத் திருவருள் செய்தல்.

உளங்கொண்டு பலபடிசொற் றிடச்சித்த ரைவருக் குடன்ப டாது களங்கொண்ட நஞ்சுடையான் றருஞ்செந்திற் குருமணிதன் கருத் தேயாயின், வளங்கொண்ட மனைவாழ்க்கை யமையுமெனக் கனவினி டைமதிமி லைந்தோன், குளங்கொண்ட விழியுதவுஞ் சேந்தனுளக் கனிவோடு கூறு மாதோ.

(கககச)

வதுவைசெயற் கிதுசமய மன்றுள்ள வாறுசின்னாண் மாண்ட பின்னர்க், கதுமெனயா மேபுரிவித் திவன்றுய்மாட் டுரைத்திடுங்கட் டுரைமு டிப்பா, மதிமகிழ்ச்சி யொடுமெனத்தான் றனித்தனிசென் றறிவிக்க வதுகண் டியாரு, மிறைமுருகன் செயலென்றே யூமரினுங் கடங்கினு ரென்ப வம்மா.

(கககரு)

சுந்தரசாஸ்திரிகள் ஞானசித்தோபாக்கியான நூலியற்றலும், தமது நகரத்துக் கழைத்துப்போதலும்.

சாலமர நீழலெலனுந் தகையரா வாழு மொரு சதுர்ப்பா டுள்ள நாலுமா மறையுணர்சுந் தரப்பெரியார் ஞானசித்தோ பாக்கி யானங் கோலுநீர் வையகத்துக் குறித்துரைத்தே யிருக்கையாக் குலவு மாற் றார்ப், பாலடையக் கொடுசென்று ரன்பர்பலர் பரவிநிற்பப் பரிவி னம்மா. (ககசு)

வேறு.

கல்லாடை புனைதல்.

கூற்றார்சென் றடையாமே யாவருநஞ்செந்திற்
குருமணித னருட்சித்தாற் குலவுறுநம் மிறையோ
னூற்றாரிற் கருந்தடங்க ணம்மையுமை காண
வாடுகின்ற பெருமான்ற னடிக்கமலத் தருகே
வேற்றார்வந் தினித்தம்மைக் கடிமணத்திற் குரையா
விதமாகக் கல்லாடை வியந்துபுனைந் திலகி
நீற்றார்மே னியனென்ன நிலவியுநின் றனரா
னின்னயமீ தெனயானு நிகழ்த்தவறி யேனே. (ககஎ)

ஸ்ரீ. சோமேசர்க்குத் திருத்தேர் முடிக்கயத்தனித்தலும், முக்காணிக்குப் பதிகம் பாடலும்.

வையமெலாம் படைத்துக்காத் தழித்துமறைத் தளிக்கு
மாதேவன் சோமேசன் மனமகிழ்ந்தே யூர
வையமொன் றங் கமைத்தற்காப் பிடியரிசிக் கலய
மற்றவ்வூர்க் கயலூர்க்கும் வைத்தநடத் திடவே
மெய்புணரா மாந்தர்சிலர் முக்காணி யதனுன்
மிகமறுத்துச் சிவனடியார் தமைவெறுத்துக் கூற
வையமிலாச் சோமேச னைப்பாட வவ்வூ
ராற்றிலகப் படுத்தியது மவனருளின் றிறமே. (ககஅ)

கற்பசாதனைபயிறல்.

அப்பாற்சே துக்குவாய்த் தான்பதியி லமர்ந்தே
யருஞ்சித்தர் கற்பமுறை யனைத்தினையுந் தேர்ந்து
செப்பாரு மிவ்வுடல மழியாது ஞானச்
செந்நெறியை நனிமேவத் திகழுங்கொல் லாண்டி

லொப்போதற் கருமாயி ரத்தறுபான் மூன்றி
லோங்குமக ரத்திருமா மதிதன்னிற் குரவ
ரெய்ப்பேயி லாதுரைத்த வகைசின்ஞ ணடந்தா
ரிவணடந்த யாகமது மெடுத்தியம்பு வேனே. (கககூ)

ஸ்ரீபுவனம்பிகை யாகாரம்பம்.

வேள்வியெனப் படுமனைத்து மிவ்வுலகிற் சில்லோர்
விழைந்துபுரி வதுபயனைக் கருதியிது காறு
நாளடைவி லப்பயனும் பரிதிமுன்னே யிமம்போ
னடலையுறு விக்குமிது நாங்கூறுந் தகைத்தோ
ஆள்வினையி னன்றுநவ கோடிசித்தர் வதிட்ட
ரருந்தவக்கோ சிகர்குறுமா முனியளவி லாதோர்
கேள்வியினம் முறையருளைப் பெறும்பரிசு செய்யுங்
கேடிலாப் பெருவேள்வி யாற்றிடலுக் கியைந்தே. (கஉ௦)

முதலாவதுயாகம்-சேதுக்துவாய்த்தான்(தாமிரபர்ணி)

கருமலிவெம் பிறப்பகற்று மிரும்பொருநைக் கரையிற்
கதியடைவார்க் கெய்துவிக்குஞ் சேதுக்கு வாய்த்தான்
றிருநகரிற் றேவரெலா மிதுபோலும் வேள்வி
செய்தாரை யிக்கலியிற் சிந்தனைசெய் தறியேம்
பெருமகிழ்வி னிவரினியே பலபுரிக வென்று
பேசிமகிழ் தூங்கநில வுஞ்சருவ தாரி
வருமொருமுன் மதிப்பூர ணைத்தினத்திற் றொடங்கி
மண்டலமெ லாமிறும்பூ தெய்திவளம் பெறவே. (கஉக)

விண்ணளவு காவணத்தை மிகக்குயிற்றி யாங்கு
வேதிகையே மணிப்பீடம் வியன்வேள்விக் குண்ட
நண்ணிடவே மிகுதிரவி யக்குவியல் குவித்து
நாடுறுமம் மணிப்பீடந் தனிற்புவனை தனையே
நண்ணுவித்தா வாகனமுஞ் செய்வித்துச் சால
நான்மறையோர் புடைசூழ நாடுறுமக் குண்டத்
தெண்ணியவா றேயிருந்து மகநன்று புரிதற்
கேய்ந்தனவெல் லாஞ்செய்த தியானுரைக்குந் தகைத்தோ (கஉஉ)

இரண்டாவது மூன்றாவது யாகங்கள் தாமிரபர்ணி சங்கமத்தும், சோர்க்கப் பழங்கரைக் கௌதமர் கங்கைத்துறையினும்.

கன்னிபிம வான்மடந்தை கயற்கண்ணி நீலக்
கரியதடங் கண்ணியங்கா மக்கண்ணி கருணை
மன்னிவளர் பூரணிநா ரணியார ணிப்பேர்
மாதங்கி பவானிகௌரி பார்ப்பதிசூ லினியெம்
மன்னைபுவ னையருளாற் பொருநைச்சங் கமத்து
மஞ்ஞான்று கவுதமனுர்க் கருளாலாற் றியதோர்
நன்னியமத் துறைக்கங்கைப் பழங்கரையி னிடத்து
நான்மறையின் முழக்கமெழ நடந்தனமற் றிரண்டே. (கஉங)

வேறு.

தங்கையார் வதுவை.

வித்த கத்தவ ரிங்ஙனே வேள்விசெய் திடுங்காற்
சித்தர் பின்வருங் காந்திமா மதியினைச் செறிந்த
வத்த மேய்மதில் சூறிகுல சேகர வரும்பே
ரித்த லம்பெறு நகரிரு ளப்பவேட் கியைத்தே. (கஉச)

மாதாமகர் குலசேகர பட்டினம் அடைதல்.

வதுவை தான்செய்த வம்மனை வாளனுந் தானு
மதியு ரோணியு மெனக்கண வன்வள நகர்க்கே
யதிகு ணத்தொடுஞ் சென்றபின் னக்குரு கூரில்
வதித ருஞ்சிதம் பரத்தமை தாதையு மதிக்கும். (கஉரு)

பெற்றி டுந்திரு வும்முருக் கரந்தனள் பெரிது
முற்ற வத்தினுற் சித்தனு நீங்கினன் முன்னே
யிற்றை யெண்ணுவ் தென்பதி யாதுகொ லென்னுக்
கற்று ளான்குல சேகரக் கடிநக ரடைந்து. (கஉசு)

தன்ம கட்கொரு தனையயா வருங்குலக் கொடிபா
லன்பி னேடமர்ந் தம்மநஞ் சித்தனை யென்றே
நன்று கூடுமா லென்றுசிந் திக்குநம் மிறையோ
டொன்று பூரண முறுவது மண்மையென் றேதும். (கஉஎ)

சித்தர் மாதா மகளைச் சந்தித்தல்.

இன்ன வாறெலாஞ் சொல்லுமின் றினைதரு வேலைக்
கன்னி யாகிய புவனைதன் கருத்திது கொல்லோ
வன்றி யேசித்தர்க் குள்ளுறு நினைவுகொல் லறியேன்
சென்று காண்பெனு லென்றந்தத் திருநகர் சென்றார். (கஉஅ)

சித்தரைக் கண்டு தாம் அடையு நாள் உணர்த்தல்.

சென்ற வத்தினஞ் சித்தனுர் தாயினைத் தந்தோன்
கன்று நீங்கிய பசுவெனக் கனிவொடு கண்டு
நின்று நாம்பரி பூரணத் தொடுங்குவே நீயெற்
கின்று தான்செயற் காவன செய்யென வேவ. (கஉகூ)

சித்தர் சேதுக்குவாய்த்தானை அடைதல்.

அனையர் சொற்றவா சமாதியு மங்ஙனே யமைத்துக்
கனிவி னேடுதம் பின்வரு காந்திமா மதிப்பே
ரனைத னக்கவ னரும்பெற லாசிகள் கூறி
வினய மோடுசே துக்குவாய்த் தானைமே வினரால். (கஙo)

சித்தர்பால் திருக்குருகூர் முத்தையபிள்ளை வருதல்.

இனைய செய்தியை நிகழ்த்தினு மினித்திருக் குருகூர்
வனைத ரும்புகழ்ப் பதியினர் வயங்குறும் வேளா
ளனும ருங்குலத் துதித்தவ ரெழில்கொண்முத் தையவேண்
மனம டங்கிட வேண்டியே மாதவம் புரிவார். (கஙக)

சித்த ரற்புதச் செயல்களை யொன்றன்பி னொன்று
மெய்த்த வன்பினர் கூறிடக் கேட்டுமுன் விழைந்தே
சித்த மாலறச் சிந்தனை யாகியே சென்று
பத்தி யோடுநஞ் சித்தர்வாழ் பதியடைந் தனரால். (கஉங)

சித்தர்பாற் குறையிரத்தல்.

ஐய கேள்பல நூல்களா லரியகேள் விகளாற்
பைய வேயட யோகசா தனைபரிந் தாற்றி
வைய மீதுறு குகையினிற் சமாதியும் வாய்ந்து
நைவ தாயினேன் மனேலய நன்னிலே னென்னு. (கஙங)

நாத்தி கத்தவர் நாவடங் கிடநலஞ் செறியு
மாத்தி கத்தவ ரருட்பரி சடையநின் றிடுநின்
கேத்தி ரந்தனை யெய்தியே கேதனேன் புகலுந்
தோத்தி ரந்தனைக் கேட்டியென் றன்புடன் சொல்லி. (கரு௪)

அநுக்கிரகித்தலும், குருகூர் அடைதலும்.

முறையி டுந்திரு வாளனை முகத்தருள் நோக்கி
யிறையு நீசிறி தையுறே லெங்குரு மணியா
மறிவன் பச்சைவெற் புறைதரு மாண்டகை யருளு
நிறையு முண்மைநன் னிலையினைக் காட்டுவே மென்று. (கருரு)

மனநி லைத்திடும் வழியிது வெனவகை யாகத்
தனைநி கர்த்திடுந் தாபதக் குருமணி சாற்ற
வினலொ றுத்தவர் தம்முட னெழிற்குரு கூரிற்
புனித மாமனை வைகுற மகிழ்வொடும் புக்கார். (கருசா)

சென்ற தேசிக மாமணி திகழுமுத் தையவே
ளென்ற யோகித னிருக்கையிற் சில்பக லிருப்ப
நன்று கேள்வியன் ஞானசற் குருமணி நின்பா
லின்றிவ் வேழையே னியம்புமின் னைப்பமீ தென்றான். (கருஎ)

குருகூர் முன்னைவரலாறு.

இந்த நன்னகர் தானவ லிங்கமா புரமென்
றந்த நாளினில் வழங்கிய நீர்மைய தைய
சிந்தை நைந்துருத் திரர்பதி னொருவர்சிற் பரனு
மெந்தை தன்னையே வழிபடுஞ் சிறப்பின தென்றும். (கருஅ)

வேங்க டந்தனைச் சோலைவெற் பினைவியன் புவியிற்
றேங்க டம்பினன் றேமெனக் கூறிடா வகைசெய்
தோங்கி னூரொரு மால்சம யத்தின ரொல்லே
பாங்கி னலந்தச் சிவக்குறி யிங்கொன்பா னையுமே. (கருகா)

சித்தராலயம் அமைக்கப் பிரார்த்தித்தல்.

கொண்டு பின்னொன்பான் சிவக்குறி குலவிட நீல
கண்டர் மேவுறச் சித்தெலா முன்புபோற் கவின
விண்டொ ழத்தகு மாலயம் விதியுளி யமைத்துப்
பண்டு போற்சிறப் பெய்திடப் பண்ணுவ தன்றி. (க௪0)

சித்த மார்க்கமித் திரைகடற் புவியிலோங் குறவுஞ்
சித்தர் நூல்களார் திருச்சபை சிறக்கவு மருந்து
வைத்தி லங்கிய சாலையே வயங்கன்ன தான
வித்த கத்தல மேவவும் பணியென விளம்பும். (கசக)

சித்தர் திருவுள்ளக் கிடை.

நன்று கூறினை யநாதிபெத் தர்களென நவில
நின்ற வாருயிர் நித்தனை யிரண்டற வென்று
மொன்றி டுஞ்சுத்தாத் துவிதநல் லின்பமிங் கெய்த
நன்று சுத்தமெய்ஞ் ஞானசித் தியையுற வென்றும். (கசஉ)

முற்செய் புண்ணியத் தாற்கிடைத் திட்டது மொழியின்
பொய்ச்ச ழக்கினு மிப்புலால் யாக்கைமற் றீது
வெச்ச வெம்பிணி மூப்பிறப் பினிற்படுத் தாது
நச்சி வாழ்வது சித்தர்தந் நல்லருட் செயலே. (கசங)

அன்ன சித்தர்கள் பெருமையிவ் வகிலத்தி லோங்க
வுன்னி னுயது தானெமக் கேயுடன் பாடாம்
நன்ன ராலயந் தொடுத்தனுங் கொண்டவிவ் வேள்வி
பன்னி ரண்டுமே முடித்தபின் பண்ணுதல் வேண்டும். (கசச)

சித்த ராலய மெனுந்திருப் பெயரினுற் குருகூ
ரித்த லம்புக ழெய்திட வோங்கவு மெமையாள்
சுத்த சாம்பவி பைரவி சொலற்கரும் புவனை
வித்த கிக்கும்வே றாலயம் விதித்திட வேண்டும். (கசரு)

இனைய யாவையுந் திருவருள் கூட்டவெப் படியுங்
கனைக டற்புவி மேன்முடி யும்மெனக் கழறி
மனநி லைத்திட முத்தைய மாற்கருள் சுரந்து
தினக ரன்னெனச் சிறந்தனன் சித்தமூர்த் தியுமே. (கசசு)

என்று கூறிநல் லருள்செயுஞ் சித்தர்தம் பதத்தே
மன்ற வாழ்த்திய பாப்புனை மாலைகள் பலவா
யொன்ற வேதொடுத் தன்பினுற் சாத்தனு முவந்து
நன்று நோக்கினர் சரித்திரம் பின்னரு நவில்வாம். (கசஎ)

வேறு.

பாஞ்சாலன் குறிச்சி தளவீரராமபாண்டிய துரை வழிபடல்.

வேதஞ்சொலு மாறம்புதி நாதங்குறை கடல்சூழ் மிளிர்மந்திர நகரந்
தனி லொளிர்தந்தையை மேவத், தாதொன்றிய பூவென்றிடு பாதங்
கர முடையான் சாரும்பொழு தத்தேமிகு வீரந்தரு தலைவர், கீதந்
திறை பாஞ்சாலரின் வழிவந்திடு பாலர் கேதந்தொலை தளவீரனென்
றிடுபேருடை யொருவன், போதொன்றிய வழிபாடுகள் புரிந்தேயவர்
மகிழப் புகழும்பல பலநன்மைகள் புணரும்படி பெற்றான். (கசஅ)

சுப்பிரமணியத்துரை பாமாலைபாடிச் சித்தரை வழிபடல்.

அவன்றன் றுணை யாஞ்சுப்பிர மணியன்றமி ழறிவா னருளார்தரு
சிவன்றன்னடி மறவாதவன் புடையா, னிவன்றான்றிய பல்லாற்
றினு மியல்ஞான சித்தன்ற னெழிலாரவ தாரம்பல பலவற்புத
மோர்ந்தே, யவம்பொன்றிய சித்தானந்தக் கும்மிப்பெயர் மாலை
யழகார்சித்த ரத்நாகர முதனூல்பல செய்தே, தவந்தங்கிய முனிவன்
னடிசாத்திப்பணிந்ன்றேசாரக்ககுமவராசியுமன்புந்தழைத்தனனே.

வேறு.

கயத்தாற்று முத்தையபிள்ளை சித்தரைச் சரணடைதல்.

இவ்வாறிங் கிவரிருவர்க் கருளிப்பின் னேகுங்காற்
செவ்வானத் தொளிர்மேனிச் சிவனார்தந் திரிகூடத்
திவ்வாழு முலகுய்ய விரைந்துவரு சித்திரப்பே
ரவ்வாறு பாய்கின்ற கயத்தாற்றை யடைந்தனரால். (கருo)

புறச்சமயத்தினின்று விலக்கிச் சிவாநுக்கிரகம் பெறச்செய்தல்.

அந்நகரி லிக்காலத் தாள்கின்ற வரசர்மத
மென்னவரு கிறித்துமத மியைந்ததினும் வல்லாராய்
மன்னியுப தேசியாய் மார்க்கருக்குப் போதித்தா
னன்னவனே முத்தைய னெனவுலக மறிந்திடுமால். (கருக)

ஆங்கவனிச் சித்தர்தமை யாகூழாற் றரிசித்த
பாங்கினாற் முன்புக்க படுசமயந் தனைநீங்கி
யோங்குபுகழ்ச் சிவதீக்கை யுற்றுற்றார் குறைமுடிக்குங்
காங்கயன்றன் றிருவடிக்கே கசிந்தன்பு செயப்பெற்றான். (கருஉ)

நீக்கரிய புறச்சமய நீங்கியரு ளுற்றதன்றி
வாக்குவலி யாற்றனது மரபுளோ ரையுந்திருத்தி
யாக்கமுறு பாமாலை யளவில்ல குருபதத்தே
யாக்கியவ னருள்பெற்ற தகிலமுணர்ந் துளதின்றும். (கருங)

சித்தர் *திருமந்திரநகரடைதல்.

சிறப்புற்ற கயத்தாற்றுப் பதிநீங்கிச் சிவனடியார்
பிறப்புற்ற பெருந்தகையார் பலர்சென்று பெருமைசெயக்
குறிப்புற்ற மந்திரமா நகரத்திற் குருகினு
ரறப்பெற்றி நிலைசெய்பு மவிர்ஞான சித்தனுர். (கருச)

குறுகுங்கா லன்பர்பலர் குறைமுடிக்கும் பெருந்தகையார்
மறுவொன்றுக் குரவனென வான்றந்தை வழிநின்ற
வறிவொன்று மாறுமுக வன்பனமர் மாளிகையிற்
பிறிதொன்று மெண்ணுத பெட்பினுன் வீற்றிருந்தார். (கருரு)

கடம்பூர் 'ஸ்டேஷன் மாஸ்டர் ராஜாராவு' க்கு ஆருயிர் அளித்தல்.

வழிபாடு பெற்றங்கண் வாழுநாட் கடம்பூரி
லொழியாத பொறிவண்டி யிடத்தலைவ னந்தணனோர்
பழிகாரர் சல்லியத்தாற் பத்துநாண் முன்பினடைத்
தழிபாடு பெறநின்று னந்நகர்ச்சத் திரப்பாலே. (கருசு)

இவனிலைகண் டுருகினு ரன்பர்பல ரிரந்திடலாற்
பவனுமையா ளருள்பரவிப் பகரரிய விபூதியா
னுவமனிலை யிவன்றவமென் றுணரறி ஞருமுவப்ப
வவனுயிருக் குயிரளித்தா ரவர்திறமென் னளவிற்றே. (கருஎ)

வேறு. செப்பறைக்குப் பதிகம் பாடல்.

மந்திர நகரத் தன்பர் பலர்க்குவேண் டுவன நல்கி
யந்தர மணவுஞ் சீர்சான் றவிர்திரி கூடங் காணச்
சிந்தைகொண் டங்க னீங்கிச் செப்பறைப் பதிசென் றங்கே
முந்துறு பெருமானுக்கு முறைமையிற் பதிகம் பாடி. (கருஅ)

* திருமந்திரநகர்-தூற்றுக்குடி.

வெள்ளிமலை மாதேவயோகியார்க்கு அருளல்.

அப்பதிக் குணபால் வெள்ளி மலையின்கண் வாழ்மா தேவ
துப்புறு யோகிக் குள்ளந் துலங்கிட வருளிப் போந்தார்
வப்பரி சடைந்தான் சித்த நாதனுர் சதக மாலை
திப்பிய மொழியி னுக்கித் திகழுந்தன னடிய னுகி. (கருகூ)

யோகியார்க் கருளிப் பின்னர் யோகியர்க் கரச ரான
மோகமில் லாத கும்ப முனிகர தலமு கிழ்த்த
போகமும் வீடு நல்கும் பொருநைசூழ் பொருவி னெல்லை
யாகிய சைவ சிந்தா மணிப்பதி யடைந்தா ரன்றே. (கசுo)

வேறு.

நெல்வேலிநாதர்க்குப் பதிகம்பாடல்.

சிரேந்து காந்திமதி யொருபான் மின்னத் தெய்வக்கற் பகமாகித் திகழு நெல்லைப், பேரேந்து மனவரத தானநாதப் பெருமாற்குப் பாமாலை பிறங்கச் சாத்திக், கூரேந்து மறிஞர்பலர் வேண்ட வன்பிற் குயிற்று மழ கியசொக்கன் றுதியுங் கொண்டு, பாரேந்து மப்பதிக்கே சிலநாட் டங்கிப் பாடுங்கட் டாரிமங் கலம்வந் துற்ருர். (கசுக)

கட்டாரிமங்கலம் சபாபதிக்குப் பதிகம்பாடல்.

பஞ்சதலத் தொன்றுமப் பதியிற் சென்று பஞ்சகிருத் தியாடனம் பரிவி னுடங், குஞ்சிதபா தத்தொருவன் றனைக்கும் பிட்டுக் குளிர் தேனுர் பாமாலை குலவச் சாத்தி, யஞ்சறவிர்த் தன்பர்பலர் வேண்ட வங்க னமர்ந்துசில நாட்கழிந்த பின்ன ராயுங்,கஞ்சனையின் றவனெ ம்மா னுகப் பெற்ற கணிசூழுந் திரிகூடங் கண்டா ரன்றே. (கசுஉ)

குற்றலநாதர்க்குப் பதிகம்பாடல்.

தேவர்களோ முனிவர்களோ சித்தர் தாமோ செப்புகின்ற பல்வகைய கணங்க டாமோ, யாவருமே பிரியாது வாழு மந்த விணையில்கிரி வட வருவிப் பாங்க ராதி, மூவரையுந் தாலாட்டு மம்மை யின்ப முதிர் குழல்வாய் மொழிமகிழு முக்கண் மூர்த்தி, சேவடியிற் பாமாலை சாத்தித் தொண்டர் செயும்பணிகொண் டங்கிருந்தார் சிலநா ளன்றே.

வே று.

சித்தர் மதுரைக்கு எழுந்தருளல்.

குற்றாலத் திடமேய கூத்தன்றன் பதம்போற்றிப்
பற்றார்க ளாஞ்சமணப் பதகர்பெருங் குறும்பறுத்த
முற்றாத முலையுமையா ளிடங்கொண்ட முதல்வனருள்
வற்றாது வளர்மதுரை வழிக்கொண்டு நடந்தனரால். (௧௧௬)

வே று.

சமாதியினின்றெழுந்த தும்மாபட்டி வாலமஸ்தானைச் சந்தித்தல்.

பலபல பிறவி செய்தபுண் ணியத்தாற் பார்புகழ் வைதிக மரபிற்
குலவிநல் லன்பா திபகுண முற்றுக் குருவரு ளானெறி நின்று
நிலவுறு வேதப் பொருணனி நாடி நீடிய விரதயோ கங்க
ளலகில வாற்றி மெய்யுணர் சித்த ராங்கணத் தவர்பல ரின்றும். ()

இவ்வுல குள்ளோ ரறப்பய னெய்த விருத்தலு மவரரு ளாலுஞ்
செவ்விய முறையினுணர்த்துவைதிகாச்சாரலாற்சந்தனஞ்செறிந்த
வவ்வனத் துறுபொல் லாமர மேனுமதன்மணஞ்செய்தல்போலன்பு
கவ்வுறு மனத்தி யவனரோர் சில்லோர்கருதருஞ்சித்தியுற்றாரால்.

சித்திகள் பலவா மவற்றினைக் கூட்டுந் திறற்பெரும் யோகமும்பலவே
யத்துணை விரியோம் கற்பமுண் டளவி லாயுள்கொண் டியோகமும்
பயின்று, வித்தக மெய்தி யுலகினை மறந்து மேதினி யுட்பல காலஞ்
சித்தமோய்ந் துடையசமாதியொன்றல்லசெய்தனர்சிறந்துளாரம்மா.

கொம்மையம் பட்டி வாழ்ந்துளா ராசர் குறிக்கொண்ட கொள்கையு
முடையார், செம்மைசேர் ஞான சித்தர்முன் னோைத் தெரிதலி
னவரொடுஞ் செறிந்தார், வெம்மைநோ யகற்று மவர்வரல் கண்டு
மேதினி நின்றெழுந் தன்பி, னெம்மையு மினிய கேள்விகள் கலந்தங்
கிருவரு மளவளா வினரால். (௧௧௮)

ஸ்ரீ மீனாட்சிசுந்தரேசர்க்குப் பதிகம்பாடல்.

பெரியவ ரோடு மகிழ்ந்துளாயாடிப்பிறையணிவார்சடைப்பெம்மா
னரியளா யகியங் கயற்கணி மகிழ வாடல்செய் கூடலை யடைந்தே
யுரிமையி னணியார்மாலையுந்தெரியற்பதிகமுமுமைக்குஞ்சுந்தரர்க்கும்
வரிசையி னணிந்து வணங்கின ரன்பின் வழிமுறை தருஞான சித்தர்.

வே று.

பதிகப்பொருளுரைத்தல்.

அங்கொருநாட் சிவனடியார் பலர்சூழ வாலவாய்ச்
சங்கரனை முறைபணியுந் தமிழ்ஞான சித்தனார்
பொங்கியபே ரன்பினாற் புகல்பதிகப் பொருள்விரிப்பார்
தங்கடவ மெனவன்பர் கேட்டின்பந் தழைத்துற்றார். (௧௭௦)

அற்றாக வுலகுய்யச் சீகாழி யவதரித்து
முற்றாத முலையுமையாள் தருமமுதான் முழுதுணர்ந்து
பொற்றாளம் பெற்றளவில் புண்ணியர்சூழ்ந் திடவுண்மை
பற்றாத கொடியரெனும் பாழ்ஞ்சமணை விருடரந்து. (௧௭௧)

வே று.

பரமத களப கேசரி யாகிப் பழமறைச் சைவசித் தாந்த
வரமலி பரமா சாரிய னாகி மன்னியம் மதுரையம் பதியிற்
திருமடங் கொண்டு திகழ்திரு ஞான சம்பந்தர் திருமர பிசைய
வருமொரு குரவ ராகிய முனிவர் வந்தன ரனடி வணங்க. (௧௭௨)

மதுரைத் திருஞானசம்பந்த பண்டாரசந்நிதிகளைச் சந்தித்தல்.

காதணி குழையெங் கண்ணுதற் கடவுள் திருவடிக் கமலமே கண்டு
போதுவார் தமது சேதுவாய்த் தானிற் புகழதி காரிகள் முன்ன
ரோதலு மீண்டுத் தமதுகண் கூடாக் கண்டது மொத்தலி னுவந்தே
யாதரம் பெருகச் சித்தமூர்த் தியினை யளவளாய் மகிழ்ந்தன ரன்றே.

தந்தையா நெற்றித் தழல்விழிக்கடவுள்சைவமாம்பயிர்க்கிடையூறாய்
வந்தன வாய புறமதக் களைகள் வாட்டிட வருளுருக் கொண்டே
யிந்தமா நிலத்து முன்வரல் போல விகன்மிகு விவிலிய மாதி
பந்தமாஞ் சமய திமிரநீக் கியவோர் பாநுவின் வந்தது மன்றி. ()

தமையடைந் தார்க்குத் தத்துவ ஞான சைவசம் பத்துமொப் பின்றி
யிமையவர் மருளும் போகசம் பத்து மிணைந்திட வருளுதன் மான
வமைவுறு ஞான சித்தராம் பெயர்கொண் டடிகளா டுதலமுகென்னச்
சிமையமா தருளார்சித்தருமெல்லாந்திருவருட்செயலெனவுணர்ந்தார்.

சுப்பாநாயடு மாளிகையில் வீற்றிருத்தல்.

இருபெருங் குரவ ரின்னணங் கலந்து மகிழ்ந்துரை யாடிடக் கண்ட
வருகுள வடிய ரனைவரு மகிழ்ந்தா ரவர்தமின் *மறைவராச்சவையி
னொருதனிச் சாமி வேதியன் வேண்ட வூர்ப்பரி பாலனக் கூட்டத்
தொருவனுஞ் சுப்ப ராயநா யடுத னொருபெரு மாளிகை யுற்றார்.

முத்துச்சாமிமுனிவன் சித்தர்பால் ஆசங்கித்தல்.

சித்த னார்மது ரைப்பதி யமர்ந்துற்ற செவ்வி
யத்த லத்துளார் யாவரு மறைந்திடக் கேட்ட
முத்துச் சாமியென் பேர்கொளு முனிவனங் கொருவன்
சித்த நாடின கேள்விகள் கேட்டிடச் சென்றான். (௧௭௭)

எய்து மன்னவன் சத்துவ குண்மிலா தவனுய்
நொய்தி னங்கவ னுவல்கின்று னேன்புடை யாய்கேள்
ஐதி னிவ்வுல கனைத்துமே யியல்பென வறியா
யுய்வை யேதரு மாற்றநின் னுளத்திடைக் கொண்மோ. (௧௭௮)

பஞ்ச பூதக்கூட் டரவினிற் சேர்க்கையிற் பாரின்
பஞ்ச ளோடுசுண் ணாம்பினைக் கூட்டிட வருமோர்
விஞ்சு செம்மைபோ லுயிரென வொன்றுமே விடுமற்
றெஞ்சி டாதொரு பாழுமே வருமிது சரதம். (௧௭௯)

அன்ன யாவையு மறிந்திடு மன்னதை யோரு
மன்னு மாபல மார்க்கங்கள் வந்தன வென்று
பன்னு கற்பனை யாய்ச்சில காலமுன் பகட்டாய்ச்
சொன்ன மாமறை யாகமப் புரட்டினைத் துணிந்தே. (௧௮௦)

மெய்யெ னக்கொடு செபதப விரதமே யாக
முய்வி னைத்தரு மூர்த்தியே தலமுயர் தீர்த்தம்
பொய்ய தாம்பிறப் பகன்றிடு மெனப்பன்னூட் புவிமேன்
மெய்வ ருந்தியே யிறந்தபின் வியனுபி ரென்பான். (௧௮௧)

---

* மறைவராச்சவை - பிர்மேஸன் ஸொஸைடி.

புண்ணி யத்தொடு பாவத்துக் கேற்பவே பொருந்தும்
விண்ணி னேடொரு நிரயமே வருமெனும் வினையா
லெண்ணி லாப்பிறப் பெய்திடு மெனமிக நினைந்து
மண்ணின் மாண்டவர் மண்ணினு மிகப்பலர் மன்னே. (கஅஉ)

இயற்கை யான்வரு மின்பதன் பங்களை யென்று
நயத்த கும்விவே கத்தினு லல்லது நாடி
வியத்த குந்தெய்வ பலத்தினு லாவது விலகச்
செய்யத்த குந்தவோ கருமங்கள் செப்பிடி னம்மா. (கஅங)

இன்ன வாறிதிங் கிருந்திட வெந்தைகே ணீவிர்
தொன்னி லந்தனிற் றலந்தொறுஞ் சென்றுசென் றுங்கே
பன்ன ருந்தமிழ்ச் சொற்பதி கங்களே பாடி
வன்னி யாகுதி கொடுத்திவண் வருந்தலென் னேயோ. (கஅச)

என்று கூறிடக் கேட்டநஞ் சித்தனுர் தாக்கி
நன்று நன்றுநின் விவேகமே ஞாலமேல் வேங்கை
யொன்று தான்புனிற் றுவின்றேல் போர்த்துல வுதல்போ
னின்று பொய்த்தவ வேடத்தா னிகழ்த்தினை புன்மை. (கஅரு)

பேசுங் காலுலோ காயதம் பித்தருக் கென்று
நேச மாறிறை யின்றெனு நிரீச்சுரன் றனக்கு
மேசி லாதிவ ணடுவனே தேகான்ம மென்னு
நீச ரெய்திய நெறியினை மெய்யென நினைந்தாய். (கஅசு)

ஆயி னும்மிந்த வழியதோர் சமயமே யறையு
மேய தோர்ப்ரமப் பொருளினை யாவரே நினைக்குக்
கூய மைத்திவண் கூறினர் கோதற வதனை
ஞாய வாயிலா வுணர்த்துநூல் யாதென நவின்றார். (கஅஎ)

முத்துச்சாமிமுனிவர் கடவுளில்லையென்றது.

"வேதமெனு மாகம புராணவகை யாவும்
வேறுபொரு ளுண்டினியவ் விண்ணுலகி லென்னு
மாதவ ரறிந்தபொரு ளாகுமது வேறே
மற்றுமொரு பேரறிவ தாமிரித தென்பார்

பேதமற நின்றபர யேகவெளி யொன்றைப்
பேசுவர்க ளின்னமு மனந்தவித யூக
நீதமுள வைம்பொரு ளனந்தவித மாக
நின்றவனு வந்தபல நேர்மையறி யாரே."

வேறு. ஷெ யார், வேதம் பொய்யென்றது.

"இறைவனுண்டென நால்முறையிடுவதைஎங்கணுந்துதிப்பாகப்
பறையறைந்துமிவ்வுலகெலாமெனதெனப்பலதிசையிலுமுள்ளோர்
அறைதருங்கறை யகன்றெழு கடலென வனந்தநூன் மிகச்செய்து
மறைபுகழ்ந்தது நிதிபடைத் திடவலால் மற்றுமொன் றறியேனே."

சரியாதியும், சித்தநூலும் தவறென்றது.

"தொழில்சுற்றம் பொருளஞ் ஞானந் துயர்தரும் விரத நோன்பு
பழியுறு வேள்வி மிக்க பக்திமந் திரஞ்செய் பூசை
ஒழிவில்லாத் திரையாந் தீர்த்த முலகத்து வழக்க மெல்லாங்
கழிவுறுஞ் சரியை யென்றே காணுவ துண்மை யாமே."

"சித்தர்முதல் முனிவர்பல தேவ ரெல்லாஞ்
சிறந்துபெண்டு பிள்ளையொடு செகத்தின் மீது
முத்தரெனப் பெயர்பெற்று வஞ்சகம்பொய் சூது
முழுதுமடங் காக்கோப முறையே கொண்டு
இத்தலத்தி னூலனந்த மிசைவாய்ச் செய்தார்
இமைப்பொழுதிற் றமக்குவரு மிடர்கா ணார்கள்
அத்தனென்ற கர்த்தனுள தாகத் தேடி
யலைந்துடல மழிந்தவரு மவமா னாரே."

இச்செய்யுள்கள் எந்நூலிலுள்ளன? இயற்றியோர்யாவர்? எனச்சித்தர்வினுதல்.

என்று சிற்சில பாடல்க ளவனெடுத் தியம்ப
நன்று மற்றந்த நூற்பெயர் யாதுகொ னவின்று
ரின்ன ரென்றெமக் கியம்பென வியம்புமா லெந்தா
யொன்ற வேசில நான்முன்ன முரைத்தன மன்றே. (௧௭அ)

முத்துச்சாமி முனிவர் தாஞ்செய்த "விஞ்ஞானதீபத்"துள்ளதென்றது.

மற்ற தன்பெயர் விஞ்ஞான தீபமா வகுப்ப
ரிற்ற தென்றதன் பெருமையை யியம்பரி தென்று
சொற்ற தன்மையைக் கேட்டிடுஞ் சித்தமூர்த் தியுஞ்சொல்
அற்ற நம்மொழி யான்வரு நூலினை யோதின். (௧௭௯)

விஞ்ஞானதீபகண்டனம்.

முதலு டன்வழி சார்பென மூவகை யியல்பின்
விதமி லாமையிற் பருத்திநூ லோவியன் சிலம்பி
கதுமெ னத்தரு கின்றநூ லோகலை வல்லோர்
மதியி னூற்கொண்ட மரபினை யழித்திடு மாற்றல். (௧௧௦)

பொய்ம விந்ததோர் சுவடியே யல்லது புந்தி
மெய்ம விந்திடக் கூட்டிடா வகைதனின் மேவுந்
தெய்வ சிந்தனை சிறிதுமி லாய்செப்பு நூந்நான்
மைம விந்தமை யாலது வார்கட லுலகில். (௧௧௧)

துஞ்சி னூர்பொருட் டேகினோர் சொல்கிற்பர் யாண்டும்
விஞ்சி டும்பெருங் காரியத் தேகினே மென்றே
யிஞ்சு ரைத்திடு முறைமைபோ லும்மென விசைத்துச்
செஞ்சொ லாற்பினுஞ் செப்புவான் றொடங்குவர் சித்தர். (௧௧௨)

உண்மை நூலுயர் வுரைத்தல்.

தேக மிந்தியம் பிராணனே செழுங்கர ணம்மே
யாக விங்குள சமயமா மாழ்குழி தூர்க்குஞ்
சோக மேதவிர்த் திடுஞ்சித்தி யாரெனுந் தொன்னூல்
நாக வீருரி யான்பரம் பொருளென நாட்டும். (௧௧௩)

சித்தி யாரின்மே னூலிலை சிவனுக்கு மேலா
வைத்த தெய்வத மிலையெனப் படுவது வழக்கே
யித்த ரைக்கணே யியல்பென வியம்பினை யெல்லாம்
பொய்த்த நுஞ்சிறு நூல்பொது ளியசிறி தாய்வாம். (௧௧௪)

பிரபஞ்சம் கர்த்தாவையுடைத்தென்பது.

மண்ணி னிற்கடா திகளெலாந் தோன்றிய வகையே
யெண்ணு பூதகா ரியமதே வுடலென விசைத்தாய்
கண்ணு மம்மனுங் குலாலனாற் காரியப் படல்போ
லண்ண லாலிந்த வகிலமுங் காரியப் படுமால். (௧௧௫)

சேதனம் அசேதனத்துதியா தென்பது.

நீயு ரைத்தவைம் பூதங்க ளறிவென நிகழ்த்தின்
மாயி ரும்புவி நீர்கனன் மற்றவை யறிவென்
றேயு மேயந்தப் பூதத்தின் றோற்றமிவ் வுடலென்
றுயி னேர்சமத் துவப்படி னறிவெவன் காண்பாய். (௧௧௬)

வாயு வாகிய பூதமே பிரிந்திடின் மரபா
னேயு நல்லறி வுணர்ந்தில னென்பைநீ யுயிராம்
வாயு வோடுட னிகழ்வுழி வயங்குறித் திரையிற்
சாயு நண்ணிசிப் போதுதன் னறிவுகாண் கிலதென். (௧௯௭)

ஆத லானுயர் பூதச்சேர்க் கையினறி வென்ப
தேது மின்றியே தோன்றிடா திதுமுறை சரத
மோதில் யாவுமே யியல்பென வுரைத்தனை யுணராய்
மாத ராருடன் மருவியே நின்றிடு வேலை. (௧௯௮)

மகிழ்வு மற்றது நீங்கிய வழிப்பெறுந் துயரு
மகலி டத்தினி னுவதென் னையவித் துயருஞ்
சுகமு மேவினை வழியிடைத் தோன்றிய வன்றோ
நிகரின் மாமதி நிலாக்குறை நிறைவினை நேரும். (௧௯௯)

மறுபிறப்புண்டென்பது.

என்ன ரும்பிறப் பினிலிந்த மானிட யாக்கை
மண்ணின் வீழ்ந்திடின் மற்றுமோ ருடல்வரு வதுதா
னன்ன லெங்ஙன மென்றனை நாடுறுங் காலை
ஒன்னு றுங்கினை வினைமறந் துற்றிடுங் கனவில். (௨00)

உனையெ டுத்திவ ணுழிதரு முடம்புகூ டுவதும்
நினையும் வேலையின் னெங்ஙன மங்ஙன நிலவும்
வினையு டற்பொறை தனைநனி மேவுமால் வேறு
கனைக டற்புவி யிடையிவன் கழறலென் னேயோ. (௨0௧)

மனையின் மேயினு னம்மனை கேடுள தாயிற்
புனையும் வேறொரு மனையிடைப் புகுதலே போல
வினையு டற்பொறை கேட்டினை மேவிய போது
மனையன் கேட்டினை யெய்தில னுவது திண்ணம். (௨0௨)

இறைவன் காணங்களா லறியப்படாமை யென்னை?
யென்ற முனிவர்க்குச் சித்தர் கூறல்.

இறைவன் ஞுனுள னென்றிடி னென்றுனை விழியாற்
றறையிற் காணுனுத் தன்மைசாற் றுதிரென நின்றன்
கறைகொள் கண்களுக் கன்னவன் காணுனுப் பரிசா
மிறைவ னின்றெவ னெங்ஙன மிவணியம் புதியால். (௨0௩)

இறைவனைப் பசுகரணங்கள் காணு வென்பது.

இன்ன வாறுபோற் காணுணு திலகிய மனமே
மன்னு மெய்ப்பொரு ளென்றுநீ கொண்டது மனத்தான்
றுன்னி டும்மந்தக் கரணம தன்றுகொல் சொல்லி
னன்ன திவ்விழிப் புலமறி யாததை யன்றோ. (உ0௪)

இந்தி யத்தொடு முடலினை யாய்கையி லென்று
மிந்த யாக்கையொன் றனையுமே யிவணுண ராதா
லந்த யாக்கையை யறிந்திடுங் கண்கண்மற் றவற்றைச்
சிந்தை யாதிய கண்டிடுஞ் செப்பிடு மவற்றை. (உ0௫)

முந்து சீவனுர் கண்டிடு மொழியின்மற் றதனை
யெந்தை கண்டிடு மிகபர நல்குமவ் விறையை
யந்த வாருயிர் காண்கிலா தாருயிர் தன்னை
முந்த வேயந்தக் கரணங்கள் காண்கிலா முறையால். (உ0௬)

கரணந் தன்னையே கண்கடாங் கண்டிடா வவற்றை
மருவு மிவ்வுடல் காண்கிலா தையகேண் மற்று
மிருவி ழிப்புல னுடலையே காணுமிக் கரண
மிருக ணேடுட லென்பன காணுமா லியம்பின். (உ0௭)

பொருவி லாவுயிர் பொறையுட லோடந்தக் கரண
மிருவி ழிப்புல னென்பன காணுமா லிறையோ
கரணங் கண்ணுட லுயிரையுங் காணுமாற் கருதின்
பரனைக் காண்கிலா வாருயிர்த் தொகுதிகள் பார்க்கின். (உ0௮)

கரண மீசனே டுயிரையுங் கண்டிடா கண்கள்
கரண மீசனே டுயிரையுங் கண்டிடா வுடலுங்
கரண மேமுத லாகிய நான்கையுங் காணு
பொருளை யோர்ந்திடி னேனிறை புலப்படா னென்னுய். (உ0௯)

இன்ன வண்ணநஞ் சித்தனு ரியம்பியே முடிப்ப
வன்ன மாண்புரை கேட்டவம் முத்துச்சா மிப்பேர்த்
துன்னு மாமுனி சொல்லுவான் சுருதிவல் லீர்நீர்
பன்னு கின்றதே வுயிர்வினை பிறப்புள பலவும். (உ௧0)

முனிவர் இறைவனை ஒப்புக்கொண்டு சாதனங்களைச் சங்கித்தல்.

உண்டெ னப்பெரி துணர்ந்தன னேனுமிங் குளுற்று
மெண்ட ரும்பல மந்திரம் விரதமே யாகம்
பண்டை நற்றல தீர்த்தயாத் திரைமுதற் பார்க்கின்
மிண்ட ராகிய வந்தணர் கட்டென விளம்ப. (உகக)

சித்தர், இறைவனையடைதற்குச் சரியாதிகளே சாதனமென்பது.

அன்ன தன்றவை விளக்குது மரன்றனை யடையு
நன்னர் மார்க்கமோர் நான்கென வகுத்திடப் படுமான்
முன்ன வற்றொரு சரியையிவ் வுடம்பினை முதல்வன்
றன்ன தாக்குகை யென்பது சாலவு மறிதி. (உகஉ)

கிரியை யென்பது கிளத்திய விந்தியந் தம்மைப்
பரன தாக்குகை யோகமென் பதுபற்று மந்தக்
கரணந் தன்னையச் சிவனதாக் குகைகவின் ஞானஞ்
சரத மாமுயிர் தனைச்சிவன் றனக்கருப் பித்தல். (உகங)

இந்த நால்வகை மார்க்கமு மன்பெனுங் கயிற்றாற்
பந்த மாகியே நடந்திடு மிவற்றது பான்மை
நந்த ஞானபாற் கரோதய மாதிநா னவிலு
மூந்து நால்களு மளவின்றி முழங்குவ காண்டி. (உகச)

வேத மேமுத லாகிய நூலெலாம் விரித்த
சாத னம்மெலாந் தனையின்றி யாவர்க்கு மின்றாங்
கோதி லாச்சிவாக் கினியினைக் குற்றமே பகர்ந்தா
யாதி யாமுனக் குரைக்குது நின்னறி வென்னே. (உகரு)

கருது மெவ்வகை மூர்த்தியைப் பதிட்டித்தல் காணின்
மருவி டுஞ்சிவாக் கினிமுன்னே வழிபட வேண்டுந்
திருவெ லாந்தரு மவ்வழி பாட்டின்பின் றீர்த்த
திரையு மாகடத் தாபன பூசனை நேரும். (உகசு)

அன்ன தன்பினன் றேதிரு மூர்த்தத்தி னடைவாய்த்
துன்னி டத்தகு மூர்த்திமான் விளங்குத றுணியாம்
பன்னு மிச்சிவாக் கினியொடு படர்சரி யாதி
நன்னர் போதுபூக் காய்கனி போன்மென நாடி. (உகஎ)

அரும்பைக் கிள்ளிடி னலர்முத லாயவுண் டாத
லுரிமை யின்றெனக் கருதிடா வொலிகடல் சூழ்ந்த
தரணி யிற்சித்த நூலினைத் தாழ்வுகூ றினைநல்
குரவ னேநிதிக் கோன்பதங் குறைசொல லொக்கும். (உ௧அ)

வே று.

சித்தகணச்சிறப்பு.

இந்தநல் வேதமோடா கமமென்னு மிருங்கலைக
டந்த சிவன்றுளாற் றனைநேரப் புவிமிசையே
வந்தவா ரூரன்முன்னர் வகுத்தபதி கத்தினிடஞ்
சந்திரன் றேய்நொடித்தான் மலைசாற்றும் பதிகத்தினே. (உ௧௯)

மந்திர மேவடிவன் றனைமானுறு மாலயனு
மிந்திர னாதியரும் பணிசெய்ய வெழில்வெள்ளைத்
தந்தியி னுவலர்கோன் வரத்தம்மினத் துட்பெரிய
எந்தையி டம்பிரியா வன்பினீ தரு ளாயெனவே. (உ௨0)

மந்திர மாமுனிவ ரிவனேரென வெம்பெருமா
னந்தமா ரூரனென்று னொடித்தான்மலை யுத்தமனென்
செந்தமி ழாரணமே ஞனிசெப்பு முனிவர்திற
மெந்த நிலையினரு மளவிட்டிட வேலுமதோ. (உ௨௧)

முனிவர்க ளினுயர்ந்தோர் முழுதும்முணர் மாவிருடி
தனிவரு நாற்பத்தெண்ணா யிரங்கோடியர் தம்மின்மேலா
யினிதுறுஞ் சித்தர்கணத் தொகையேழிரு கோடிகட்கு
மனதுவந் தேயருள்செய் மலையாசலம் வாழ்முதலே. (உ௨௨)

இத்தகை யானசித்தர்க் கிறையேயரு ளாயுண்மறை
வித்தகத் தன்மையெல்லா மிந்தமேதினி யோர்க்கிரங்கிச்
சுத்தச மரசநன் னிலைசூழ்கற்ப மாதியவும்
பத்திநி லைவிளக்கும் சித்திப்பான்மைக ளுந்தெரித்தே. (உ௨௩)

நின்றிடு நூல்கள்பல நிகழ்த்தும்படி யிப்படியிற்
சென்று நடைபெறுமாற் றிகழும்மணி மந்திரத்தோ
டொன்று மவுடதசோ திடமாதிபு ளகலைக
ளின்றுள வற்றுமெழிற் கனிதந்தோ டொடுத்துரைக்கும். (உ௨௪)

இறப்பு நிகழ்வெதிரா மிருங்காலமோர் மூன்றனையுங்
குறிக்குஞ் செயலுணர்த்தும் பலகொள்கைக ளிப்பொழுதுந்
தறைக்க ணிகழ்வதுவும் வைப்பைத்தனாயி லெடுப்பதுவு
முறத்தகு மந்நூலின் னுயரும்பிர மாணமன்றோ. (உஉரு)

பொய்யிவை யென்றுசொல்லப் புகலுங்கரும் பென்பதுதான்
வைய மிசைகசக்கும் வகைபோலவந் நாத்திகனு
மையவெள் புண்ணியத்தாற் பிரமாணம் பலவறைந்தாய்
துய்யநின் சேவையிவண் டுணையாகவுங் காணப்பெற்றேன். (உஉசு)

ஆபினு மந்திரத்தா றரும்புமசை யாதெனவே
சேய னெடும்பொழுதென் சிந்தைத னினினைந்தேன்
நீயக மேமகிழ்ந்து நெறியிற்காட்டி னன்னமனு
மேயநற் றெய்வதமும் பிறவும்மெய்மை தானெனவே. (உஉஎ)

சொல்லி முடித்திடலுந் துலங்குஞ்சித்த மூர்த்திகளு
நல்லது காட்டுதுமா லெனநண்ணியு ரைத்திடலும்
புல்லுமப் பேரவையுட் பொலிந்துற்றவர் யாவருமே
சொல்லுமிக் காலத்திலே துரிசிற்றவஞ் செய்தோமென. (உஉஅ)

வேறு.

நாலாவது யாகம்-வைகை.

ஞானிகடம் விவகார நல்லுலகி னுபகார
மானமொழிப் பொருள்சிந்தித் ததுவாகு மென்றியாரும்
பேனவா ரிதியமிழ்ந்தா ரன்றுபெரி தொருநாலா
மேனவேள் வியையாற்று வியன்சமயம் வாய்த்ததுவே. (உஉகூ)

அன்னபொழு தினிலடிய ராலவாய் வடபாங்கர்த்
துன்னுவைகை யின்னடுவே துலங்கியதோர் மகச்சாலை
நன்னயமாய்ச் செய்துசித்த நாதரிடந் தெரிவிக்க
மன்னுதிரு மலைச்சின்ம யானந்த ரொடுமாதோ. (உருO)

சுந்தரசாத் திரிகளெனுந் துகளிலரு மறையோனு
மந்தணர்பல் லோருமரும் பொருளீட்டி னோர்புலவர்
விந்தைமிகு நிலமுடையார் வேள்விக்கே யெய்துதல்கண்
டந்தமிலா வானந்தக் கடல்படிந்தா ரறவனுர். (உருக)

அந்தரர்தும் துமிவ்வானின் றம்ரரெலா மார்த்திடல்போ
லந்தமினுன் மறையோர்க ளருஞ்சாம நமகமொடு
சிந்தைமலி சமகஞ்செப் பிடுமோசை திசைபரவ
விந்தவா ரிதியோசை யிகன்றுவரி யடக்கிற்றே. (உ௩உ)

மூன்றுங்கா லத்துமருண் முத்துச்சா மியன்வந்தா
ன்றேன்றுமர கதவல்லி துணையடிப்பீ டந்தனக்கே
ஏன்றவபி டேகவலங் காரதீ பந்துபம்
ஆன்றமுறைப் படிசெய்தங் கவியளிக்குந் தருணத்தே. (உ௩௩)

சாரதிபுரம் சுதரிசனமையர் குழந்தை சர்ப்பங் கடித்திறந்தது.

செய்மைக்கட் டோன்றியுத்தி யோகநிலை தனிற்சிறந்தும்
வாய்மைமுதற் குணங்கள்பல வாய்ந்தசா ரதிபுரத்துத்
தூய்மையுறு சுதரிசனச் சுகுணவே தியனெருப்பிற்
காய்விடப்பாம் பொன்றவன்றன் கான்முளையைக் கடித்ததுவே. ()

எழுவேகம் விஞ்சியவற் கிரண்டுநாள் வரைவல்ல
செழுமணிமந் திரமருந்துச் சிகிச்சையினுந் தீராமே
மழுவாள னருளிதுவே மற்றினியென் செயலாகும்
பழுதிவண்வைப் பதுதகனம் பண்ணுவதே கடனென்று. (உ௩௫)

வேறு. சித்தர்பால் ஓரந்தணன் முறையிடல்.

முன்னொருநா ளைஞ்சித்த னர்க்குமுத்துச் சாமியெனு
நன்னயமின் முனிவனுக்கு நடந்தபரி சறிந்திருந்த
பின்னுநூன் மணிமார்பன் பெருந்தகையந் தனைன்மைந்தன்
றன்னைவிடந் தீண்டியவா தவமுதல்வர்க் கறிவித்தான். (உ௩௬)

தெய்வவழி யாயிச்சேய் தானுய்யு மாறுளதேற் றெரிவோமென்று
மெய்வழிநின் றிடுமறையோன் வேள்விச்சா லையில்வந்து மேவிப் பால
அவ்வழியு பாயமுணர்த் தெனவோலிட் டழைப்பவுயர் சித்த னாரும்
பொய்வழியி லாய்தேவி கருணையுயிர் புணர்த்துமெனப் புகல்வ தானார்.

சித்தர் பரிட்சித்துவரச் செய்தமை.

ஐயகே ளவமிருது நானமா டிடினன்றி யங்கு வாரோஞ், செய்யும்வித
மொன்றுரைப்போஞ்சித்தசாத்திரப்படியேதெளிதிரென்று, பையவே
சுந்தரசாத் திரியினைமெல் லுரையானீர் பரிவிற் சென்றெங், கையமரும்
பிரம்புகொண்டங் கடித்திடனுந் தடித்தமெனிற் கடுகி யிண்டே. ()

சேயுடனே வம்மினெனச் செப்பிவிடுத் திடவருளின் றிண்மைதேறித்
தாயதனைத் பிரிந்தகன் றெனப்பரிந்து சவந்தாங்கு மயானஞ்சார்ந்து
தீயிடத்தே யிடவைத்த பிணந்தன்னைச் சித்தனுர் செப்பு மாற்று
ளுயிகருணையைக்கினைந்தங் கடித்திடலும் தடித்ததுகண் டகமகிழ்ந்தே.

முத்துச்சாமி முனிவருக்கு மந்திரத்தின் உண்மை காட்டல்.

ஏமவரை வல்லியரு ளிரினைச்சிறிது முணராத வினை முத்துச்
சாமிமுனி வனுமக்கா னுயிரிழந்த சேய்பிழைக்கிற் சனனமுண்டென்
ருமறைசொன் னெறியுண்டு தெய்வமுண்டு மற்றவற்றுக் கையமில்லை
சேமமென யானுரைத்த நாற்பொருள்க ளெல்லாஞ்சி ரழிந்த தென்
[ருன். (உசo)

வேறு.

சங்கையில்லவன் ருனுயிர் தணந்தவச் சேயின்
அங்க மாரடை யாளங்கண் டடைவுடன் ருழா
தங்கு மன்னவ னுடலொரா டையிற்கொடு சாரச்
சங்க ரிக்கொரு தொண்டராஞ் சித்தர்முன் சார்ந்தான். (உசக)

வேறு.

வேதியன்ருன் வந்தவா விளம்புவா னுயிர்தணந்துந்
தீதிலா வுடல்கொடுவந் தற்றனரெஞ் செல்வமே
கோதிலாக் குணக்குன்றே குறிக்கொண்டிங் கருடியென
ஆதிநா யகியருளா லடைவதுமேற் காண்டியென்று. (உசஉ)

வேறு.

வேள்வித் தீயிடைத் தோன்றுவெண் ணீற்றொடு தீர்த்த
மாள்வ சத்திடைக் கொடுவந்து நல்கிட வமைத்தே
யேழ்நி லத்தரும் போற்றுறும் பச்சைமா மலையான்
கேள்வி யாற்பணித் ததுவெலா மெய்யெனிற் கிளர்ந்தே. (உசங)

ஷை குழந்தை உயிர் பெற்றெழுதல்.

“நச்ச ராவிட நாசமா” மென்றசொற் பாடல்
பச்சை மாமலைச் சித்தரைப் பணிந்துநின் றன்பா
லுச்சி மேற்கரங் கொடுதொழு தேத்திட வவர்க
ணச்சி நின்றிட வெழுந்தன னந்தநந் தனனே. (உசச)

அந்த மாமறைப் புதல்வனுந் துயிலுணர்ந் தவன்போல்
வந்து சித்தரை வாழ்த்தியே வணங்கிட யாரும்
இந்த நல்லதி சயமிவ ணிகழ்ந்தவா றென்னே
மந்தி ரத்திரு மேனியா ளருள்வல மென்றார். (உசரு)

*அன்று நாவினுக் கரசுதம் மன்பரா மறையோ
ரின்சொன் மைந்தனை யெழுப்பலு மிணையிலா வம்மை
தன்று ணைக்கொங்கைப் பாலுண்ட தனிச்சிவக் கன்றும்
பொன்றி ணிந்ததோ ளரசர்பின் னேனையு மெழுப்பி. (உசசு)

தந்த வாறுநா மெழுத்தினிற் கண்டனஞ் சான்று
நந்தங் கண்களாற் கண்டிலம் நந்தவப் பயனு
மிந்த நாள்வழிப் புலக்கெதிர் கண்டன மென்றார்
மந்த முத்துச்சா மிப்பெயர் முனிவனு மகிழ்ந்தே. (உசஎ)

நாம்பி ழைத்திட வெழுந்தநல் லருள்வடி வென்றே
தாம்ப ரிந்தடி வணங்கியே தண்டமிழ் மொழியாற்
சாம்ப விதிருத் தாணிழ றன்னையே சாருந்
தேம்ப மூத்தசொற் சித்தசா மியைச்சிந்தை செய்தே. (உசஅ)

முத்துச்சாமிமுனிவர் சித்தமூர்த்திகளைப் பாடல்.

பஞ்ச ரத்தின மாலிகை பாடியே சித்தர்
தஞ்ச ரன்சர ணுமெனத் தான நுக் கிரகம்
விஞ்ச வேகொடு விளங்கினன் மேன்முறை யாக
நெஞ்ச மர்ந்தவ பிருதநா ளமுதெடி தாடி. (உசகூ)

வருவ தற்குளே சனத்திரள் வந்தடைந் திடக்கண்
டொருவ ரும்முண ராவகைச் சாலைபி னுழைப்போந்
தருளு ருக்கொளும் வயிரவ பூசனை யாற்றி
யரன தாலவா யடைந்துபின் சுருளியை யடுத்தே. (உருo)

தலைச்சுருளிமலையின் வரலாறு.

திங்கள் சூடிய சிவபிரான் றிருமணக் கோல
மிங்கு ளாருயத் தமிழ்வளர் மதுரையி னியற்ற
உங்கெ ழுந்தகுன் றோதரன் றகையடக் கிடுமால்
கங்கை வாழ்சடை யவிழ்த்ததச் சுருளியங் கல்லே. (உருக)

* புறம்பியம் திருவிளையாடற்புராணத்தும், மருகல் பெரியபுராணத்தும் ஸ்ரீசம்பந்தமூர்த்திகள் செட்டிமக்கள் விடந்தீர்த்தமை காண்க.

சுந்த ரப்பிரா னவிழ்த்தகா ரணத்தினாற் றுலங்கு
மிந்த மாமலை தலைச்சுரு ளிப்பெய ரேற்கு
மந்த ரத்தரு யோகருஞ் சித்தரு மமரச்
சந்த மார்தரு சைலத்தை யடைந்தனர் சார. (உ௫உ)

சித்தரை இராசப்பநாயக்கனூர் ஜமீந்தாரணி வழிபடல்.

சென்று ழிப்பல பிறவியிற் செய்தபுண் ணியத்தாற்
றன்று ணைப்பதந் தாழிரா சப்பநா யகனூர்
துன்றி டுஞ்சமீந் தாரணி தொழுதன ளடிகட்
கன்று வேண்டுவ வேண்டுவ நல்கிட வமர்ந்தே. (உ௫௩)

கருணையானந்தவிருடியென்பவரின் ஐயமறுத்தல்.

கருணை யானந்தன் கம்பம்வாழ் கம்மிய னாதித்
திருவி லார்சிலர் மயக்கங்க ளுலகுயச் சிந்தி
மருவ வன்னவர் வணங்கிட மகிழ்ந்துறை காலை
அரிய நாயகிக் காற்றைந்தாம் வேள்வியு மணுக. (உ௫௪)

யாகசாலைத்தானம்.

நீடு நற்கயி லாயமாம் புடவென நிகழ்த்து
மோடு நீர்ப்பெரு மருவிவீ ழிடத்தரு குவந்து
நாடு வேள்வியின் சாலையை நயந்தினி தாற்றிக்
கூடு மன்பர்கள் குருகையார்க் குணர்த்திவேண் டினரால். (உ௫௫)

யாக சாலையிற் புகுந்தகஞ் சித்தனு ரகில
லோக நாயகி திரிபுவ னம்பிகை பீடத்
தேக மாமனத் திருமுறை பூசனை யியற்றிப்
பாக வாகுதி யளித்திட விரும்பினர் பண்பால். (உ௫௬)

யாகசாலைமேற் புலிவரல்.

சித்த மூர்த்திக டஞ்சிரந் தனக்குநே ராக
வித்த ரைக்கணே யரிய விவ்வரை யகத்துச்
சத்த மொன்றுகேட் டிடிமுழக் கென்றெணிச் சாலா
பத்தி லேயனை வரும்பின்னு வாரெனப் பகரும். (உ௫௭)

பெரிய சொற்பழு தாகிடா வண்ணமே பேணி
யருகி ருந்தவர் தலைவிரி சோலமா யகலப்
பொருவின் மாமகச் சாலைபைம் புல்லினாற் கரந்த
பரிச தாதலிற் கண்டனர் புலிபடர்ந் ததுவே. (உ௫௮)

"உலகி னெப்பொரு ளும்முன துருவமா" புளரீ
யலதெ னக்கொரு துணையிலை யெனுமருந் தமிழால்
நலமெ லாந்தரு மம்பிகைக் கன்னது நல்கத்
தலமெ லாநடு நடுங்கிடத் தர்விய புலியை. (உருகூ)

வியாக்கிர சமனம்.

சித்தர் கண்டுளங் கவன்றுநஞ் சிவையிரு பாதப்
புத்த லர்க்கணே புந்தியை யிருத்தியப் புவனை
மெய்த்த வேள்விசெய் நாட்டத்தி னிருந்திட விமலை
அத்த ரக்கினைக் கணத்தினி லழித்தன ளம்மா. (உசுo)

கடைய தாகிய காலத்து வைகறை யாகப்
படைசெ றிந்தபை ரவிபணி பார்ப்பதி பதத்தே
தடைப டாதுபூ சனைசெய்து தழலிலா குதியிட்
டடைவின் முற்றிடச் சனத்திரள் கண்டதி சயித்த. (உசுக)

அந்தில் யாவரு மிரவினவ் வரிப்புலி யமலை
யிந்த மால்வரைப் பாங்கர்க்கேட் டனரிசைந் தாங்கு
வந்து நாடவும் வாய்பிளந் திறந்தவேங் கையைக்கண்
டுந்து மிவ்வரு ளம்பிகை செயலென வுவந்தார். (உசுஉ)

இவ்வ ரும்பெரு மற்புத மிந்நா டெங்குஞ்
செவ்வி தாகவே பரந்தது திரண்டவச் சனங்கள்
டெவ்வ மின்றைந்தாம் வேள்விமன் முடிந்திட விசைந்த
வவ்வி டத்துறை ராவகை யிருந்தன ரறிவர். (உசுஙு)

மாண்ட வப்புலி யுரியினை வயங்கிடப் பாட
மாண்ட யங்கிடச் செய்துமற் றதனைநம் மடிகள்
ஆண்டு வைகிய விருக்கையை யடைந்தடி பணிந்தே
யேண்ட ரும்மொரா சனமிது கொள்கவென் றிந்தார். (உசுச)

சிவன்ற னுயகி தெய்வநா யகிசெக மீன்ற
புவன நாயகி பூதநா யகிபுகல் சுருதி
சவண நாயகி சந்திர மண்டலத் தமருங்
கவன வாளரி யூருநா யகிதனைக் கருதி. (உசுரு)

சித்தர் கோம்பை, தேவாரத்துக்கெழுந்தருளல்.

சிரு ளார்பலர் சூழ்ந்திட வவ்விடந் தீர்ந்தே
பாரு ளோங்கிய கோம்பையிற் பண்புள ளுகிச்
சாருஞ் சண்முக வேலனில் வேண்டிடத் தங்கித்
தேரு கின்றதே வாரமா நகரையுஞ் சேர்ந்தார். (உசரு)

சித்த ரன்னகர் சேர்ந்ததுந் தெரிந்துள மகிழ்ந்து
வித்த கஞ்செறி மந்திரத் தனத்தில்வீற் றிருந்த
உத்த மன்பழ னிக்குமா ரென்பவ னுவந்து
சத்தி தன்னருள் பெறுஞ்சித்த சாமிதாள் வணங்கி. (உசஎ)

தனது மாளிகைக் கெழுந்தரு ளென்னவுந் தயவான்
மனது கந்துநற் சித்தருஞ் சிலதினம் வதிய
நினைவு வாக்கொடு காயத்தா னெறிதவ றுதே
யினமு டன்பணி செய்துபா வினம்பல வியற்றி. (உசஅ)

சித்தர் உத்தமபாளையத் சேர்தல்.

திருவ ருட்பெருஞ் செல்வமாம் யோகநன் னிலையை
வருமொ ருசில தினத்துளே மகிழ்வுட னேதி
பெருமகிழ்வினெ டங்கர் தனிலுளோர் பேண
வொருதிருநக ருத்தமபாளைய முற்றுர். (உசகூ)

மக்கமீராலெவைராவுத்தர் வரவு.

சேர்ந்து ழிப்பல பிறவியிற் செய்தபுண் ணியமே
யார்ந்து ருக்கொடு வந்தது போன்றவ ரருளைத்
தேர்ந்து நாடுவோர் சாத்திரச் செம்பொருள் பலவா
யோர்ந்து ளாரென வுயரிய பெயரிய லொருவர். (உஎ0)

மாக மக்கமீ ராலெவை ராவுத்தர் மரபின்
போக மிக்குறு சித்தர்நாற் கருத்தினை யுணர்ந்தார்
சோக மேதவிர் பத்தடை யாளங்க டலங்கும்
போகர் நேர்சித்த மூர்த்தியை நாடியே புக்கார். (உஎக)

வந்த ராவுத்தர் முறையினல் வணங்கியே யருள்பெற்
றுந்து மன்பினு லளவளா வியபின்ன ருரைப்பார்
எந்தை யான்றனித் துறைவிட மெழுந்தரு ளென்னச்
சந்த மார்கட மலைக்குன்டு நோக்கியே சார்ந்தார். (உஎஉ)

சித்தர் கடமலைக்குண்டுக் கெழுந்தருளல்.

வளம்ப டைத்தவக் கிராமமுற் றுழித்தவ வள்ளல்
உளங்க ளித்துறை தக்கவாச் சிரமநன் றோர்ந்து
விளங்க வேயமைப் பித்தபின் னடிகளை வேண்டிச்
சளங்கெ டுத்துளா யெழுந்தருள் கென்றிடச் சார்ந்தார். (உஎ௩)

இராவுத்தரின் சங்கைநீக்குதல்.

தங்கந் நாளையி லிராவுத்தர் தாம்படித் திட்ட
வங்க யோகமுப் பூவருங் கற்பமா தியவிற்
றங்க னுள்ளவை யம்மெலாஞ் சித்தர்முன் சாற்றத்
துங்க முற்றவ ருண்மைசூழ்ந் தருள்செயத் துணிந்தார். (உஎச)

ஷியார் பொருட்டுக்கலைஞான தீபம்-நூ செய்தருளல்.

சீரெ லாமணித் திகழ்கலை ஞானதீ பத்தை
யாரு மன்பின லிராவுத்தர் பொருட்டருள் செய்தார்
சேரு மன்னவ ருடல்பொரு ளாவியென் செல்வ
மோரி னும்மதே யென்பணி கொள்கவென் றுவந்து. (உஎ௫)

இராவுத்தர் நரசிங்கபுரமென்னுங் கிராமமும், கடம்பன்குளத்தையும் முற்றாட்டாகச் சித்தர்க்களித்தல்

அன்ன மார்மயி லாடுபா றையினரு கதனிற்
றுன்மை சேர்தரு நரசிங்க புரமெனச் சொல்லு
மன்ன தும்மதைச் சார்கடம் பன்குளம் மதுவும்
பன்னு நன்செய்நூ றேக்கரும் பரிவுட னளித்தார். (உஎசு)

கொடுத்த வாவியல் பத்திர முடித்தது குறிக்கி
னடுத்த வற்சர மதிநிதி விகுர்திதேள் மூன்றும்
எடுத்த சிர்க்குரு கூர்ச்சித்த சபைக்கென விச்சை
விடுத்த சித்தர்தம் பெயரினுற் றந்தனர் மேலோர். (உஎஎ)

சித்தர் மக்கரா வுத்தர்பாற் சிறப்புட னிருப்ப
வத்த மேவரை போடிநா யக்கனூ ரமரும்
உத்த மத்தவ ரறிந்தவர்க் கண்டிட வுவந்து
வித்த கச்சுப்ப ராயநா யடுவைவேண் டினரால். (உஎஅ)

அங்கி ருந்தவர் நாயடு சித்தரை யடைந்தே
யெங்க டுன்பெலா மிரித்தருள் பாநவே யிகை
தங்கு மிந்தவூ ரன்பர்பாற் றயைசெய்து தாழா
துங்கெ ழுந்திட வேண்டுமென் றடிபணிந் துரைத்தார். (உஎகூ)

சிவராமசாமியோகிக்கு அநுக்கிரகித்தல்.

பணிந்து நிற்கையிற் போடிநா யக்கனூர்ப் பாங்கர்த்
தணிந்த வாமமார்க் கத்திலே தான்மிக வநுட்டித்
தணிந்த சித்தியுஞ் சிலவந்தோன் முழுதுமே யடையத்
துணிந்து பற்பல காவதஞ் சுற்றுமோர் துறவி. (உஅ௦)

நாக பட்டினம் வருசிவ ராமசா மியெனும்
யோக முற்றிடும் பெயரினோன் சித்தநூ லுரைத்த
பாக முற்றிலுந் தெரிதரப் பருப்பதந் தொறுஞ்சென்
றூக முற்றுமே மெலிந்துதன் பதியினை யடைந்தே. (உஅக)

எய்த்து நின்றிடுஞ் சமயமுன் னெய்துபுண் ணியத்தா
லுய்த்து ளார்பலர் கூடமலைக் குண்டினி லுறைந்த
மெய்த்த வத்துறு சித்தர்மேம் பாடுகள் விளக்க
வைத்த சிந்தையால் வந்தனன் சித்தர்தம் மருங்கே. (உஅஉ)

வணங்கி நின்றிடும் போதினிற் சித்தரு மகிழ்ந்து
குணங்க ளுஞ்சிவ ராமசா மியின்றனுட் குறிப்பு
முணர்ந்து தம்மடி யாருடன் சேர்த்துமோர் புதுப்பே
ரிணங்க வேவரும் பெரியசா மியென விசைத்து. (உஅ௩)

வாம மார்க்கத்தை மறக்கவுஞ் சித்தநூல் வழுக்கு
நேம மார்க்கத்தி னிலைக்கவுஞ் சுருளியி னிலவு
நாம நீர்ப்பெரு வைகையி னடுவனை யாணை
சேம மாகவே செயுமெனச் செய்தனன் தேர்ந்தே. (உஅ௪)

தேர்ந்த பின்னர்நஞ் சித்தநூல் கூறிய விதமே
கூர்ந்து பற்பல சாபநீக் கிடுங்குறிப் பென்ன
வோர்ந்த மந்திர முரைத்துப்பின் யோகத்துக் கனித்தா
யார்ந்த நன்மவுனுக்கரந் தனைபரு ளினரால். (உஅ௫)

போடிநாயக்கனூருக்குச் சித்தர் எழுந்தருளல்.

இற்றைக்கும் பிடியானைக் கன்றீன்று நனியுலவு மெழிலார் பெற்றி
யற்றைக்கும் வளநாடென் றனைவோருமெடுத்துரைக்குமருமைமேவி
எற்றைக்கு மயிலாடும் பாறையமர்ந் திடுசித்த ரிடமே முன்வந்
துற்றசுப்ப ராயநா யடுவுந்தன் னுளக்கருத்தை யுணர்த்த வோர்ந்தே.

சித்தர்க்கு வைரமிடல்.

கண்டமநா யக்கனூர் வழியாகக் கவின்போடி நகரைச் சித்த
ரண்டிடவு மந்நகருக் கரசியாங் காமுலம்மை யன்பின் வேண்டத்
தொண்டர்குழா நனிபரச வாண்டுவதி கையிற்கரவு சூழ்ந்து நின்று
தொண்டு செய்வார் போலபிந யித்தசுப்ரமணியப்பேர்ச்சுகுணமில்லி.

சித்தருக்கித்தனைபெருமையருள்விளக்கத்தாலெனவோர்சிறிது மோ
ரா, தத்தமதில் வைத்திருக்கு மௌட தத்தின் பேறென்றே யகத்து
ட்கொண்டிங், கித்தரைமே லதனைவயப் படுத்தினமக் கெலாநலமு
மெய்து மென்று, சித்தரோ டுள்ளிடு பகைகொண்டான் பின்வரு
தல் சிறிது மோரான். (உஅஅ)

கன்றுமனத்தினிற்றுணிந்துசித்தரையேகோறல்செயக் கருத்துட்கொ
ண்டு, குன்றினிகரத்தனையாம்வயிரத்தைப்பொடிபடுத்துக்கோதிலான்
பா, லென்றுநங்கள் சித்தனு ரருந்துதற்குக் கலந்திய வியல்பி
னுண்டார், நின்றயலார் சிறிதுணர்ந்து நெட்டுயிர்த்துப் பிரான
ருளை நினைந்து போற்றி. (உ.அகூ)

குழுமிநின்றார் துடிதுடித்துப் பரதவிக்கு மஞ்ஞான்று குறிப்பாற்
கண்டே, யுழுவற்பே ரன்புடைய சித்தமூர்த் தியுமெங்க ளுமை
யோர் பாகன், மழுவமருங் கரத்தானை மனநினைந்து மணிகண்டத்
தமுதே தில்லை, முழுமணிமன் றகத்துநட மாடியென் றவனைமுறை
யிட்டா ரம்மா. (உகூ0)

சித்தர் பதிகம்பாடிப் பழுதிலாதிருத்தல்.

“அன்றுவிடந் தனையருந்தி யகிலமெலா மோங்கவைத்த வரசே” யெ
ன்று, வின்றமிழ்ப்பா வினைப்பாடி யெப்போதும் போலவங்கு
னிருந்தபோது, தன்னடித்தொண் டர்களெல்லாஞ் சித்தரைக்கண்ட
வருளின் றகைமைநாடி, யென்னேயிவ் வயிரமுண்டுஞ் சித்தர்புடத்
திட்டபொன்போ லிலங்க லென்றார். (உகூக)

ஷியூர் ஜமீந்தாரணி சித்தர் திருப்பணிக்குத் திரவியம் அளித்தல்.

கொடியவனுல் வயிரமிட்ட குறிப்பதுவு மதனுலோர் குறைவ ராமே யடிகள்விளங் குதலுங்கண் டத்தலத்து மாந்தரெலா மதிச யித்துப் படிமீதி லிதுபுதுமை யெனப்போற்ற வங்ஙகனைப் பரிவோ டாளுங் கொடியிடைக்கா முனுவம்மை சித்தர்செயும் பணிக்காம்பொன் கொடுத்திட் டாரால். (உகூஉ)

சுப்பராயநாயடு மதுரைக்குச் சித்தரை அழைத்துவரல்.

பின்னரந்தச் சுப்பரா யனுநாய டும்முளத்துப் பெரிது நாடி, யென் னுடையா யறுபானுன் காடலரன் செயுங்கூட லெழின்மூ தூருக் கின்றணைது மெனவழைத்துக் கொண்டேக வான்டணுகி யிருக்கு மேல்வை, யன்னநா யடுதனக்குப் பேறனைத்து மிருந்தும்புத்தி ரப்பே றின்றி. (உகூ௩)

சித்தர் கொங்குநாடடைதல்.

தான்வருந்து கின்றமையைச்சித்தமூர்த் திகட்குணர்த்தத்தாமுமைய கூன்பிறையை யணிபுவனை யருளாலோ ராண்மகவுங் கூடு மென்று தேன்பொதிசெஞ் சொலினுசிர் வாதஞ்செய் தப்பதியி னின்றுஞ் சித்தர், வான்புனையுஞ் சிகரிகள்சூழ் வளர்கொங்கு நாடதனில் வந்து சேர்ந்தார். (உகூச)

சோழசிகாமணி ஜமீந்தார் சித்தரைத் தரிசித்தல்.

சித்தர்பெரு மிதமனைத்து மெல்லோருஞ் சொலக்கேட்டுச் செவிக் கிங் கார்வம், வைத்துடைய சோழசிகா மணிக்கரச னுமொருவன் மனமா சற்ற, வித்தகனுங் குருநாத செட்டியுங்கண் டடிவணங்கி விளைவிற் றம்மூர்க், சித்தருணம் வரவேண்டு மெனவேண்ட வேண் டுவதற் கிசைந்து சென்றார். (உகூரு)

பத்திவேண் டும்பழுத்த மனம்வேண்டு மடியார்மெய்ப் பத்திவேண் டுஞ், சுத்தசன்மார்க் கப்பெருநன் னெறிவேண்டுஞ் சிவனடியே தொழுதல் வேண்டும், உத்தமவெற் கித்தனையும் பெறத்தக்க தோர் வழியை யுணர்த்து கென்னச், சித்தமார்க் கத்தி னன்றி யிவையனைத் தும் பெறலரிதாந் தேர்தி யென்று. (உகூசு)

ஜமீந்தார்குருநாதசெட்டியாருக்குச் சித்தர் அநுக்கிரகித்தல்.

சின்னாளத் தலத்தினில்விற் றிருக்குங்காற் சித்தர்கணால் செவ்வே
போதித், தன்னைபுவ னைத்தாயி னருள்பெறுதற் கோர்மனுவு மநுக்
ரகித்து, மன்னர்கள்பற் பலருமிளம் பள்ளிநகர்ச் சாமியென வழு
த்தும் வண்ணம், பொன்னகருங் களிதூங்க வோமமும்பற் பலமுடி
த்துப் பொருந்தினரால். (உகஎ)

ஆறவதுயாகம் அகண்டகாவேரி.

அத்தனிடப் பாகம்வள ரம்பிகைக்கான் டாண்டுதொறு மவியீதற்கு
வைத்தமகக் காலம்வரச் சித்தருளக் குறிப்பறிந்து வழங்கும் பூமான்
மெய்த்தபுகழ்க் குருநாதன் வேண்டுவரைப் பொருள்கொடுத்து மெய்
வாக்காதி, யொத்ததிரி கரணங்களும்முவந்தே தொண்டுசெயற் குள
மகிழ்ந்தான். (உகஅ)

பாசுரமோதிப் பருமழை தடுத்தல்.

அகண்டகா விரியுடன்மற் றிருநதியுஞ் சேரிடத்தா வரண மைந்தா
மகம்புரியுஞ் சாலையமைத் தந்தணர்க ளனிசூழ வடியரோடு
திகம்பரியை நாடியே யாற்றுமகந் தனைக்குபிற்றச் செல்லனைத்து
நகங்குழியப் பொழிதலுக்குத் தலைப்பட்ட வவ்வேலை ஞான சித்தர்.

வேறு.

"எத்தனையோ துன்ப மியாகமதற் கெய்தியதிங்
தத்தனையுந் தாமகற்று மம்பிகை" யென் றோர்வெண்பா
சித்தர்பணிந் தேயோதத் திருவருளான் மழைநிற்ப
வித்தலத்தா ரும்வேள்வி யினிதாக முடிந்ததுவே. (௩00)

வேறு.

சக்கரத்தாபனஞ் செய்ய ஜமீந்தார் வேண்டுதல்.

இவ்வண்ண முடித்துமிளம் பள்ளியெனுஞ் சோமசிகா மணிக்க ணை
ய்த, மைவண்ண மணிமிடற்றுப் பெருந்தகையா லயப்பணிகண்
மரபி னூற்றிச், செவ்விதினங் குருநாதன் சித்தமூர்த் தியினருளாற்
செய்யவேண்டு, மெவ்வமறு மட்டபந் தனமென்றே யுளத்தெண்ணியி
ருந்து ளானல். (௩0௧)

அன்னவர்கஞ் சித்தரருட் சந்நிதியில் வந்தணைந்தெம் மடிகளேயா
னின்னிடம்வேண்டுவதொன் றிங்கதுபுரியின் றுயரமெலா நீங்கிடும்மற்
றன்னவன்ன முடிவதற்குக் காலமனு கியததுவே யாலயக்கு
மன்னுசக்க ரத்தாப னம்புரிவ தெனவடிகள் வழுத்த லுற்றார். ()

ஐயகேண் மதியதுதா னந்தணராற் செயப்படுவ தல்லா லெம்போல்
வையமிசை யந்தணரை யொழிந்தவர்கள் வகுப்பதன்றே வன்மை
யால்யான், செய்யவிசை வதுமெங்ங னெனச்செப்ப வன்னதனைச்
செவியிற் கேட்ட, பொய்யில்சிந் தையையுடைய சோழசிகா மணிக்
குரிசில் புகல்வான் மன்னே. (௩௦௩)

பிறப்பானே ராயிரமா மந்தணரு நினையொக்கப் பேச லாமோ, அற
ப்பாவை பங்கனருட் டிறம்பெற்றார் சாயைக ராகிலாரே, தன்றைப்
பால்யான் செய்தவத்தின் றன்மையினு லெழுந்திடுநீர் தாமேசெய்ய,
மறுக்காத வணமருண்மி னென்றிடச்சின் னுட்கழிந்து வயங்கச்
செய்தார். (௩௦௪)

சித்தர் சக்கரத்தாபனஞ் செய்தல்.

சித்தமூர்த் திகளும்யந் திரத்தாப னம்புரியுஞ் சிறப்பைக் காணப்
பத்தியொடும் பலதேயத் திருந்துவரு வோருமதன் பக்கத் துற்ற
வுத்தமர்பற் பலருமாங் காங்குள்ள யோகியரு மொருங்கு சேரத்
தத்தமக்கா மாளிகைக டமிலமைத்தா கமமுறையே தழுவிச் செய்
தார். (௩௦௫)

சப்ரிஜிஸ்டர் அப்பாசாமி முதலியார் தந்நகர்க் கெழுந்தருளச்
சித்தரை வேண்டல்.

அதுகாண வந்தவருண் முற்புரிபுண் ணியமுதிர்ச்சி யமைந்த வாற்று
லதிகுணபக் குவமடைந்தா ரறந்திக ழப்பாசாமி யெனும்பே ராளர்
மதியாருஞ் சடாடவியார்க் கருளுபதே சம்புரியும் வடிவேற் செங்கை
நிதிபோல்வார் திருச்செங்கோட் டினிலுத்தி யோகநிலை நிலைக்கப்
பெற்றார். (௩௦௬)

அப்பெயரார் நஞ்சித்த மூர்த்தியைக்கண் டழலினிடு மெழுகே யாகி
இப்படிமே லிரும்பினைத்தான் காந்தமிழுத் திட்டதுபோ லியையக்
கண்டு, செப்பிடுநற் பரிசதிக் கைக்குரிய ராக்கவக்தச் செம்மலுனு
மைப்படியும் பொழிலார்தன் னகர்க்குவர வேண்டுமென வருந்திக்
கேட்க. (௩௦௭)

## சித்தர் திருச்செங்கோடடைதல்.

சித்தருமெய் படியர்குழா மரவொலியார்த் திடச்செங்கோ டெய்து மேல்வை, யத்தலத்தார் விடபேதி யாற்பீடிக் கப்படவு மன்ன போது, முத்தர்திரு வருட்பொலிவு கண்டசில்லோர் முன்வந்து முனிவ ரேநீ, ரித்தருண மாந்தரெலாம் படும்பாட்டை யின்றுதொலைத் திடுக வென்றார். (௩௦அ)

## வெண்பாவோதி விடநோய் அகற்றுதல்.

அன்னதனை யோர்ந்தசித்த ரத்தலத்துப் பெருமானெம் மமையோ டுற்று, மன்னுமத்த நாரீசன் மலர்ப்பதத்தைத் துதித்தொருவெண் பர்வ குக்கத், தன்னிகரி னேயொழிந்த தன்மைகண்டு சித்தர்புகழ் தரையி லோங்கப், பன்னருஞ்சி ரப்பாசா மிக்குரிசில் சிந்தைதனிற் படிந்து நின்று. (௩௦௯)

## அப்பாசாமி முதலியாருக்கு அநுக்கிரகித்தல்.

அறியாமை கொள்பிரம சமாசமே தியாசபியே யான மார்க்கஞ் செறியாமை விட்டொழிய வவ்வவற்றின் குறையனைத்துந் தெரித்து ணர்த்திக், குறையாத சீர்மலிமுப் பொருளுண்மை தனையுணர்த்துங் கோதில் வாய்மை, மறியாருங் கரத்திறையே பரமெனுஞ்சித் தாந்த நெறி மரபிற் காட்டி. (௩௧௦)

## திருச்செங்கோட்டுக்குப் பதிகமோதுதல்.

சித்திரண் டெனவுணர்த்திச் சிவன்காட்டுஞ் சித்துயிரே காணுஞ் சித்தா, மெய்த்தசிவன் பேருணர்வ னுயிர்தான்சிற் றறிவனென விளங்க வோதி, யத்துவித மிரண்டன்மை யென்றுணர்த்தி யேயடை வி னுயிர்மெய் போல, வைத்தநிலை யுயிரோடிங் கிறைநிலையி தென நன்கு வகுத்துக் காட்டி. (௩௧௧)

அன்பினொடு சிவோகம்பா வனையுணர்த்தி யத்தலத்துக்கருந்தமிழ்ப்பா மன்னுதிருப் பதிகமுரைத் தெழுந்தருளும் போதுமுன மனத்துட் கேட்ட, யுன்னநினைத் திடுங்கொடியோ னமக்குவேண் டுவமொழி யினுயர்மருந்தே, யின்னதனைக் கவர்தனல மென்றெடுத்தப் புறப்படு த்தி யினிய னுக. (௩௧௨)

### சித்தர்க்கு வயிரமிட்டவன் திரும்பவும் மருந்தபகரித்தல்.

மேவுமன்பி னொருவரென நடித்துவரு கையிற்சித்தர் மேலன்புள் ளார், பாவியிவன் செயலனைத்தும் பரிவினொடு மெடுத்துரைத்துப் பன்னு வார்நம், மாவியலுந் துரைத்தனத்தார் முன்விடுத்துத் தன்டித்தன் மரபே யென்றி, யாவருமொன் ருயிசைத்தா ராவதனை யினிதுணர்ந்தெம் மடிக ளாரும். (௯௩)

### தீங்குநினைத்தார்க்கும் திருவுளமிரங்கல்.

இன்னுசெய் தாருக்கு மினியவே செய்யாக்கா லிருநீர் வைப்பி லன்னேவென் பயத்ததுசால் பென்றதிருக் குறட்பொருளை யறியீர் போலு, மன்னேனை யழைமினென வந்தாங்க னவன்றனக்கா வனவே நல்கி, யென்னேயிங் கிவன்றன்வினை யிருந்தவா வென்றேபின் னேகச் செய்தார். (௯௪)

அரும்பொருளா மருந்துமவ ரறியாமற் கைக்கொண்ட தன்றி முன்னர், விரும்பிவயி ரம்பொடித்துக் கீரத்திற் கலந்தளித்த விரோதிக் கும்மே, பரிந்தவனுக் கிவன்வேண்டு வனநல்கிப் பதியேகும் படியே விட்ட, விருங்கருணை யென்னென்பேன் கருணைதனக் கொருநிலமற் றிவனே யென்றார். (௯௫)

*“ திருக்கொடி மாடச் செங்குன்றா ரென்னச் செப்புமா நகரிடைத் தன்பா, லுருக்கமா ரப்பா சாமிமா லகத்தி லுறைந்திடு காலைவின் னளவுந், தருக்குலாங் குமர மங்கலந் தனிற்றன் சாற்றிய திருப்ப திகத்தி, லிருக்குமோர் பாவி லின்றைக்கே மழைபெய் திடுமெனப் புகன்றதை யுணர்ந்தே.

“எத்தனை கோடி யண்டமு மனத்தி லெண்ணிலோர் நொடியினி லியற்றுஞ், சித்தர்தம் பெருமைக் கடலிலோர் துளியுஞ் சேர்ந்திடாச் சித்தராய் மடமை, வைத்தபெட் டகமா மூடரிற் சில்லோர் மாரியின் றெய்துத லின்றே, லுத்தமர்க் குறைப்பாம் பழியெனப் பேசி யுற்றன ரன்னதை யோர்ந்தும்.”

---

* இதுமுதல் மூன்று செய்யுள்களும் சேற்றூர் வித்வான் கந்தசாமிக் கவிராயரவர்கள் பாடிய மகோபகாரவிளக்கத்திற் கண்டன.

"அன்னவ ரொடுபன் மன்னரும் பிறரு மடுத்துவர் திடச்சபை கூட்டிச், சொன்னநற் பதிகந் தனையரங் கேற்றிச் சொற்பொருள் விரித்திடு நாளின், மன்னுமக் கவியை யுரைத்திடும் பொழுதே மாற்றலர் வெள்கவு நல்லோர், துன்னிய மகிழ்ச்சி கொளவுமா மாரி சொரிந்திடப் புரிந்திடுந் தூயோன்."

திருச்செங்கோட்டு ஜமீந்தார் யாகத்துக்காம் பொருளளித்தல்.

பின்னருநஞ் சித்தர்பிரான் செயுமாடன் முழுதுணர்ந்து பெட்பி னந்த
நன்னகரை யாளுடையா னயந்தாயி ரக்கணக்காம் பொருளு நல்கக்
கன்னியம்பூ கத்துாசல் கனிந்தாடு மகளிர்செறி கருவூ ரன்று
பன்னியவன் றெண்டர்க்ராமி சைந்தசே யழைத்தபழம் பதியே யாதி.

சென்னிமலை காங்கேயமுதலிய தலங்கட்கு பதிகம் அருளுதல்.

அமரர்கள்சூழ் சென்னிமலை காங்கேய மகிலாண்ட புரமே யன்பர் திமிரமகற் றிடுகின்ற சிவன்மலைக்கு மருந்தமிழ்ப்பா செவ்வே சாத்திக், குமரனுறை காங்கேய நகர்வாழ்சே டாசலனுங் குணமிக் கோனிங், கெமையுடையீ ரெழுந்தருண்மி னெனவேண்ட வுடம்பட்டா ரெவைக்கு மெட்டார். (கூள)

சித்தர் சேலநகர் அடைதல்.

அன்னவன்மா துலனெய்து நீர்நோயைத் தீர்த்தருளி யாண்டடைந்த, நன்னலத்த குணமுடையான் வேண்டமக வரமளித்தந் நகர்க்கணுற்ற, சொன்னவினை செயுஞ்சாமி யாசாரிக் கறுமுகன்றன் றுணைப்ப தத்தின், றன்னியல்பை விளக்குமனு வொன்றளித்துச் சேலநகர் தனையுஞ் சார்ந்தார். (கூகஅ)

வக்கீல் கிருஷ்ணசாமி ஐயர் மாளிகையில் வசித்துங்காற்
பற்பல ஜமீந்தார்கள் வழிபடல்.

வந்தசித்தர் பெருமைகண்டு வரவேற்ற 'கமிடிமெம்பர்' மறையோரேந்தன், முந்துரசா யனநாலும் நியாயவா தத்துமிக முதிர்ச்சி பெற்றோர், சந்தமலி யுங்கிருஷ்ண சாமியையர் சித்தருக்காந் தகைமை செய்ய, வந்தில்சிற் சிலமன்னர் பிரபுக்கள் சித்தர்நட்பி னமர்ந்தாரம்மா. (கூகக)

சுகவனேசுவரர்க்கும், சுந்தரராஜப்பெருமாளுக்கும் தூதுபாடல்.

பின்னரந்தத் திருத்தலத்து ளமர்ந்தசுக வனேசர்க்கும் பெருநீர் வண்ண, மின்னுசுட ராழிவல னேந்துசுந் தரராச வியன்மா லுக்கு மன்னுமொரு தூதொன்று பாடியரங் கேற்றமயம் வளர்செங் கோட் டிற், றுன்னுதன்பின் னேன்மாளி கையிற்சித்தர் வதிவதெனச் சொல்லக் கேட்டு. (௩௨௦)

அஸிஸ்டன்ட் ரிஜிஸ்டரார் ஜனரல் மாரியப்பமுதலியார் சித்தரைத் தரிசிக்கச் சேலம் வருதல்.

சென்னைவளம் பதிவாழ்வான் றிருக்கூவ நகர்க்கணித்தாச் செறியு மூரான், பொன்னனைய குணமுடையான் பொறையீகை முதலகுணம் பொதுளி யுள்ளா, னென்னையுமோர் நண்பினனுக் கொளுமாரி யப் பவே ளெண்ணி யார்க்கு, மன்னைநிகர் சித்தர்வாழ் தன்பின்னே னமர்ந்திடுசெங் கோட்டை யண்மி. (௩௨௧)

வருவழியிற் சித்தர்பிரான் வதிவதெழிற் சேலநகர் மாட்டேயென்று முரிமையுட னுங்கழுத்தி லேறுமுகக் கண்டியன்னூர்க் குற்றதென்றுந் தெரிதிரெனக் கேட்டொருசொல் கனவதுபோ னினைவில்வரத் தெளி வோ மென்று, மருமலர்ச்சோ லைகள்புடைசூழ் சேலநகர்ச் சிவன் கோயில் வந்தா ரன்றே. (௩௨௨)

ஏறுமுகக்கண்டிகொண்டிறைஞ்சிவழிபடல்.

நண்ணியெங்கள் சுகவனே சப்பெருமான் றிருமுன்னர் நலபார்சித்தர் புண்ணியஞ்சேர் திருவுருவைத் தரிசித்துக் கண்டியின்றன் புதுமை யாவு, வுண்மகிழ்வி னெடுத்துரைப்ப வுடனிருந்தார் களிதூங்க வுணர்த்துஞ் சித்தர், தன்மையுடன் வரவேற்றுப் பொன்கலத்த லாலிதனைத் தரியோ மென்றார். (௩௨௩)

அன்னபோ தடியவருஞ் செல்வருமே விரவியரங் கேற்ற நிற்கு நன்னயப்போ தாகலாற் பொன்புனைத லாகாவென் றுட்டத் தானு முன்னியே சித்தரது புனையாமல் வாளாவங் குற்றாராக மின்னுதிருவருள்விளக்கவிடையருளாதெடுத்ததனைமேனிசேர்த்தார்.

வேறு

திருவருட்பேற்றைச் சிந்தித்திரங்கல்.

திரிபுராந் தகப்பெருமான் றிருக்கோயில் கொண்டதலம்
உரிமையுணர்த் தியுந்திருமாற் கோர்தூதுஞ் சுகவனத்திற்
பெரிதுமெழுந் தருள்புரியும் பெருமானுக் கோர்தூது
மருளியத னுட்பொருளை யறிவார்மற் றறிவாரே. (௩௨௫)

"அணிதிகழு மணிமாட மளாவுதிரு விற்கோலா
பணிபூட்டே யெனவிரதம் படைத்தவெனைப் பார்மீதில்
துணிவுடனே கொண்மினெனத் துய்யதிரு வாக்களித்தால்
தணிந்ததைக் கொள்வேனலது தள்ளிவிட மாட்டேனே."

இன்னபடி விற்கோலத் தெம்மானுக் குப்பதிகம்
அங்கிலையி லேயருளி யதனையுநம் மாரியப்ப
மன்னனிடஞ் சேர்ப்பித்து மனதுகளி கூர்ந்திருந்தார்
தன்னிகரி றவப்பெருமை தரணியெலாம் போற்றுறவே. (௩௨௬)

வேறு

குருதரிசனஞ் செய்து சென்னை கூடுவாமென்பது.

தாம்புனைந்த பின்னரிது கொடுவந்த மாரியப்பச் சதுரன் றன்னை யாம்பரிசா லாசிமொழி கூறியெமைச் சென்னைதனக் கழைப்பக் கன் டாங், கூம்பமரும் பச்சைவரைக் குருவடியைக் கண்டபின்கூ டிடுவ மென்னுத், தேம்பொழியும் விடையுதவச் செங்கோட்டை மாரியப்பச் செல்வர் சேர்ந்தார். (௩௨௭)

சித்தர் திருவுளமறியாது தேவாரமெனப் பெயர் புனைதல்.

ஏராரு மிளம்பள்ளி யெழின்மாடச் செங்குன்றா ரெல்லைக் கென்றும் பேராரு மன்னவரும் பிறபலரும் பெருஞ்செல்வ முடையார் தாமு நாராரு ஞானசித்த மூர்த்தியடிப் பொடியாகு நலம்பெற் றோரும் பாராரும் புகழ்படைத்த புலவர்களுஞ் சித்தருளப் பாங்கோ ராது.

*"பூம்பாவை யகம்பொலியு மாலயனும் காணரிய புனித னாரம் பாம்பாவை யகம்புனைந்த பரமன்மனோன் மணியாளைப் பார்த்து மாவே, தாம்பாவை யகம்வாமந் தனிலுறைய வென்றானைத் தமிழில் நால்வர், தேம்பாவை யகம்பணிந்து செப்புதனோர் தென்குருகூர் சிறந்து வாழும்."

* இதுமுதற் பத்துச்செய்யுளும் காங்கயம் அஷ்டாவதானம் வெ. சேஷாசலநாயுடு அவர்களியற்றிய தோத்திரப்பதிகத்துட் கண்டன.

"பந்தனைய நகிற்குழலார் பாசவலை கடந்தவர்கள் பண்பு மாவி டந்தனைய னையதெனக் கனவினிலும் நினையாத ஞானி செந்திற் கந்தனையன் போடுள்ளிக் கனகுருக டாட்சமதைக் காண மிக்க வந்தனைசெய் தன்னன்பா லுபதேச மொழிகேட்ட மதுர மூர்த்தி."

"மெய்யக்க ரத்தின்மிசை மேவிடுநல் லுயிர்போல வேண்டு மன்பர் துய்யக்க ரத்தின்மலர் தூவிவணங் கிடவருளைச் சொரியு மேகம் பையக்க ரத்திருந்தும் பகழிதொட வங்கசனும் பயந்து போற்றுங் கையக்க ரத்திருக்கண் டனைநிகர்தூ யன்பெரிய கருணை யாளன்."

"திருக்கபிலா சவர்க்கத்தி னடிமையெனு ஞானசித்தச் சீர்ப்பேர் பூண் டான், உருக்கயிலா சடையும்விழிக் கலைவாணி யுறைநாவா லோர்ந்து மாமுக், கிருக்கயிலா சற்கதியைப் பெறநமக்கிங் கித்தேகங் கிட்டி நம்பால், இருக்கயிலா சட்டையின்றி விடுத்தலெனத் தன்மனதி லெண்ணிமேலே."

"சீர்பெருந்தெங் கனிகொழுந்தெங் கிலையெனப்பாய் புனலிடையிற் சிற ந்த ராவின், பேர்பெருந்தார் செறிமணியும் வெதிரொடுக டாம்பொழி யும்பிறங்கன் மானும், கார்பெருந்தங் தாவளஞ்செங் கன்னறருநித்தில முங் காலவிசி, நேர்பெருந்தா ரணியுதித்த காவிரிக்கீழ்க் கரைக் கொங்கு நீண்ட நாட்டில்."

"பன்னிருகூ ரியர்க்குமக லாவிருளை வெண்மையெனப் பழிக்குங் கூந்தற், கன்னியர்நா புரப்பேரி கறங்கிடவல் குலிரதத்திற் கனத்த கொங்கை, யென்னுமக வங்களிசைத் திணைகிரக் கடலிடையா லிருத் தல்நேராய்ப், பன்னும்விழிக் கணைகொடுமா னுதற்சிலையை வளைத்து மதன் படையை வெல்ல."

"வந்தனம்பா மெனப்பேசி யவன்கணைகொள் விதமாய மலர்கள் தாமு வந்தனம்போல் நடத்துமெகாயு மாபொழில்சூ ழிளம்பள்ளி மாநகர்க் கண், வந்தனம்வந் தனமெனவான் வாழ்த்துமதி முகன்மேனி மாவி ன் பல்ல, வந்தனந்தா மரைமுகைநே ரன்னையகி லாண்டமையால் மருவி வாழும்."

"பவளமலை நிகர்த்தவரப் பவளமலை படக்கியமா பண்பார் நாகந்
துவளமலை யாடியா துவளமலை தனைநொடிவெல் சோதி யன்னு
சவளமலை மதிமுகிகஞ் சவளமலை யனநேர்குஞ் சரியு லாஞ்ச
லவளமலைக் கான்வளிபுல் லவளமலை நேர்முருக னுரை யீன்ற."

"கடவுண்மிசைத் தேவாரப் பதிகமுறைத் தானதனைக் கனிவு மிக்க
படவுண்மகிழ் தந்நகர்வாழ் வணிகசிகா மணிதன்பாற் பற்று மாயை
கெடவுன்பிர சாதமரன் கிருபையொடு தரப்பெற்ற சீர்த்தி யெங்குந்
தடவுண்மைய னுஞ்ஜமீன் குருநாத வள்ளல்பொரு டந்து மண்மேல்."

"பத்தரன வரதம்ப டித்திடனில் ஞானவழி பற்ற வும்ம
பத்தரன வரதம்ம மையிலனுகா தவர்கள்ப வங்களைச்சு
பத்தரன வரதம்பண் ணவுமச்சிற் பதிப்பித்தான் பாவ லர்க்கின்
பத்தரன வரதம்பொ ருந்தியநா விதுவெனயாம் பன்னு வோமே."

மூவர் திருமுறைக்கன்றி யாவர் பாவினங்களுக்கும் அப்பெயர்
தகாதெனச் சித்தர் அருளல்.

தேவார மெனமகுட மிட்டச்சி லேற்றியதைச் சித்த ரோர்ந்து
சேவாண்ட துவசத்தான் திருவுருவா மொருமூவர் தெய்வப் பாடற்
றேவார மெனநிலவு மேயன்றி மற்றையர்பாச் சிறவா வென்று
மாவாரும் பாமாலை பதிகமெனக் கூறுதனன் மரப தென்றார். (௩௨௯)

தமிழ்ப்பண்டிதர் சரவணபிள்ளை தகவின்றிப் பகைகொள்ளல்.

இவ்வுண்மை யோராது சித்தர்திரு வுள்ளமிதோ வென்றே யன்னோர்
செவ்விதிற்றும் புறங்கூற வந்நகரிற் றமிழ்ப்புலமை செறிந்த தூயோன்
கைவலத்தின் மானேந்து மடிகளடிக் கன்புடையான் கந்தனுக்கு
நைவண்ணமனங்கொண்டு தொழும்பாற் றுசரவணநன் னுமத்தோனே.

சித்தர் அற்புதங்களைப் பண்டிதர் செவ்வனே தெரிதல்.

மீளாத சுரநோயாற் பிடிக்கப் பட்டெந்த விதத்து மின்ன
கோளாய நோய்தீரா தென்றுபல ருங்கூறக் குழையு மன்பால்
வேளேறுந் தந்திசெறி சோலைசூ ழந்நகரில் விமலை யார்தந்
தாளேநா டியபரிசாற் சித்தர்பலநோய்களெலாந்தவிர்ப்பக்கேட்டும்.()

விழியிலார் தமக்குவிழி தந்துஞ்செங் கோட்டினிலே விடநோய் தீர்த்து, மழையிலா மையின்மழைதான் பொழிவித்து மிம்மான்பா ரற்புதங்கள், கழியமிக வாற்றிவரு சிறப்போர்ந்த வத்தலத்துக் கனவானென்றும், பழிதபுநற் குணமுடையான் சரவணமா றனையொருகாற் பரிவி னேக்கி. (௩௩௨)

சித்தர் மனப்பாங்கைத் தெரிந்து வழிபடல்.

அப்புலவன் செய்ததொரு புண்ணியத்தாற் சித்திரை நீரடைந்தாலன்றி, யிப்பெருநோய் தீராதென் றுரையாட நன்றென்றே யிசைந்தாங் கெய்த, வைப்பதற்கு முடிவுபெறுக் காலடியைத் தூக்கிவைத்து வந்து சித்தர், மெய்ப்புவனை க்வசமெனுஞ் சுண்ணவெண்ணீ றளிப்பவுடன் மெலிவு தீர்ந்து. (௩௩௩)

சித்தரரங் கேற்றுதற்காத் தூதுசொலுந் தமிழ்மாலை சிறக்க நாடிப்
பத்தியொடு பாயிரமும் பகர்ந்துமற் றதனிற்றும் பட்ட பாடும்
வித்தகனுர் விபூதியினல் விடியபெற் றியும்பெரிது விளக்கிக் காட்டிப்
புத்திமிகு புலவர்பிரா னகன்றதற்பி னடந்தகதை புகல்வா மன்னே.

பாகனகர் ஜமீந்தார் பணிந்துமுறையிடல்.

இவ்வுண்மை தனைநேரிற் கண்டபா கற்பட்டி யென்னுந் தேத்துச் செவ்விதின்வா ழுங்கரத் துக்குடையான் செல்வமெலாஞ் செழித்துநின்று, மெவ்வமறும் புத்திரச்செல் வம்பெறு வில்லாளுக் கெய்தி நின்ற, கவ்வைமலி பூதோபாதையையாருமொழிக்காமற்கவலை யாகி.

பதிகமோதிப்பநுவரலகற்றல்.

அடிகளார்க் கறிவிக்க வவரந்த நகராணுகி யன்பா நீற்றுப் பொடியருள வதுபரிதி முன்பனிபோ லகன்றிடவே பூங்கொம்பன்னாள், படிமிசைநன் மகப்பேறு பெறக்கருணை பாலித்துப் பதிகமோதிக், கடிநகரி லாலயத்தி யந்திரத்தா பனம்புரிந்து களித்த பின்னர்.

சற்குருநாதன் தண்ணளிபெறுதல்.

பச்சைமலைச் சித்தர்பெரு மான்றனையே தரிசிக்கும்பரிவு மேற்கொண்டச்சிரத்தை யொடுமாற்றார்க் காயநின்ம லேசுரர்க்கு மறப்பளிசர் நச்சியநின் மலமணிக்குந் தமிழ்மாலை பலசாத்தி நாடித் தம்மை யிச்சையொடு மாட்கொண்ட குருபிரா னடிக்கமல மிதயம்வைத்து.()

மேவுமோ ரபராத விண்ணப்ப மெனுமாலை விரைந்து சாத்தி
யாவலொடுங் குருநாதன் றனைக்கண்டென் றனையாண்ட வரசே யிந்தப்
பூவினுன தடித்துணையே விரும்புமெனைப் பூலோக வியாபா ரத்தி
லேவியது நலமேயோ விதுதகுமோ வெனவவரு மினிது நோக்கி. ()

சென்னையிற் சித்தர் அமர்தல்.

உன்னுமிவ் வுலகத்தி லாவசில வுண்டதனா லுடனே நீயு
மின்னாகந் தனையொரீஇச் செல்வாயென் றேவிடுப்ப விலங்குஞ் சித்தர்
தன்னேரி லாக்குரவன் றிருவாணை தனக்கஞ்சித் தன்னோ டுற்ற
பொன்னான குணத்தவரைப் போய்மருவிச் சென்னைநகர் பொருந்தினா
[ரால். (௩௩௯)

சித்தர்வருஞ் செய்தியைக்கேட் டிருவிழியி ல்லான்விழியைச் சிறக்கப்
பெற்ற, வத்தகுதி மானநங்கன் மாரியப்ப வபிதானத் தமர்ந்த கோ
வும், வித்தகச்சற் குணத்தவரா மன்பினர்பல் லோரோடும் விரைந்து
மேவிச், சித்துருவாஞ் சிவனருளே யெதிர்கண்ட கோலமெனச் சிற
ப்பப் போற்றி. (௩௪௦)

வரவேற்றுப் பல்லுபசா ரம்புரிந்து முகமனுடன் வாழ்த்தி யெங்கள்
பெரியோர்செய் தவப்பேயோ பேதையேன் றவமேயோ பீடார்சென்
னைப், புரிமேவி யுறைவோர்செய் தவமேயோ புனிதன்வரப் பெற்ற
தென்று, பரிவோடு முறைசெய்து மாளிகையொன் றமைத்திருக்கப்
பண்ணி னாரால். (௩௪௧)

தமிழ்ப்பண்டிதர் சின்னச்சாமிப்பிள்ளை ஞானசித்தபுராணமியற்றிவழிபடல்.

இன்னபடி யிவரிருக்க வெத்தலத்து மிவராட லினிதாக் கேட்டிங்
கென்னிருகண் ணொன்றனா ருயிரென்ன விருந்தவெழிற் புரசை வாழ்
வான், மன்னுமோ ரவதான மெட்டுமெவ ருங்காண வயங்குக காட்
டுந், தன்னையே யனையசபா பதிநாவ லோன்பாலென் றனைப்போற்
கற்றோன். (௩௪௨)

அன்னநா ளிருமுறையோர் பெண்பாலோ ரன்பன்முறை கேட்டுச்
சென்று, செந்நெலவட் காப்பூதங் கொடுவரச் செய்தும் மலிந்த
திருவா ரூர்வாழ், சின்னச்சா மிக்குரிசில் சித்தரினற் புதம்பலவித்
தேயத்துள்ள, மன்பதைக ளுணர்தருமார் ஞானசித்த புராண
மென வகுத்தான் மன்னோ. (௩௪௩)

திருமேவும் பூவைநகர்க் கலியாண சுந்தரனுஞ் சிமா னுந்தங்
குருநாத ரிவரென்னப் பற்பலசந் தக்கவிகள் குலவச் சாத்தி
யருகார்ந்தான் திருச்சிற்றம் பலஞானி யும்மடிகட் கன்பதாக
விருநிலமும் புகழ்தருமா ருசிரியப் பாவதுகொண் டேத்தினுனால். ()

பற்பல திருப்பதிகட்கும் சித்தர் பதிகம் அருளல்.

இப்படியாச் சென்னையின்கண் ணமர்ந்துலகம் புகழு கின்ற வியல்வ லோர்கள், செப்புபிர பந்தமதற் களவில்லை யவரவர்க டெரித்த வண்ண, மொப்பியிறை யமர்தலங்க ளொவ்வொன்றுந் தரிசித்தே யுயர்பா வோதிக், திப்பியநற் றெண்டர்புடை செறியவல வியபெரு மை செப்பற் பாற்றே. (௬௪௫)

புற்றிடங்கொண் டமரும்பூம் பதியம்பி கைமயிலாப் பூரனுர்க்கே யுற்றபூ சனைபுரியும் பதிமணவூர் வான்மியூ ரோங்கு மைப்பே, டெற் றவழு மணிமாடஞ் சேர்முல்லை வாயிலிரு கழுகெந் நாளு, முற்றவ த்தா லரனைவலம் வரும்பதியே முதலாய மூதூ ருக்கும். (௬௪௬)

எந்நாளும் விடையினின்று நீர்பெருகு மிடங்கண்டே யிறைஞ்சிப் போற்றி, முன்னுண்முப் புரம்பொடிப்ப வச்சிறுத்த விடம்பணிந்து முதுபே யொன்று, தன்னுவி னுற்பாட விறையாடுந் தலங்கண்டு தாழ்ந்து வேய்க்கீழ்ப், பொன்னுன மேனிகொடு பொலிந்தபதி தனையேத்திப் புகழ்ந்து மன்னே. (௬௪௭)

இருந்தவத்துப் பரத்துவனு மிறைஞ்சுபதி யொருபாங்க ரிறைவா ளோச்சிப், பொருந்துபதி யொருபாங்கர்ப் புலவரமு தங்கடைந்து புனிதர்ப் போற்றி, வருந்துபதி யொருபாங்க ரென்பையணங் காக்கி யார் வயங்க வேவிற், றிருந்தபதி யொருபாங்கர் மகிழ்க்கிழா யுறை யிறையை யிறைஞ்சிப் போற்றி. (௬௪௮)

கரையேற விட்டநகர் சிகாழி கச்சியினிற் கந்த கோட்டந், தரை யோர்தாழ் திருமயிலத் தனிகையொடு மலைவளையைத்தக்கார் சூழப் பிரைசெறிபா லினைநெய்போற் றனைப்பிரியாப் பெருமானைப் பேணி ப்பாடி, புரையோவா வற்புதம்பற் பலவுநிகழ்ச் சென்னையுவந் துளா [ரால். (௬௪௯)

எழும்பூர்ஹைகோர்ட் வக்கில் விசுவநாத சாஸ்திரிகள் சித்தரை அடைதல்.

வேறு.

சீர்த்திசெய் மாரியப்பச் செல்வன்மா டத்திற் சித்த
மூர்த்திக ளெழுதல் கேட்டு முந்துமூ தறிஞ ரோடும்
பார்த்திவர் புகழைக் கோர்ட்டிற் பயில்வக்கிற் பண்பு நாமஞ்
சார்த்திய விசுவ நாத சாத்திரி யெழும்பூர் தன்னில். (நடுO)

வந்துநின் றுங்கி லேய வயித்தியர் மருந்திற் றீரா
வெந்துய ருறுத்துந் தன்னீர் வியாதியை விலக்கு மாறு
முந்துநல் லுரைப கர்ந்து முறையிட மூர்த்தி யாரன்
புந்துமற் றவற்குச் சற்றங் கொருமருந் துதவி னாரால். (நடுக)

அம்மருந் தருந்த நோயு மக்கண மகலக் கண்டே
யிம்மருந் தமிழ்தோ வென்ன விஃதொரற் புதமென் றேத்தி
மம்மர்தீர் மாரி யப்ப வள்ளலுன் வலிந்து வேண்டச்
செம்மலார் சின்னு ளங்குத் திருவுளஞ் செய்தி ருந்தார். (நடுஉ)

மாயூரம் வித்வான் கிருஷ்ணையர் சித்தரநுக்கிரகம் பெறல்.

ஆயநாண் மாயூ ரத்தி லமர்கிருஷ் ணையன் வந்து
தூயநல் லருள்பெற் றுய்ந்து தோத்திரப் பதிகத் தோடு
நேயமார் பஞ்சரத்ந நிகழுமும் மணியா மாலை
யாயபற் பலநூல் பாடி யமர்ந்தன னப்பாற் சித்தர். (நடுங)

திருவாமாத்தூர்க்குச் சித்தர் எழுந்தருளல்.

பன்னுமா மாத்தூர் வாழும் பரமன்மேற் பதிகம் பாடி
மின்னுசந் நிதிமுன்பாக வியந்தரங் கேற்ற மெய்ச்சீர்
துன்னுபூ வைக்கல் யான சுந்தரன் மாரி யப்ப
னென்னும்பல் பிரபுசூழ வெழுந்தவ ணெய்துங் காலை. (நடுச)

வேறு.

திருப்புகழ்ச்சுவாமிகளும், சித்தமூர்த்திகளும் சந்தித்தல்.

அங்கு வைகிய முருகதா சப்பெய ரண்ணல்
பொங்கு சித்தரு முனிவரும் புகழுருப் பொலிந்து
தங்கு கின்றன ரதான்றுதே கத்துடன் சார்த
லிங்கு காண்கில மவர்செயு நூல்களோ வியம்பில். (உடுடு)

பயன்சற் றேனுமின் றென்றுரைப் பதுவன்றிப் பயில்சின்
மயம்பெற் றோரெனச் சித்தரைப் பான்மனை மாறு
நயம்பெற் றோங்கிய பருவத்திற் றெரிந்துள நயந்துஞ்
சயம்பெற் றாரெனத் தருக்கினர் மடாலயந் தனிலே. (கஅசு)

விளங்கு ஞானசித் தருமவை கட்கெலாம் விடையா
வுளங்கு றித்துமுன் றிருக்கயி லாயநின் றுவந்து
களங்க றுத்துயர் சித்தரே மூலராங் கதையும்
வளம்பெறப் பயில் சித்தர்நூற் பற்பல மாண்பும். (கஅள)

இன்று முள்ளன வெனநியா யத்தொடு மெடுத்து
நன்று முன்னரோ வரைந்தவோர் கடிதம்புன் னகையோ
டன்று சற்றிருந் தவரிடங் காண்கென வளித்துச்
சென்று நாலரங் கேற்றினர் திருவருட் . சித்தர். (கஅஅ)

அனையர் பாற்பெறுங் கடிதத்தை யன்புட னவிழ்த்து
நினைவி லோர்ந்துவா சித்திங்கு நிகழ்ந்தவை யாவு
மெனைய வாற்றினு முணர்ந்துமுன் னெழுதின ரிவரோ
தினையு மையுறு மற்றிரி காலந்நேர் சித்தர். (கஅகூ)

முன்பு நான்றெரி யாதிருந் தேனென முன்னி
யென்பு நெக்குற வுளங்கசிந் திவரருண் மார்க்க
மன்பு றப்பெரி தேயென வயர்ந்தன ராகிப்
பின்பு நேர்கண்டம் முருகதா சப்பெயர்ப் பெரியோர். (கசுO)

புகல்வர் சித்தரே நீவிரிந் நாட்டிடைப் புகலா
லிகல்பொய்ஞ் ஞானங்க ளினித்தலை யெடாவுமை யெல்லா
மிகவு ணர்ந்தவ ரேயறி வாரெனு மெய்ச்சீர்
தொகவு யர்ந்திடு பாடல்கள் பற்பல தொகுத்து. (கசுக)

கூவநகரத்தார் சித்தர்பாற் குறையிரத்தல்.

அளவி லாதகன் பாற்றியுட் களித்தன ரந்நாள்
வளம மைந்துயர் தொண்டைநாட் டமர்ந்தகூ வத்திற்
றளர்வொ ழித்திடு மழைபெய லறவங்கட் சார்ந்தோ
ருளம யக்கினு லொற்றுமை யில்லரா யுற்று. (கசு௨)

சித்த மூர்த்திபாற் சென்றுதங் குறையினைச் செப்ப
வத்த ராமவ ரங்கெழுந் தாலய மடைந்து
முத்த ராந்திரி புராந்தகர் சந்நிதி முன்பு
பத்தர் போற்றுபஞ் சாக்கர யந்திரம் பதித்து. (௩௬௩)

பதிகம்பாடிப் பதிட்டை செய்தல்.

பதிக மொன்றுநேர் பாடிப்பின் னேற்றுமைப் படுத்துந்
திதிமி கச்செயு மொருதெய்வப் பிரதிட்டை செய்து
மதிய மைந்துளீர் யாமுறை யேசெய்து வருநற்
றுதிமி குந்தவே ழாவது மகத்தினைத் தொடங்கில். (௩௬௪)

ஏழாவது யாகம் திருவிற்கோலம் பாலாறு.

பெய்யு மாமழை யென்றனர் கேட்டவப் பெரிய
ருய்யு மாமகம் பாலிநன் னதியிடை யுவந்து
செய்யு மாறொரு சாலையும் பெரியதாச் செய்தே
யெய்யு மாறில்பல் லுபகர ணங்களு மீட்டி. (௩௬௫)

வைத்த பின்னரம் மகஞ்செயுஞ் சாலையை வந்து
சித்தர் காண்கெனச் சென்றடி வணங்கலுந் தெளிந்தங்
கொத்த சித்தரு மெழுந்துகண் டன்பர்நீ ருளுற்று
மித்த கைப்பெரு மண்டபம் பயன்படா தென்று. (௩௬௬)

மீண்டு நம்புவ ளும்பிகை பீடத்தை விமானத்
தீண்டு மாறுவைத் தந்நகர் வலம்வர வியற்றித்
தூண்டு மின்னருட் கோயிலுட் புக்கனர் தூய்தா
வேண்டு நற்கட தாபனஞ் செய்வித்தார் வேள்வி. (௩௬௭)

தொடங்கு மோரைபின் வருதலுஞ் சித்தர்பாற் றுவன்றி
யடங்கு தொண்டர்நீர் யாகசா லைக்கெழுந் தருள்கென்
றுடங்கு கூறின ரவரது கேட்டெலா முணர்ந்து
திடங்கு லாமிந்த மண்டபஞ் சிதைந்திடுந் தெளிமின். (௩௬௮)

ஆங்கு ளாரெலாம் வெளிவரு வீரென வருளத்
தேங்கு மன்பர்க ளங்ஙனம் வெளிவந்து திகைத்நா
ரோங்கு மேகங்க ளப்பொழு தேகறுத் துலாவித்
தாங்கு மாறிலாப் பெருமழை மிகப்பொழிந் தனவே. (௩௬௯)

பாய வம்மழை மிகுதலாற் பெருவெள்ளம் பரந்தங்
காய மாமகச் சாலைமண் டபத்தினை யழித்துப்
போய தாலிங்ஙனு மெனமுன்னரே புகன்ற
தூய சித்தர்தம் வாக்கியம் பொய்க்குமோ சொல்லில். (௩௭0)

கண்ட யாவரு மற்புத மீதெனக் கழறிக்
கொண்ட மாமகச் சாலைவே றிடத்தினிற் குயிற்றி
விண்ட சித்தர்சொன் மெய்ம்மையைப் பலதரம் வியந்து
தொண்டர் மீட்டுமம் மகப்பொருள் யாவையுந் தொகுத்து. (௩௭௧)

மகவினைக்குறு மூர்த்தமவந் தணுகுமம் மட்டுந்
தகவி னுற்றவே தியர்மனச் சழக்கினுற் றணந்து
புகுமிவ் யாகம்யா மின்றியார் புரிபவ ரென்றே
யகல்வர் சித்தரை யறிந்தில ராயகங் கரித்தார். (௩௭௨)

அன்பி னுலளந் தறிகுநர்க் கல்லதை யகத்தை
வன்பி னுலளப் பவர்கட்கு மெளியரா வாரோ
துன்பி னுற்றடை படாமனச் சித்தசு வாமி
முன்பி னுய்விலா வம்மறை யவர்துயர் மூழ்க. (௩௭௩)

அனைய காலையில் வேதமு மொழுக்கமு மறிவும்
புனையும் வேதியர் பற்பலர் மகவினை புரிவார்
நினைவி னும்விரைந் தெய்தினர் சாலையுண் ணிறைந்தார்
இனையர் தக்கிணை தேத்தினர் தொடங்கின ரிட்டி. (௩௭௪)

யோக மெய்திய சித்தர்பால் வந்துகின் றுரைப்ப
யாக சாலையுள் ளன்பர்க ளுடனெழுந் திருந்து
பாக மாமறை மந்திர விதிமுறைப் படியே
யேகமா மன்ன மந்திரந் தன்னைமே லேற்றி. (௩௭௫)

அங்கி மேலெழு மோமங்கள் மனுப்புகன் றமைத்துத்
தங்கு மேனைய கிரியைகள் முழுவதுந் தவறு
தங்கி ருந்தவ ருவப்புற வாற்றி யந்தத்திற்
பொங்கு பூரணா குதிசெய்து முடித்தனர் போந்தார். (௩௭௬)

வேறு.

*" மறைவிளக்கு மந்தணரு மாதவரும் யோகிகளுந்
துறைவிளக்கு மரசர்களுந் தோத்திரிக்க வவரவர்க்கு
முறைபுரக்கும் ஞானசித்த முனிவர்பிரான் கூவநக
ருறைதரச்செய் திடுந்தவமவ் வூரவர்செய் மாதவமே."

" அங்கணமர்ந் திடுபொழுதி லறுநூலின் விதிப்படியே
பொங்குபுனற் பாலாற்றிற் புவிபுகழே ழாம்யாகம்
எங்கணுமு ளார்களுய்ய வெழுநிலமுங் களிதுங்க
மங்களமு தாமுடித்து மழைபொழியச் செய்ததன்பின்."

வேறு.

"திருவிற் கோலச் சிவபெருமான் றிருத்தொண் டியற்று மடியரெலாம்
பரிவிற் பணிந்தங் கெதிர்கொளவும் பைம்பொன் வீதி வாயிலெறும்
பெருகும் வாழை கமுகொடுதோ ரணங்க டபம் பலபிறங்கத்
தெருளும்பலவாத்தியமுழங்கத்திருக்கோயிலின்கட் சேர்ந்தனரால்."

" மாடவீதி வலம்வந்து மணிப்பொற் றிருவா யிலின்முன்னர்
நீடுஞ் சிகரந் தனையிறைஞ்சி நிறையு மளவில் காதலொடும்
ஓடும் உணர்விலுணரேன் றருளார் பதிகந் தனையோதப்
பாடு மடியர் மாதவர்கள் பரவிப் பரமா னந்தமுற்றார்."

சென்னைநகர் வித்வான்கள் சித்தர்க்குப் பாமாலை சாத்தல்.

அந்தமகங் காணவந்த வடமொழிவல் லுநர்பலரா மன்ப ரோடுஞ்
செந்தமிழ்தேர் திருச்சிற்றம் பலஞானி செங்கல்வ ராயன் சீர்சால்
சந்தமிகு கிருஷ்ணையன் கலியாண சுந்தரனற் றங்க வேலு
சொந்தமா நாகலிங்கஞ் சிங்கார வேலன்முன்னோர் சூழ்ந்து நின்று.()
மகச்சிறப்பின் மான்மியத்தைத் தனித்தனியே யவரவர்க்கு வந்த
மட்டு, மிகச்சிறப்பாப் பதிகம்வண்ணா மாலையா தியவற்றால் விளங்கப்
பாடி, யகத்துவகை யெவர்க்குமிகச் சித்தர்முன மரங்கேற்றி யருள்
கைக் கொண்டார், தகப்பெருமை வாய்ந்தசித்த ரடியர்குழாந் தன்
னோடுஞ் சென்னை சார்ந்தார். (ருஎஅ)

* இதுமுதல் நான்கு செய்யுள்களும் சென்னைக் கிறிஸ்டியன் காலேஜ் தமிழ்ப்பண்டிதராயிருந்த திருவாரூர்ச் சின்னச்சாமிப் பிள்ளையவர்கள் செய்த ஞானசித்தமூர்த்திகள் புராணத்துட் கண்டன,

சித்தர் குலசேகரன்பட்டினஞ் சேர்தல்.

இவ்வண்ணஞ் சென்னியிடை யெழுந்தருளி யிருக்குங்கால்
மெய்வன்மைச் சித்தர்பின்னே விளங்கவரு தங்கையார்
தெய்வமெனு மாதர்கட்கோர் திலகமெனக் குலசைநகர்
மைவண்ணத் தம்பிகைதன் வரத்தால்வாழ்ந் திருந்தாரே. (௩எகூ)

கற்பினருந் ததிநிகர்த்துக் கணவருடன் சிலகாலம்
பொற்புறவாழ்ந் திருப்புழியோர் புத்திரனைப் பெற்றதவு
முற்பிறப்பின் வினைமுடிவான் முகுந்தனெழிற் றங்கைபத
மற்புடன்பூ சனைபுரிந்தங் ககத்தினிலொன் றெண்ணினரால். (௩அ௦)

தாயாரு முயிர்துறந்தார் தமையனார் துறவடைந்தார்
சேயுமொன்றெஞ் சந்ததிப்பேர் செப்பவிருக் கின்றதினித்
தூயகண வனுக்குமுன்னே துஞ்சுதலே நன்மையென
வாயகருத் தினினினைவுற் றன்னமருந் தாதிருந்தார். (௩அக)

தங்கையார் சித்தரைத் தரிசித்து அம்பிகை திருவடி அடைதல்.

அன்னமருந் தாதிருந்த ததுவேயோர் வியாதியாஞ்
சின்னமுற விருக்கின்ற செய்திசித்தர் செவியினுறப்
பின்னமையுஞ் செயலுணர்ந்து பெயர்ந்துகுல சேகரன்ற
னன்னகரை வந்தடைந்தார் நன்கமையு ஞானசித்தர். (௩அஉ)

வந்தசித்த நாதரிரு மலரடியிற் றங்கையார்
சிந்தைமகிழ்ந் திடப்பணிந்து செப்புவா ரெற்குமுன
நந்தமா தாமகரா னல்குபுன்செய் நன்செய்மனை
யெந்தையிர் கைக்கொடுநீ ரென்னுசித்த சபைமுடிக்க. (௩அ௩)

முன்னேநும் பெயருக்கே முடித்துவைத்த சாதனமீ
தின்னேகைக் கொண்மினென வியன்ஞான சித்தருமிங்
கென்னேசொல் கின்றனைநீ யெல்லோர்க்கு முள்ளநிலந்
தன்னேரி லம்பிகையின் றக்கதிருத் தாளிழலே. (௩அச)

சாதனமா மன்றிமற்றுச் சாதனத்தா லென்னபயன்
நீதகுமம் பிகைபாத நிழலடைந்து நில்லுகவென்
றோதினரந் நாளினையு முணர்த்துதநற் சயவருடந்
தீதிலா டித்தசமி சிவைபதஞ்சேர்ந் திடுதினமே. (௩அ௫)

அந்நகரிப் பள்ளிவாசல் மோதின்சாயபுதம்பி சித்தரைப் பாடித் திருவருள் பெறுதல்.

சித்தரதன் பின்புகுல சேகரன்பட் டினத்தமர்ந்த
தத்தலத்தில் வாழ்ந்திருக்கும் அரியசாய் புத்தம்பி
பத்தர்தொழ மிகக்கூடும் பள்ளிவா சன்மோதின்
உத்தமமார் சிலர்வந்தங் குரைத்திடக்கேட் டுவகையுற்று. (௩அ௬)

அக்கணமே வந்துசித்தர்க் காட்பட்டுள் ளன்பினொடு
பக்கமுற வேயூஞ்சற் பாவாம்ப்ர பந்தமொன்று
தக்கபடி பாடியெதிர் சாற்றிமீன் டாரதன்மேற்
புக்கனராற் றார்தந்தை போயிருக்கும் புரமென்றே. (௩அ௭)

ஆற்றூரைச் சித்தரடைதலும், அவ்வூரார் மழைபெய்விக்க வேண்டுதலும்.

அந்நகரிற் சித்தரெழுந் தருள்வதுகேட் டந்நகரார்
பன்னரிய மழையின்றிப் பயிர்வாடும் பருவரலை
முன்னர்வந்து கும்பிட்டு முறையிடைப்புன் முறுவல்கொண்டிங்
கென்னுனே செயப்படுவ தியாதுமிலை யென்றிடவே. (௩அ௮)

செங்குன்றா ரிற்பதிகஞ் செப்பிமழை பெய்தமையும்
பொங்கிவரு பாலாற்றிற் பொழிந்ததுமிப் புவியறியு
மெங்கடவப் பேற்றானே யித்தருணம் நம்வரவை
மங்களமா கக்கொண்டோ மறுத்திடா தருண்மினென. (௩அ௯)

காலத்தின் வலியைக் கடத்தலருமையெனல்.

தெய்வச் செயலாற் சிறிதுநடந் தேயிருக்கு
மையவதைக் கொண்டே யறிந்தோர்நெஞ் சிற்றுணியார்
துய்யவருட் காழியர்கோன் தோன்றுசிவச் செயலுணர்ந்து
பையவமர்ந் திட்டசெயல் பாரறிந்த பாங்கதுவே. (௩௯0)

சித்தர் சோமசுந்தரிமாலை, கூடுதுறை முதலிய பாடல்.

எத்தகவா னுனு மிரங்கியொரு பாவருள
மெத்தவிரும் பியதுணர்ந்து மேல்வினையுஞ் சிர்நினைந்தே
யத்தனிடப் பாகத் தமர்சோம சுந்தரிமேற்
பத்தியொடு பாமாலை பரிந்தடிக டாமியற்ற. (௩௯௧)

பாடியபின் னுந்தெய்வப் பாங்கிதெனத் தேர்ந்ததனற்
கூடுதுறை யாமொருநால் குயிற்றியவர் கைக்கொடுத்தே
யாடியபா தத்தோனு லயத்திலரங் கேற்றுமெனத்
தேடுபொருள் கண்டதுபோற் செழித்தரங்கேற் றியபோதும். ()

சிலமிகு மழைக்குறிப்போர் சிறிதுமிலாச் செயலினு
லாலயத்துட் சித்தரெழுந் தருளித்தம் மான்மார்த்த
மூலமூர்த் தியராகி மூந்துவயி ரவர்முன்னே
ஞாலமுய்ய வொருகவிதை நவின்றனரந் நாழிகையில். (௩௯௩)

சித்தர் கன்னியாதுமரிக்கு மாலையநருதல்.

தங்கருணை வெள்ளம்போற் சார்ந்துசல தரஞ்சுரந்து
பொங்குமழை பொழிந்ததது பொழுதுள்ளம் பூரித்தே
யங்குநின்றூர்க் கருளியகன் றரியகன்னி யாகுமரி
யெங்குமிசை பெறச்சென்றங் கின்னருட்சத் தியையேத்தி. (௩௯௪)

திரும்பவுஞ் சித்தர் சென்னையடைதல்.

பதிகமொன் றின் னருளெய்தப் பாடியுயர் பாவலவர்
துதிமொழியத் திருவாக்காற் சொல்லித்தோத் திரம்புரிந்து
கதிதனக்கு வழியிதெனக் காட்டியப்பா லங்ககன்று
மதிமிகுத்த சித்தர்சென்னை மாநகரில் வந்திருந்தார். (௩௯௫)

சித்தர் தனித்திருக்கத் திருவுளங்கொள்ளல்.

செல்லுமிடந் தோறுமெங்கள் சித்தர்பிரான் செயுமாட றனைச்சிந்தித்
மல்குமடி யார்குழுவு மவரவர்க்கா வனசெயலு மரபென் றூனு [தே
மல்லலகற் றிச்சிறுபோ தாட்கொண்ட பச்சைமலை யண்ண லார்தாஞ்
சொல்லியவாக் கென்றுமுடித் தேயவர்தந் திருவடிக்கீழ்ச் சுகிப்பே
[மென்று. (௩௯௬)

நினைத்தொருவா றுளந்தேற்றி யினித்தனித்தோ ரிடத்தமர்த னீதி
யென்ன, மனத்துளே கொண்ட சித்தர் கருத்துணர்ந்தான் பூவிருந்த
வல்லி மன்னும், தனத்தன்பத் திரப்பதிவு செயுமிராம நாதனந்தத்
தனிநகர்க்கட், கனத்தகடற் புவிபுகழக் காட்சிபெறு மடாலயங்கட்
டியதுமன்றி. (௩௯௭)

பூவிருந்தவல்லியிற் சித்தர்க்கு மடாலயப் பிரதிட்டை செய்தல்.

சித்தமூர்த் திகள்பேராற் சாதனஞ்செய் ததையுள்ளச் சிரத்தை யோடு, மத்தருணங் கைக்கொண்டு மாரியப்ப வள்ளன்மனை யமர்ந்த சித்தர், புத்தமுதை நிகர்த்ததிரு வடியினில்வைத் தடியேனைப்புனித மாக்கு, வித்ததயை வைத்தெனகர் விளங்குமடா லயத்தடிகள் மேவு [கென்ன. (ருகூஅ)

இதுவுமம்மை திருவிளையாட் டெனநினைத்தாங் கெழுந்தருள வெழி லார் சென்னைப், பதியமரு மாரியப்பக் குரிசின்முத லடியார்கள் பல ரும் போற்றுத், ததியினல்ல வோரையினிற் பிரதிட்டை செயமறை யோர் சமக மோத, வதிமகிழ்விற் பரைபுவனம் பிகைபீடந் தாபித்த வழகிற் றம்மா. (ருகூகூ)

வேறு.

எட்டாவது யாகம் ஸ்ரீவைத்தீசுரர் கோயிற்கல்லியாணமண்டபம்.

மந்திரத்தின் முறைபொருபான் மாமறைசொன் முறையொருபால்
அந்தமினஞ் சத்தியரு ளாகமத்தின் முறையொருபாற்
சிந்தைதெளிந் தோரருளுந் திருமுறைக ளும்மொருபால்
இந்தவித மோங்கமடா லயமிருந்த வியற்கையதே. (சOO)

அற்றைநா ளினிலெங்க ளம்பிகைக்காம் யாகதினம்
உற்றதுணர்ந் தத்தலத்தி லோங்குவைத் தீசுரர்தந்
தெற்றிமிகு கல்யாண மண்டபத்துச் சிவனடியார்
முற்றிலுமே தாங்கூடி முறையாக நடந்ததுவே. (சOக)

ஸ்ரீபுவனம்பிகை திருவானைக்காவரக் கட்டளையருளுதல்.

தேவிருந்த புகழ்வேளாண் மாந்தர்தமக் கிருக்கையெனத் திசைசெல் கீர்த்திப், பூவிருந்த வல்லியெனும் வைத்தீசப் பெருமான்பூம் புவனை வைகு, மாவிருந்த பதிவதியு ஞான்றிறைவி கனவின்மட மயில்போ லானைக், காவிருந்து பிறமகமு முடித்திியென வம்மொழியைக் கடைப் பிடித்தே. (சO௨)

பச்சைமலைச் சித்தபிரான் றமக்கின்ப நிலைதருபூம் பதியென் றன் பர், உச்சிமிசைக் கைகுவிக்கத் தருமானைக் காவினில்வந் துறைய வுள்ள, நச்சியவ ணுறையுமிடந் தம்மடித்தொண் டரைவிடுத்து நாடச் செய்ய, வச்சொன்மரு தவருமிறை யமர்கோயின் மேலைவா யிலினை மைத்தார். (சOரு)

### சித்தர் திருவானைக்காவடைதல்.

புகலிநகர்ப் பிள்ளையா ரெழுந்தருளும் போதெல்லாம் புவனி தன்னின் மகமனைத்தும் புரிந்துமக வெனவீன்ற தாதையொடும் வருதல் போலச், சகமிசைச்சித் தருந்தம்மைத் தருந்தாதை யோடன்பர் தம்பின் செல்லப், பகலெனமா மணிமாடம் பொலியானைக் காவினுக் குப் பரிவின் வந்தார். (சOச)

வந்தடைந்து சிலபொழுது கழிந்ததற்பி னெனையாண்ட மணியே ஞானச், சிந்துரமே யாட்கொள்ளுந் திறத்தானே சிறுவயதிற் சிறி யேன் றன்னை, முந்துபரிந் தாட்கொண்ட விந்நகர்க்கே வாவென்ற முறைமை நாடிற், சந்தமுறு கற்பமுறை யுளுற்றிடவா மெனும் பொருளே தக்க தாகும். (சOரு)

### ஸ்ரீ அகிலாண்டேசுவரிக்குப் பாமாலை பாடல்.

ஏவைவென்ற விழியமுதே மலையரையன் றவப்பெருக்கா னியைந்து தோன்றும், பூவையைவென் மொழியணங்கே புண்ணியர்தம் முளத் துவக்கும் பொருளே பூந்தே, மாவைவென்ற விழிமயிலே மஞ்ச னேன் றனையிங்கே வாவென் றேருதுங், காவைவிழைந் தோங்குகளை கண்ணேயென் கருத்துள்ளே கலந்ததெல்லாம். (சOசு)

### அரங்கேற்றுதல்.

தடைபடா வண்மையருள் செயவேண்டுங் கருணையெனத் தனியே யென்னு,விடைவிடா துகந்தபிரான் வலமேவு மிறைவிதனை விழைந்து போற்றிக், கடையனேன் கருத்தியைய வேண்டுமெனத் தமிழ்மாலை கனிந்து பாடி, யடைவுடன்பல் லன்பர்கள்சூழ் தரவம்மை யாலயத் தை யணுகி நாடி. (சOஎ)

### கிருஷ்ணாநந்தயோகி உரைவிரித்தல்.

மயிலைநகர்க் கிருட்டிணப்பேர் கொண்ஞான யோகியங்குவரவன் னேன் பா, வியல்பினைமக் கருளம்மைக் கியற்றிடுமா லையையரங்கேற் றென னச் சென்று, நயமனைத்து மெடுத்தெடுத்துப் பலர்கேட்க வம்பிகை முன்னவின்றுன் யாருஞ், செயலகன்ற மேனியர்போற் செவிவாய்மாக் திச்சிறந்தார் சிந்தித்தம்மா. (சOஅ)

பற்பல வித்வான்கள் சித்தர்மீது பாமாலை சாற்றல்.

ஏமசுந் தரவெற்பாச் செந்தமிழிற் கோங்குமிமா சலப்பெண் மீது
தாமமளப் பிலசாத்துஞ் சித்தனு ரருளெய்தும் தரத்தை நாடிச்
சோமசுந் தரக்கவிஞன் புத்தூரி ராமசா மித்த வத்தோன்
சேமமா ராறுமுகத் தம்பிரான் வேங்கடா சலசி வன்ருன். (சoகூ)

செந்தமிழ்த்திஞ் சுவைகண்ட நம்முத்துச் சிதம்பரவேள் செம்மை
யன்பு, முந்துதழைத் திடநாடுஞ் சேஷையன் முதியாரை முன்னுஞ்
சிர்த்தி, நந்துதலி லாவரங்கத் துவசநா வலனின்னோர் நங்கள் சித்தர்
சிந்தையுவப் புறப்பலவாத்தெரியல்புனைந்தார்மிகவுஞ் சிறப்பினம்மா.

ஸ்ரீமாதுர் பூதேசுவரர்க்குப் பதிகம் பாடல்.

இன்னவா றிவணிகழ வன்னையெனப் பரிபுரத்தா ளேந்தி ழைக்கா
முன்னவனோர் தாயாகச் சென்றமுது பதிமேவி முதலை யன்று
மன்னியகின் பெயர்ப்புலவன் றனக்கருட்சித் தியைவழங்கி வானோ
ரேத்த, நின்றனையென் கருத்திினினைத் திடுவதெலா மருள்புரிய நினை
த்தல் வேண்டும். (சகக)

ஆசங்கித்த சிலரைத் திருவருள் ஆசிரயிக்கச் செய்தல்.

எனத்தமிழிற் சிலபதிகம் புனைந்தேத்தி யரங்கேற்றுங் காலை யீசன்
றனைத்தொழுமன் பரையறியாப் புலவர்பலர் சன்முகத்தம் பிரானைக்
கொண்டு, நினைத்தபடி குழறுமுயன் றும்மந்த முனிவரனோர் மாறு
யன்பி, னனைக்குநிகர் சித்தர்தமைப் புகழ்ந்தகதை யுலகமெலா மறியு
மன்றே. (சகஉ)

ஸ்ரீ புவனம்பிகை பக்தஜன சித்தசபை யமைத்தல்.

இவ்வாறு நாள்கழியச் சித்தனூர் சித்தத்தே யிருந்து வைகுஞ்
செவ்வானத் திருமேனிச் சிவனுருவாத் திகழ்புவனை தேவ தேவி
மைவானக் கருங்குழலி நாமத்து மவளருட்கே வயமே பூண்ட
மெய்வான ராஞ்சித்தர் நாமத்துஞ் சபையொன்று விளக்க மெய்த.

மன்மதவான் டெழின்மகர மதியுத்த ராயணமா சுபதி னத்தி
லன்னையெனும் புவனையடிக் கேகுழையு மெய்யன்ப ராவோர் யாரு
மின்னபொழு தேவருக வெனக்கூவிச் சித்தசபை யினிது நாட்டி
யன்னசபைக் கானசட்ட முதலவகுத் தருளுருவா மடிக ளுக்கு. ()

உடம்புயிர்போற் சிறந்துவிளங் கியதொண்ட ரிடத்தினிலன் புள்ளோ னென்னுந், திடங்கொண்ட வேணுகோ பாலன்கா ரியதரிசிச் செம்ம லாக, விடங்கொண்ட கண்டத்தா னருளுருவா மம்மையருள் விளங்க நாளு, நடங்கொண்ட மெய்ச்சித்தர் புகழோங்க வென்றுநயந் துணை செய் தாரால். (சகரு)

திருப்பிடவூர்க்குப் பதிகமருளச் சித்தரை வேண்டுதல்.

சித்தசபை காவைவளம் பதியிடையின் பனமோங்கச் சின்னாட் பின் னர்,மெய்த்தமறை வேதியர்தங் குலத்துள்ளான்வியன்திருமாந்துறை யின் மேயான், சுத்தசிவா கமவழித்தாய்ப் பரிதிவழி படும்பிடவூர்த் தோன்றற் கன்பாய், நித்திய மம்புரியுந் தருமகருத் தாவென்ன நிலவுகிற்பான். (சகசு)

மகநாத னெனவமரர்க் கந்தணர்தஞ் சிறப்பிற்கே மனங்களித்த சகநாத னெனுமறையோர் பெருமானு மவன்கண்மணி தானே யாகித் திகையோதத் தமிழ்க்கிலக்காந் தியாகரா சக்கவிசே கரன்பாற் கல்வி தகநாடிக் கற்றதொரு சேஷைய வேதியர்தம் பிரானு மாக. (சகஎ)

மெய்ப்பொருளைக் கண்டாரா மொருமூவர் செந்தமிழில் விரித்து ரைத்த, வெய்ப்பில் வைப்பாந் தேவாரப் பதிகங்க ளித்தலத்திற் கிறந்த வாக, வைப்புத்த லக்கணக்கி லிதுசேர்ந்ததா லடிகளை மகிழ் வாற் பல்ல, நற்பதிகம் பப்பத்து நாடியுரைத் தெமக்கின்று நல்கவே ண்டும். (சகஅ)

சித்தருளிய பதிகத்தைச் சிவிகையில்வைத்து நகர்வலம்வருதல்.

அன்னைபினு மினியாயென் றவர்வேண்ட வதற்கிரங்கி யரியசித்தர் கன்னலமு தோபாகோ கற்கண்டோ செந்தேனோ கதலி யோவென் றென்னவரு மெடுத்துரைப்ப விருந்தமிழிற் பதிகமிசைத் தின்பினீய வன்னபதி கந்தனையே சிவிகையில்வைத் தங்ககரை வலஞ்செய் தப்பா

எம்பெருமான் திருமுன்ன ரரங்கேற்று வித்திடவின் டிவைகேட் டந்த, வம்பரத்தோ ரம்பானை நாடினமற் றவரல்லா லாகே மென்று, விம்பருரைத் திடவிதுவுங் கிடக்கவிரு கண்ணிழந்தார்க் கிருக ணீந் தும், வெம்புசுரந் தடுத்துங்கால் கொடுத்துங்குன் மந்தவிர்த்தும் விநோத மாக.

அயோத்தி இராமப்பிரபன்னயோகிக்குச் சித்தரநுக்கிரகித்தல்.

பற்பலதேத் திருந்துபல பைசாசப் பிணிப்புண்டோர் பையுளெல் லாஞ், சொற்பதினத் தேயாற்றிக் காவைவயி னயோத்திநகர் தன் னிற் றோன்றி, யற்புதவி ராமதா சப்பெயரோன் பலகலையு மறிந்த யோகி, சிற்பரனேர் தருஞ்சித்தர் தன்னருள்பெற் றுலவியமை தெரி யார் யாரே.* (சஉக)

கண்மாரி பெய்துமனங் குழைசார மாமுனிவன் கனிவின் வைத்து
விண்மாரி கொடுவளர்க்குஞ் செவ்வந்தி மலர்கவரும் வேந்த னென
மண்மாரி பெய்வித்த விறைவாழுஞ் சிரபுரத்தே மன்னி யென்று
மெண்மாரி யெனப்பொன்பெ யிரத்தினப்பேர்க் கங்கைகுலத் திசையு
[ளோனும். (சஉஉ)

உட்டாவு மன்பொடுநஞ் சித்தர்பிரான் கருணையினு லோங்கா நிற்கு
மட்டாவ தானசே டாசலவேண் மாமனள கிரிசா மிக்கே
மட்டேயி லாதநீ ரழிவினுக்கு மருந்தளித்த மரபி னேடுங்
கிட்டாத மகப்பேற்றை யாங்கொருவர்க் குதவியதுங் கேட்டுமாதோ.()

பாங்கேயி லாதுடலிற் பல்பிணியால் வருந்துகின்ற படியை நாடி
யீங்கேயென் புரிவதெனப் புவனையரு ளானீங்க விரும்பூ தெய்துங்
காங்கேய நாடுபட்டக் காரவேங் கடரமணக் காவ லோனு
நீங்காப்பே ரன்பான்வேள் வியினென்பான் செயற்குதவி நீடுசெய்ய.

ஒன்பதாவது யாகம் காவேரிச்சிந்தாமணித்துறை.

நீரேறு சடையானுந் துளவேறு முடியானு நினைக்கு ஞான்று
காரேறு மலைநிலையுந் திரையேறு கடனிலையுங் காண்பர் நீர்சூழ்
பாரேறு புகழ்மலையத் தவனொருகை யாற்கடலைப் பருப்ப தத்தைச்
சூரேறுந்தவத்தடக்குமவன்கமண்டலத்தினின் றுந்தோன்றிமாதோ.()

குடகா விரிப்பெயரின் வருமாறங் கோர்பாலே குலவா நிற்கும் விடநாகப் பணியாருக் கிடமாங்கா வைக்குத்தென் மேற்கி லேசல் லிடமாஞ்சிந்தாமணியின் றுறைபின்மும்மையுலகமெலா மிரும்பூதெ ய்த, மடனொரு மெய்போல்வார் கவிமாரி பொழிதரவண் டமிழ்மிக் கோங்க. (சஉரு)

* இவர் சித்தரிடத் தநுக்கிரகம் பெற்ற சரிதம் "குருபூசாத்துவயம்" என்னும் நூலுட் கண்டுகொள்க.

மறைவிதித்த விதிப்படியே வேதிகையும் வேள்விச்சாலையுமே யாற்றி
நிறைகுடம்பாற் குடமருந்த திக்குடநெய்க் குடமுதல நிருமித்தன்றி
யறையுமா லரசுமுத லாஞ்சமித்தும் வேள்விதனக் கமைத்திட் டெங்க
ளிறைவிபுவ னம்பிகையைப் பீடத்தி லெழுந்தருளச் செய்தபின்னர்.

அநாதிதலங்களைப் போலவே யாகசாலையினும் அற்புத நிகழ்ச்சி.

பூரணா குதிவேளை யாகங்கா ன்பதற்குவந்த புரட்டர் பல்லோ
ரேகமாய்ப் பரங்கிரியே செந்திலே பழனியே யென்னுந் தேத்துச்
சிரனுனைக் கருணகிரி நாதனுனைக் குளமகிழுங் கேடி லாம
யூரமிசைவருங்கந்தனருள்விளங்குமற்புதம்போலுண்டோவென்ன.()

அசதியா டினரதன்பின் மகசாலை நாற்புறத்து மமைத்து வைத்தங்
கிசையுமின்பாற் குடங்களெலாம் மாமலையத் துவசன்மகத் தினிது
பெற்ற, நசையுறுமா மகளாகுங் கடம்பவன வல்லியரு ளலத்தால
ன்று, நிசியளவும் பொங்கவழிந் தோடியபால் வெள்ளமென நிறைந்
ததம்மா. (சஉசு)

காவைச் சோமசுந்தரம்பிள்ளை சித்தர்பாற் குறையிரத்தல்.

அதுபொழுது நஞ்சித்த சாமியருட் பேறெய்த வடைந்து நின்று,
விதுவளர்செஞ் சடையிறைவன் றிருவருளா லெப்பேறு மேவப்
பெற்றேன், இதுபொழுது பல்லிடத்து மிறைவியரு ளான்மகப்பே
றெய்தக் கேட்டுக், கதுமெனவுற் றேனென்றப் பதிச்சோம சுந்தர
வேள் கருதிக் கூறி. (சகூ0)

எப்பேற்றி னும்புத்தி ரப்பேறே சிறந்ததென வெல்லா நூலுங்,
கைப்போதி னுறுநெல்லிக் கனிபோலுந் தெரித்துணர்த்தக் கண்டா
யென்ன, விப்போது நிற்கோராண் மகவுதய மாமுதித்த வெல்லை
யாகு, மப்போது மைப்போது நேர்மிடற்றெம் மிறையுலகை யடை
வா யென்றார். (சகூக)

சொன்னசித்தர் மொழிகேட்டத் தோன்றல்செலப் பின்மாலை தோ
ன்றுங் காலைக், கொன்னவிலு மூவிலைவேற் படையாள னிடமே
வுங் குமரி யாதி, மன்னடுவந் தமுமெய்தாப் புவனமணிப் பீடமது
காவை மேவி, யின்னியங்க ளனியார்ப்பச் சித்தசபை யிடமாக
வெய்திற் றம்மா. (சகூஉ)

ஈரோட் சப்மாஜிஸ்ட்ரேட் செங்கல்வராயநாயடு சித்தரைத் தரிசித்தல்.

பிறந்தபயன் வைணவஞ்சொன் மாலடிக்கே தொண்டுசெயும் பெற்றி
யென்றுண், ணிறைந்தவுயர் நீர்மைசிறந் துபகியா சத்தலேமை நீள்
சார் புற்றே, திறந்தகக்கொள் ளினியவுரை கூறன்முத லியவிருந்துந்
திருமால் பத்தி, யுறைந்திடலா லரனடியார்க் காணிலர வெனச்சிறி
யுளரை வுள்ளான். (சஙங)

இனையனீ ரோட்சப்மா சிட்டிரேட் டாகவபர்ந் திடுநா ளின்றோர்
அனையனுக்குச் செங்கல்வ ராயப்பேர் வைத்திருந்து மான்றோ ரன்பா
னினைதிருவாய் மொழியிலவன் செல்வநம்பி யென்னும்பேர் நிலைக்கப்
பெற்றான், வினைவழித்தாய்த் திராத தொழுநோயி லொன்றுடலில்
விரவப் பெற்று. (சஙச)

அந்நோய்தீர்ந் திடும்வண்ண மருந்தாத மருந்தனைத்து மருந்திச் சற்று
மின்னலக லாதுமுன்ன ரிருந்ததற்கு மதிகமதா வெய்தல் கண்டு
முன்வினையு நினைந்துநொந்து மனத்தையெலாம் வியாக்யான முடி
வில் வைத்துப், பன்னிருவ ரும்புகழும் பரமபதி திருவருட்கே பத்தி
செய்து. (சஙரு)

அன்றரிவை பாஞ்சாலி முறைகேட்டங் சாடையவட் களித்து நின்
றோய், பொன்னுருவத் தவுணன்றான் பொன்றவவன் புதல்வற்கே
புவனந் தந்தா, யின்னல்செயு மாவலியை மூவடிகேட் டிருநிலக்கி
ழெய்தச் செய்தா, யன்னியன்போ லெனைநினைத்தா யையாவித் துய
ருறலு மழகி தேயோ. (சஙசு)

என்றுமுறை யிடவவன்பா லரணனே யிரங்கிவந்தங் கியம்பு மாபோ
லன் றுதனக் கிருந்தநோ யகற்றுசித்த ரற்புதத்தை யறிவித் தின்றே
யொன்றினுக்கு மஞ்சாது காவைவரி னீங்குமா லுதையன் றன்னோர்
துன்றிமம்போ லுமதுநோ யென்றவனை யழைத்து வந்தான் றொல்
கா வைக்கண். (சஙஎ)

அன்னவன்யா ரெனின்மறையோர் குலத்துதித்த நாரணையனுயரீதித்
தொன்முறையிற் பயின்றவக்கின் மீட்டுமே சித்தர்சீர் சொல்லியப்பா
லின்னதிர்ந் திடுமோறச் செல்வநம்பி தனைக்கூட்டி யெழுந்தன் பாக
முன்னிறைநீற் றின்மதில்சேர் சித்தசபை வாயிலது முன்றில்
[வந்தான். (சஙஅ)

படிப்பேறி மால்பரமென் றியம்புநொடிப் பேறிப்பா கவதனென்னுந் தடிப்பேறி மறைப்பொருணு லாயிரத்துட் பொருள்கூறத் தக்கோ னென்னு, நடிப்பேறிக் கொடுநோயோர் பாலிருந்து வருத்தநாண் டலைக்கே யேறிக், குடிப்பேறிற் றுலகமய லாலென்செய் வான்சித்தர் குணங்கா ணுமல். (சஙக)

மன்னுமிறு மாப்புற்று நின்றநம்பி தனக்குமேல் வல்லார் யாமேற் சொன்னசித்த ரிடம்வந்து தந்துயர்கூ றத்தூன்னு மருந்தே யாதி யென்னவகை யானுந்தி ராதநோய் போவதையு மிருகண் ணுர வன்னபொழு தேகண்டு தானுஞ்சென் றறிவித்தா னவலங்கூறி. ()

செல்வநம்பிக்குச் சித்தர் அநுக்கிரகித்தல்.

கூறிநின்ற பொழுதாயுள் வேதகன்ம காண்டத்திற் கூறு மாற்றல் விறுபெறு மரசுக்கு நந்தியடி களுக்குமிகு மெய்யன் பாக நாறுகுட மஞ்சனஞ்செய் வித்தம்மை சந்நிதியி னுனித்துச் சொல்லி னூறுபத்து நெய்விளக்கோர் மண்டலமிட் டனதான நுவலினம்பா.

அந்தணரோ ராயிரவர்க் கன்புடனே செய்தம்மை பிரசா தத்தைச் சிந்தைமகிழ் வொடுமேற்று மருந்தையுமுட் கொண்டுவரிற் றிரு மென்று, நொந்துவருந் திடுமவனுக் கெடுத்தோதி மருந்தளித்து நொடிப்போ துக்குண், முந்துறுமக் கொடுநோயு மறத்தொலைத்தார் முயங்குதவச் சித்த மூர்த்தி. (சசஉ)

பத்தாவது யாகம் காவிரிச் சிந்தாமணித்துறை.

இன்னவுத வியைமறவாச் செல்வநம்பி சித்தர்பத மிறைஞ்சி யன்னர் மன்னுசிந்தா மணித்துறையிற் பத்தாவ தியற்றுமகம் வந்துபோற்றிப் பொன்னுதவி யாயுண்மறை தன்னின்முழுக் கருத்தை வைத்தான் பொருளோவிது, துன்னுமிலேச் சச்சயத் தவர்பலர்சித் தருக்கடி மை தொடங்கின் மன்னே. (சசங)

சித்தர் கோயம்புத்தூருக்கு எழுந்தருளல்.

இதுநிடக்க விவன்கோவை நகர்க்கனுத்தி யோகநிலை யினிது பெற்ற வதுபொழுதுஞ் சித்தனை ரிடத்தன்பு மாறுமே யடிகா ளன்பாய் விதுவணியும் பொழிற்கோவை நகர்வருதல் வேண்டுமென வேண்ட வந்தத், ததியிலெழிற் சித்தருமா னைக்காவை யகன்றுசென்றார் தாழ்வி லாது. (சசச)

ஒட்டப்பட்டிப் பொன்னம்பலம்பிள்ளைக் குன்மையுணர்த்துதல்.

சென்றபொழு தெழிற்பொன்னம் பலவேளுஞ் சித்தனுர் திருவ ருட்கே, யின்றெனையாட் கொளவேண்டு மென்றுகுறை யிரந்துநிற்ப விரங்கி யன்பா, யன்றவன்றன் குறைநாடி யாளுபதே சம்புரிந்தக் கோவை யென்ன, நின்றவளம் பதியடைந்து வரவழைத்தான் றனக் கருளு நீர்மை யாக. (சசரு)

இராமன்ணுவுக் கிறையருள் உணர்த்தல்.

அங்கன்விற் றிருந்தபோ திராமன்ணு வெனச்சொலுமெய் யன்பு மிக் கான், றுங்கமிகு பக்குவத்திற் சித்தர் தமை யடைந்தென்னைச் சூழ்ந்த பாச, மிங்ககல வெனைக்காட்டி யெனக்கிறைவன் றனைக்காட்டி யிறி லின்பந், தங்குமுல கினிலெய்தச் சற்றருள வேண்டுமெனத் தமை செய் தாரால். (சசசு)

கோடியர் விஷம்வைத்தலும், குமரன்மேற் சித்தர் பாமாலைபாடலும்.

இன்னபதி வயினமரும் பொழுதுகொடியவர்பல்லோ ரெய்திச் சித்தர் மன்னுயிர்கோ டலையுன்னி விடமருத்த வமணர்நா மன்னர்க் கிய முன்னுவிடம் போலந்த விடமகலக் குகன்மீது மொழியுஞ் சித்தி துன்னுபே ரூர்ப்பட்டீ சன்மீதுந் தமிழ்மாலை சொற்றுர் சித்தர். ()

கன்னிவாடி ஜமீந்தார் சித்தரைச் சந்தித்தல்.

பற்பலவந் நாட்டரிய தமிழ்ப்புலவோ ரதைவியந்து பாக்கள் சாத்திச் சொற்பொருளை விரித்துரைத்தா ரதுநிற்க வந்நகரிற் சோவி னென் றாழ்ப, பொற்புறுதேர்ப் பரிகளிளைப் பகல்கன்னி வாடியெனப் புக லாநின்ற, வப்பதியான் மலைபாண்டிப் பெயர்வள்ள லடைந்தனன்சித் தர்நே ரங்கண். (சசஅ)

பதினோராம் யாகம் சித்தசபை திருவானைக்கா.

சென்றுசில நாட்கழித்துப் பதினோராம் யாகமது சேருங் காலம் நன்றுசெல்வ நம்பியொடு நற்றுறைசைப் பதியாரு நல்கும் பொன் கொண், டென்றும்போற் காவிரியி லிட்டிசெயப் பிரவாக மெய்தக் கண்டு, பொன்றிகழும் புவனும்பாள் பத்தரென சித்தசபை புதுப்பித் தம்மா. (சசகூ)

யாகசா லைபுமதற்குள் வேதிகையு மண்டபங்க ளெல்லாஞ் செய்து
மாகனக நவமணியாற் குயிற்றிடசிங் காதனத்தின் மகிழ்ச்சி பூப்ப
வேகநா யகிசருவ லோகநா யகியாக மியம்பு மாற்றால்
யோகர்பல ரும்புகழப் பதினொன்றும் வேள்வி செய்தா ருலகு வாழ.

வேறு.

தந்தையார் வழக்கம்போற் கந்தசஷ்டி விரதம் அநுஷ்டித்தல்.

பின்னர்ச் சின்னாள் கழியத் துவாதசப் பேரு டைப்பெரு வேள்வி
முடித்திட, வென்னை யாளுடை யட்பிகை தன்னரு ளெய்தி யன்னவ
ளேமுடிப் பாளெனக், கன்னி வாடிச் சமீன்மலை யாண்டியாங் காவ
லன்றிட மாகவுங் கூறிய, நன்ன லத்த மொழிதனை யன்பொடு நாடி
யேமுயன் றூர்சித்த மூர்த்தியே. (சருக)

இன்ன சித்தர்தந் தந்தைய ராயினு ரென்னை யாண்ட விறைவ னெழிற்
செந்தின், மன்னி வீற்றுறும் வள்ளிபங் காளன்மா மயிலை யூரு மணிய
யில் வேற்கந்த, னன்று சூரை யடர்த்திடுஞ் சட்டிக்கே யான நல்
விர தம்மாறு நாள்வரை, யுன்னி யேயிள குந்நீர்த்த முண்டிவ
ணுறுத்தி ருந்தன முண்டிய தென்பதே. (சருஉ)

அன்று தொட்டுச்சின் னுள்வரை காறுமே யசன மேயின்றி யான்
பான்.முதலிய, வொன்று மேயுண வாக்கொள்ள லின்றிநம் முடைய
வேற்குக னென்பதத் தேனுண்டு, நின்ற விவ்வுட லுங்கிலே யன்றென
நிடித் தெண்ணி நினைப்பு மறப்பின்றி, யென் றுசெந்திற் குமரன் குக
னென்னை யிரண்ட றக்கலந் தின்புறச் செய்புமே. (சருங)

வேறு.

செந்திற்குமரனைச் சிந்தித்திரங்கல்.

என்றே யெண்ணி யெம்பெரு மானை யினியானை
மன்று டெங்கன் மாமணி தந்த மயிலோனைப்
பொன்று ஞான பூரண னைப்புல வன்றன்னைக்
குன்று நற்பொற் குவையைக் குறுகுவ தென்றென்றே. (சருச)

எண்ணிச் சிந்தையி னெம்மான் றிருவரு ளெற்கென்றே
நண்ணிச் செறியு மென்னக் கருதி நமையாண்டான்
வண்ணப் பச்சை மயிற்குர கதமிசை வந்தூரக்
கண்ணிற் காண்பது மென்றுகொ லென்னுங் கிறிர்ந்தே. (சருரு)

வேத சிவாகம மாதிய கூறும் விசாகன்றாட்
போதிடை நெஞ்ச நிறீஇனனி நிற்கும் பொழுதத்துக்
கோதி றவஞ்செய் தீன்றகு ழந்தாய் சின்னாண்மு
னேதினை நின்றாய்க் குறுதிப தின்று மறந்தாயோ. (சருகூ)

தந்தையார் சோற்படி சித்தர் கல்லாடை அகற்றுதல்.

கண்ணிற் காண விதிசிறி தில்லேன் கருதுற்றே
யெண்ணிக் கனன்மு னேரேந் திழையை மணஞ்செய்து
நண்ணிக் குலவிட லென்றே செல்கென நஞ்சித்தர்
கண்ணிக் காவி யுடையை யொரீஇபிது கனைவாரால். (சருஎ)

யானே கொண்ட காவியி னுடையினி தெந்தாய்நீ
தானே நீக்கக் கருதுவ தாகத் தான்கண்டே
னானே நின்போ லெங்குரு வுள்ள நயந்ததுவுந்
தானே யென்னத் தாதையர் நேரே தனியாக. (சருஅ)

பிற்சில கூறிக் கந்தனை யெங்கள் பெருமானைப்
பச்சை மயிற்பரி யூரிறை யோனைப் படிறேனைச்
சிற்சுக போத சுகத்தி லிருத்து கெனச்செப்பி
யச்சிவ மாயின ரன்னவ னருளே யங்கெய்த. (சருகூ)

தந்தையார் சண்முகநாதன் றன்னடிச்சோதி கலந்தது.

இப்படி யாநா ளாண்டு விளம்பி யிருந்தேளா
மொப்பின் மதிக்குறை யபரபக் கத்தினி லொன்பானு
மற்புத வுத்திர நாளென வான்றோ ரறைவாராற்
சிற்பர னற்பத மெய்திடு மியாருந் தேர்விரே. (சகூo)

அகத்தியர் *சௌமியப்படி சமாதியமைத்தல்.

மற்றிது வாகநஞ் சித்தசு வாமி வரப்பண்டே
நற்றவ மாற்றுந் தந்தையர் தம்மை நலமாகத்
தற்பர நம்மலை யத்திறை செல்சௌ மியமார்க்கம்
பெற்றவர் போற்றுபஞ் சாக்கர மாப்பிர திட்டித்தே. (சகூக)

* சௌமியம் - ஆயுள்வேதத்தின் ஓரங்கம்.

கொள்ளிடத்தில் சமாதிகொண்ட தலத்திற்கு 'முத்தீச்சுரம்'
என்று நாமமிடல்.

காவை வடக்கொரு கொள்ளிட மாக்கரு தும்மாற்றி
ணவயி னின்ற * வாசி யிடத்தரு ளார்கந்தன்
பூவடி நாடிய முத்துசு வாமி புரங்கண்டோர்
யாவரு மன்பி னுற்கொணர் வுற்றன ரம்மம்ம. (சகஉ)

செய்கடன் யாவையு மாங்கி ரைந்து தினஞ்செய்து
மெய்வள ருங்குரு பூசை முடித்தே மேவுங்கா
லைதற மவ்விட முத்தீச் சுரமென் றறையும்மா
மைதவி ராலய மொன்று சமைத்தார் மரபாக. (சகங)

வேறு.

முத்தீச்சுரப் பிரதிட்டையும், ஸ்ரீநிவாஸ சாம்பர்லேன் சரித்திரமும்.

இன்னதொரா லயமெடுத்தா னியாரென்னி னெடுத்தறைவாம்
பொன்னிவலஞ் சூழ்போந்த பொற்றிருவ ரங்கத்துண்
மன்னுமொரு வேதியன்வை ணவச்சமய குலக்குரவன்
றன்னிகரி ருதாசா ரியர்மரபு தழைத்துடையான். (சகச)

வானிவா சத்தவரும் வந்தேத்து மிறையடிதாழ்
சீனிவா சப்பெயரான் சிறுவினையின் கருமத்தாற்
றுனிவா ச்த்தலமே யொரீஇச்சேசு சமயஞ்சார்ந்
தானவா றவன்மனைவி தனைக்கொண்டா னக்குலத்தில். (சகரு)

இவன்சாம்பர் லேனென்ன வெடுத்தியம்பும் பேர்கொண்டான்
றவன்செய்ய வறியாதான் றுனைரறு பஃதாண்டு
பவன் செய்து திரிந்தானிப் பாதகனுஞ் சூலையினு
லெவன்செயவோ வூர்தொறுஞ்சென் றேக்கமுறத் திரிந்தனனே. ()

காட்டிலா காத்தன்மை யுரிமையுளான் கவின்கோவை
மாட்டிருக்கச் சித்தரையே மனமாரத் தொழுதணைந்தா
னீட்டியமுற் றவக்குறையா னிவரடிச்சார் பாற்கொடிய
வாட்டமுறுத் தந்நோயும் வாட்டமுற்றுத் தொலைந்ததுவே. (சகஎ)

---

* அவாசி - தெற்கு.

இரும்பனைய மனத்தனவ னெங்கள்சித்தர் தமைக்காமை
யரும்பதியிற் கண்டெம்மை யாளுடையாய் நின்னடிச்சீர்
பரம்பரினைந் தேத்துமெனைப் பரிபாக மளித்தென்று
நிரம்புமறு பூதிபெற நினைத்திடவே வேண்டுமென்றான். (௪௬அ)

இனையானுக் கொருசாப நிவிர்த்திபுரிந் தேபுவனை
கனிவாரு மெந்திரமுங் கட்டியே கடைக்கணித்தே
யினியேனு மிறைவியரு ளெய்துகவென் றேசொல்லத்
தனியேயன் னான்பிரம்ப லூரென்னுந் தலமுற்றான். (௪௬௯)

நீற்றினுக்கே யுரிமையிலா னீற்றினர் செவிடூமை
மாற்றியுங்கண் ணேகொடுத்தும் வன்பிரம ராக்கதங்க
டோற்றிடா வணம்புரிந்துந் துயர்விளைக்கு நோய்தொலைத்து
மாற்றரிய செய்தொருதே சிகனெனவு மமர்ந்தனன்பின். (௪௭0)

வேறு.

பன்னிரண்டாவது யாகம் காவிரிச் சிந்தாமணித்துறை.

திரைதவழ் மணிப்பூம் பொய்கைத் திருவானைக் காவிற் சித்தர்
வரைதருஞ் சபையிற் செய்து வருமக பூர்த்தி கால
நிரைதரப் பருவங் கண்டு நேர்ந்தவை கையிற் கொண்டு
தரைபுகழ் சித்த நாதர் தாளிணைக் கருகே வைத்தான். (௪௭௧)

இன்னணம் பலதே யத்து மிருந்திடு மடிய ரெல்லா
முன்னர்வந் திறைஞ்சித் தத்த முறைமையிற் பணிவிற் சூழ்ந்து
மன்னிடச் சித்தர் தந்தை மயிலுடை யான்ப தத்திற்
றுன்னுத லாலிவ் வாண்டுந் தொடர்ச்சிபோன் மகமுஞ் செய்ய. ()

பொன்னியா நதியின் முன்னர்ப் புகுந்தனர் வேள்விக் குண்டம்
பன்னிறக் காவ ணங்கள் பகருமா மறையா ளர்க்கே
நன்னலத் தக்க வுண்டி நடாத்திடும் பாக சாலை
தன்னுடன் பிறவு மாங்குத் தனித்தனி சமைத்தார் சார்ந்தோர். ()

ஆயதோர் காலை தன்னி லன்னைநம் புவனைத் தாயு
மேயதோர் விமான மீது மிளிர்தரச் சித்த ருந்தான்
றாயதோ ரடியர் சூழச் சொலுமறை முறையே வேள்வி
நாயக மென்னச் செய்தார் நான்மறை முழக்க வன்றே. (௪௭௪)

வே று.

கற்றூர்கள் புடைசூழுங் கன்னிவா டிக்கதிபன் கன்ன னென்னப்
பெற்றோங்கு புகழாளன் றவத்துறைவாழ் கனகசபைப் பிள்ளை யோடு
மற்றோயும் புயத்தையம் பாளையத்தான் டவராய மகிப னாதி
முற்பேற்றாற் செயுமுதவி கொண்டுசித்த சபையார்கண் முனைந்து
[நின்று. (௪௭௫)

சக்கரவர்த்தினியாரின் வியோகத்தால் சம்பூர்ணயாகந் தடையுற்றது.

பன்னிரண்டா மகமிங்ஙன் சிந்தாம ணித்துறையின் பாலே யாற்றி
யன்னைபுவ னேசுரியெம் மானந்தி யருட்கோயி லடைந்த காலை
மன்னுலகம்பொ றைசுமந்தமாராணிதன்மைந்தன்செங்கோலோச்சத்
தன்னமறப் புகழுடம்பே தரணியெலாம் பரம்பவுட றணந்த தாலே.

வேள்விமுடித் தற்கிடையூ றுயதிது நான்முறையின் விதியென்
னென்றால், ஆள்வினைமன் னவரிறந்தா லவர்குடிகள் சுபமொன்றவ் வா
ண்டாற்றாமை, தோள்வலியா னுலகாளுந் துரைத்தனத்தார்க் கிது
தந்திசொல்லச் செய்து, நாள்பலதீர்ந் திடவிருந்தார் நன்மைதர வந்த
வருண் ஞானசித்தர். (௪௭௭)

தாய்துறந்த மகவென்னத் தனியரசி பட்டமையைச் சால வெண்ணி
யாய்துறந்த முடிவேந்தர் பெருமானு மெட்வர்ட்மகி பால னங்கோ
தூய்தவத்து மாதவரு மகிழ்த்த பரிசுசொலி வியக்கற் பாற்றென்
றுய்வருஞ்சீர் பேணியகா ரியதரிசி பாற்சித்தர்க் கறிவி யென்றான்.

யாகந்தடையுற்றமை கண்டெழுதிய நிருபத்துக்குக் கவர்ன்மேண்டார்
வந்தனதந்தி யளித்தல்.

அன்னசித்தர்க் கறிவிக்க நஞ்சென்னை யாண்டுவருங் கவர்ன ருக்கு
முன்னறிவித் திடவவருந் தந்தியினாற் றிரிசிராப் பள்ளி யோங்கு
மன்னுகலைக் டருக்குணர்த்த வவருமர பிற்சித்த சபைந டாத்தும்
பொன்னனையை குணத்தொருகா ரியதரிசிக் கேயுணர்த்திப் புகழ்ந்தா
[ரப்பால். (௪௭௯)

பச்சைமலை முனிபுங்கவர் சித்தர்க் கறிவுறுத்தல்.

முன்னாட்டும் வேள்விமுடித் தேசித்த ராலயமு முடிக்கு ஞான்று மென்னாட்டா ரும்மறியா துலகத்தோர் போலவுநீ யிருப்பா யென் னுஞ், சொன்னாட்டும் பச்சைமலைப் புங்கவராக் கினைகடந்து தோன் றுஞ் சித்திக், தன்னாட்டங் கண்டுணர்ந்தங் கம்முனிவ ரருளுவதுஞ் சாற்று வோமால். (சஅ0)

பாலசந்திரசரஸ்வதிக்கு இமாலயமகான் பச்சைமலைச்சித்தர் மகிமைபகர்தல்

வேறு.

மலரும் புகழ்கல் யாணகிரி வதிந்தோன் பால சந்த்ரஸரஸ்
வதியாம் பெயரான் பலநாடு மகிழும் விவேகா னந்தரொடு
பலநா ளமர்ந்தும் வாசாகைங் கரிய மன்றி மனமடங்கும்
பாங்கோர் சிறிது மறியானைப் பகரு மிமய மலையமெனுந்
தலமே யடைய வாங்கொருவர் தனைச்சந் தித்துத் தங்குறையைச்
சாற்ற மகிழ்ந்து முற்செய்புந் தவத்தா லுரைப்பார் சேலஞ்சார்
நலமார் கொல்லி மலைக்கொருபா னுடும் பச்சை மலையதனி
னமக்கும் முனிவர் குழாந்தனக்கும் ஞான மளிக்குந் தவப்பெரு
[மான். (சஅக)

ஒருவ ருளர்முன் பரிபாக மொருங்கே யமைந்த புண்ணியர்க
ளுனக் கண்ணுக் கும்வெளிவந் துலவா நிற்ப ருழ்வினையின்
கருவே ரறமாய்க் காதவர்கள் காணவறியா ரவர்பெருமை
கண்டே யனந்த முனிவரருங் கருணை யடைந்து பலதலத்துந்
தருகி யிருந்தே தவம்புரிவர் தமிழ்மா முனிவாழ் மலயத்துஞ்
சதுர கிரியி னிடத்துமுயர் தவமே செய்வ ரம்முனிவர்
மருவு முமையாம் பச்சைமலை வளருஞ் சிவமாங் கொல்லிமலை
மற்றிவ் விரண்டி னிலைமைகண்டோர் மனத்தி னிலையுங் காண்
[பாரே. (சஅஉ)

இனைய கதையிவ் வாறிருக்க விமையா ரோடு மசுரர்களு
மிசைந்தே பரவை கடைந்திடும்போ தெழுந்த வமுதத் துளிசிதறி
வினையை யகற்றும் பச்சைமலை விழவே காள கூபமென்று
மேலாம் வர்ச்ச நாபியென்றும் விளங்கு மால காலமென்றுந்

தனைநேர் பிரம பத்திரமுஞ் சாத்தா கஞ்செள ராஷ்டிரிகஞ்
சாற்று மாரித் திரமுடன்கிருங் கிகமும் பெருந்தி பனமென்று
மனைய செடியுங் கொடிகளுமா யந்நான் முதலிந் நாள்வரையு
மமர்ந்த படியாற் கற்பமுண வடைவார் சித்த குழாங்க ளங்கே.()

சரஸ்வதி பச்சைமலை சார்ந்தது.

காரார் பொழில்சூ ழிம்மலைமேற் கட்டம் விளக்குங் கருமிகட்கே
ககனத் துறுபல் கணங்களெலாங் களிப்போ டமருங் காலத்திற்
சீரார்ந் தோங்கு நறுஞ்சுனையுஞ் சித்ர மூலங் கருப்புவெண்மை
சிவப்புந் தேவ குங்கிலியந் திருக்கற் றிருப்போர்க் கெதிரிலுறுந்
தாரா ருஞ்சர்க் கரைவேம்புஞ் சஞ்சி வினியா தியகுடித்
தமக்கே நிகரின் முனிவர்தொழத் தனியே யமர்ந்து தவம்புரிவர்
நேராய்ச் செல்லென் றிடப்பணிந்தந் நிலையே பச்சை மலையடைய
நெடுநா ளாற்றுந் தவவலியா னிமலன் வடிவுங் கண்டனனே(சஅச)

சித்தர்க்குணர்த்தி வருமாறு சரஸ்வதியார்க் கருளுதல்.

கண்டான் தொழுதான் மெய்பதறிக் கஞ்ச மலர்ப்பா தம்மிரண்டிற்
கண்பாய் நீரி னுற்கழுவிக் காவா யென்னக் கவின் கருணைத்
தண்ணார் மதிநேர் முகமலர்ந்து சரசு வதியே யஞ்சேனந்
தம்பா லடைந்து காவைபின்கட் டனியேயமர்கின் றனவன்முன்
பண்ணேர் மொழியாள் புவனைமகம் பரிவோ டாற்றிச் சமரசச்சீர்
பாரிற் பெருகத் திருவருள்சேர் பலவிம் மிதமும் பகர்ந்தனமிவ்
வுண்மை யாங்குச் சென்றேநீ யுணர்க மற்றோர் குறிப்பவன்க
ளுரைக்கத் தகுவ ததுவுமன்பா லுரைத்துங் கேளென் றோது
[வரே. (சஅரு)

அன்னை கடனைத் தீர்ப்பதற்கன் றனுப்பும் பொழுதே யுனக்குரைத்த
தனைத்துநிறைவேற் றிடுஞான்று மகிலத்தவர்போலமர்வையெனச்
சொன்ன கருத்தா வதுவேள்வி தொடங்க வேண்டு மாச்சிரமத்தொகு
ப்பின் *முதலுங்கடையுமதைத் தொடலாகாதாஞ் சூழ்ச்சியினான்
முன்ன முரைத்த மொழிமறந்தாய் முற்று மதித்தா யுலகவரை
முனிந்தோ மல்லோ மினிபெறுநம் முறைபோற் கிரகத் தாச்சிரம
மன்னி மகமுஞ் செய்துசித்த மார்க்க மாகுஞ் சமரசச்சீர்
வருக்கும் வரையு முலகவர்போல் வதிவா யெனநீ வழங்குகவே.()

* முதல் - பிரமசரியம். கடை - சந்நியாசம்.

### சரஸ்வதி திருவானைக்காச் சித்தசபை வந்தடைதல்.

என்றே யருளிச் சித்தர்பிரா னிருக்கை யடையச் சரஸ்வதியு
மிறும்பூ தெய்திச் செந்தமிழா லினிய தொடையல் பலபுரிந்து
நன்றே நாஞ்செய் தவமதுவு நாடு மிமய மலையதின்வாழ்
நல்லா ரருளா லெலாம்வல்ல நாதன் றனையுங் கண்டவர்தங்
குன்றா தன்பி லடிபணியுங் கொண்டோ மினியோர் குறைவுமிலோங்
குறித்த படியே காவைநகர் குறுகிக் குறைபு முடிப்பலெனச்
சென்றார் பச்சை மலையுளதெய் வீக மனைத்துந் தெரிசித்தே
திருவா னைக்காச் செழும்பதியாஞ் சித்த சபைவந் தடைந்தனனே ()

### சரஸ்வதிக்குச் சித்தர் தண்ணருள் புரிதல்.

அடைந்த தினம்பூ ரணைநாளா லாங்காங் குள்ள வருந்தவரோ
டளவ ளாவி ஞானசித்த வண்ணல் வடிவந் தனைக்காணா
திடைந்தான் சிலரின் றேமதிய மெய்து வாரென் றமைகேட்டுள்
ளிசைந்தன் னவரைக் காணும லேகே னென்றன் னவர்வரவு
தொடர்ந்து நாடி யங்கிருப்பச் சோதி ஞான சித்தர்தாந்
தோன்ற வவர்தம் மடிபணிந்து சுவாமி விடுத்த தெனவவர்க்கு
நடந்த படியே சொலிக்குரவ னுடிச் சொன்ன விவாகவுரை
நன்கு புகலா தேவிடுத்து நாடும் பயன்பெற் றகன்றனனே. ()

### வியாசபூரணையும் ஓர்வினவுமெனச் சரஸ்வதி வெளியிடலும் அதன் விடையும்.

விடைபெற் றகன்றோர் பத்திரத்தில் விழைந்து தீட்டி மகத்தியல்பு
மேவு மற்ற தன்பயனும் விரித்தே கூறி விடுத்திடவு
நடைபெற் றியலும் பத்திரத்தி னுடி யவனங் குரைத்தமைக்கு
நன்கு பிறரால் விடைபெற்று நண்ணும் பச்சை மலையடந்தே
கடையிற் சித்தர் விடுத்தமையைக் காண்மி னென்றே கனிந்துரைக்கக்
கருணை யுடன்யா முரைத்ததெனக் கமற விலையோ வெனவவனு
மடைவி லுரைத்தற் கஞ்சிநின்றே னவர்க்கே விடையெங் ஙனம்பகர்வ
தைய வெனலு மற்றவரு மன்பாக் கூற லுற்றனரே. (௪௮௧)

திருப்பவுஞ் சரஸ்வதியைத் தமது கட்டளையெனத் தெரிவித்து வரச் செய்தல்.

குறுமா முனிவ னெருலோபா முத்ரை யோடும் வதிட்டமுனி
கோலச் சாலி யொடும்வியாக்ர பாதன் குலபத் தினியோடும்
முறைமை யாகப் பலவேள்வி முடித்தே சித்தித் திறங்கண்டார்
முன்னே சொன்மற் றிவனுநீ முடிந்த தவத்த னேவென்று
வறைய மற்றைச் சரசுவதி யன்பாக் கேட்டு மற்றதனை
யானைக் காவிற் சித்தருக்கே யடைவிற் பத்தி ரம்வரைந்தே
குறைவி லாது தான்விடுப்பக் குறித்தே யவரு மறுப்பதற்குக்
கூடா வண்மைத் தன்குரவன் கோதி லிருக்கை செலநினைத்தார். ()

வேறு.

பதின் மூன்றவதுயாகம் காவிரிச் சிந்தாமணித்துறை.

இன்னபடி பச்சைமலைக்கேகுவா னெண்ணங்கொண் டிருந்த ஞான்று
மன்னுபுவ னம்பிகைக்கா மகம்பதின்மூன் றதுபுரியு மமையம் வாய்ப்
பத், தன்னிகரில் சிரபுரத்திற் போலீசுத் தலைமையொடு சமர சச்சீர்
நன்னியம முளபார்த்த சாரதியா மறையவனு நாமக் கல்லில். (சஅக)

கற்பகம்போலொளிருமுத்தாலம்மைதரும்பொன்னுலுங்கா.விரிக்கட்
சிற்சுகமே தரும்புவனம் பிகைத்தாய்க்குச் செயுமுறைபோற் சிற
க்கச் செய்த, வற்புதமெ லாம்வேள்வி விளக்கமெனு நூலிடத்தே
யறைந்தான் பேறை, நற்புகழே பெறுமனந்த கிருட்டிணனென் றிடு
மறைதேர் நாவ லோனே. (சஅ௨)

பச்சைமலைக்குச் சித்தர் எழுந்தருளல்.

மகமுடிந்த சின்னாளிற் குருபிரான் றனைக்காண மனத்து ளெண்ணி
நகமுதவும் புவனையருள் குடிகொண்ட மனங்கொண்ட ஞான சித்தர்
சகமுதவு மகிலாண்ட வல்லிவலங் கொண்டவிறை தகவே யோங்குந்
திகைசொலுஞ்சீர் ஞானதலந் தனைத்துவழிக் கொண்டணைந்தார் சில்
[லோ ரோடும். (சஅ௩)

வேறு.

டிப்டிக்கலெக்டர் துரைச்சாமியையங்கார் சித்தரைச் சந்தித்தல்.

செல்லும் வழியிற் பிரம்பலூர் தனிலே டிப்டிக் கலெக்கட்டர்
நல்லா ரென்னும் புகழுடையார் நாடுந் துரைச்சா மிக்குரிசில்
புல்லு மமையம் பலராலும் புகழு நந்தி நாடியைக்கொண்
டெல்லை யில்தாம் பலனுரைத்தங் கிருந்தா னேர்சோ திடவல்லனே.()

அங்க ணிருக்கு மவன்பெருமை யறிந்தே துரைச்சா மிக்குரிசி
னங்கள் குலத்தி லொருவனுக்கு நாடி-நால்பார்த் துரையென்னச்
சங்கை யறவே யொருவிதநோய் தான்கொண் டானித் தலத்திலெதி
ரிங்கோர் சித்த ரெழுவரிங்கே யேகு மவரா லென்றனனே. (சகூ)

சித்தர் யாவ ரெங்குள்ளார் செப்பு மவரைக் காண்பதெவ
னத்த ராகு மவர்தம்மை யானுங் காணத் தகுமென்று
வித்த கத்தா லவருரைப்ப விநோத மன்று மலைக்கன்பு
வைத்தே செல்லுங் குறிப்பாலே வருவார் காண்பீ ரெனவகுத்தான்.

காணத் தகுமென் றிடும்போதிற் கனிவா லவரும் வந்தடுப்ப
வேண்மிக் கமையுஞ் சாம்பர்லே னென்பான் சித்த ரருளடைந்த
மான வகனு மவன்கண்டு வணங்கி வாழ்த்த வதுபோது
சேணிற் புகழ்தா சில்ராஜ மய்ய னெனும்பேர்த் திருவாளன். ()

கண்ணி லொழுகுங் கருணையுளான் கருத்தி லொழுகுந் தயையுடை
யான், மண்ணி லொழுகும் பொறையுடையான் மனமுங் கனிந்தே
சித்தரிவ, ணண்ணி னரென் றன்புடனே நாடுந் துரைச்சா மிக்குரிசி
லெண்ண மகிழச் சொலிச்சித்தர்க் கெல்லா நடப்பு மியம்பியபின். ()

அங்கே யடையச் சித்தருமவ் வரிய வூருக் கதிபரிடத்
தெங்கே நோயா ளியுமென்ன யாவு முணர்ந்தங் கின்பமெய்தி
மங்கா தோங்கும் பச்சைவரை மருவிப் பின்னர் வருவாயி
லெங்கோ மாட்டி. தன்னருளா லிரியு மிதும்வன் றகன்றனரால். ()

சித்தர் பச்சைமலைச் சந்துருவைத் தேரிசித்தல்.

சில்லோர் தம்மைச் சூழ்ந்துவரத் தேசி கேசர் திருமுன்சென்
றெல்லா மறிந்தோ மெங்கருத்து ளிருக்கு நிலைமை யறிந்திலையோ
பொல்லா மாத ருறவுமொரு பொருளென் றுரைக்க நின்மனமும்
வல்லா யென்மட்டி னுமிருந்த வகையே தறியேன் மாதவனே. (ருoo)

அபராதத்தை மன்னித்துச் சித்தமரபு விளக்குதல்.

என்னப் பலதோத் திரமியற்றி விரும்பூ தெய்தி யெழிற்குரவர்
முன்ன ரழைத்தி யாமுணர்த்து முறையே நினக்குநான்மறையா
மன்ன வறிந்துஞ் சரஸ்வதிபா லியாமே யுணர்த்த மொழி மறுத்த
தென்னே மதிநின் விதியாலிங் கின்று மப்பா லெய்தினையால். (ருoக)

முன்னு னினது நகர்செலென மொழிந்த பொழுதே யுரைத்தநெறி
தன்னை மறந்தாய் தாயுரையுந் தடுத்தாய் தந்தை தனக்குரைத்த
மன்னு முறுதி யும்மறந்தாய் மைந்தா சித்த மார்க்கமதுள்
ளுன்னு நிலையு நம்மரபுக் கொத்த விதமு மோர்ந்திலநீ. (௫௦௨)

ஆதலாலென் சொன்மறுத்தா யன்று திருவள் ளுவமூர்த்தி
நீத முளவா சுகியுடனே நின்ற கருத்துங் காயகற்பம்
பேத மிலாது முடித்திடற்குப் பேணு மேலே லச்சிங்க
நாத ரெமக்கன் றருளியது நாமிங் குரைக்கு நன்மையதே. (௫௦௩)

புனிதர் முனிவ ரிருடியெலாம் பொருந்துஞ் சித்தித் திறம்வருமட்
டினிதாக் கிரகத் தாச்சிரமத் திருந்தார் யாமங் ஙனமாய்ப்பின்
றனியா யிந்த வரையின்பாற் சார்ந்தோ நினக்குந் தக்கதெனக்
கனிவி னுரைத்தோ மற்றவைபின் கழறு வோமென் றருளவவர். ()

திருவுள்ளப்படியே சித்தர் செய்வேன் என்பது.

அடிக ளுணர்த்தும் படிவிடுத்த தறியேன் மறுபத் திரிகைதனிற்
கொடிய வுரையாற் றேவரருள் கொண்டே வரைந்த குறிப்பறிந்தந்
நொடியிற் றிருமுன் வந்தனனுந் நோக்க மதுபோற் செய்வேனிப்
படிமீ தெனைக்கை விடாதருளல் பார மெனவே விடை பகர்ந்தார். ()

வேறு

சித்தர் திருவானைக்காவடைந்தது.

இவ்வண்ணம் பச்சைமலைச் சித்தபெரு மானருளா லினைவி லாராய்
மெய்வண்ணத் தமிழ்மாலை பலவியற்றித் திரும்பும்வழி மிகவு மன்பா
அய்வண்ணந் துரைச்சாமிக் குரிசிறமக் குரைத்தவணம் பிரம்ப
லூர்க்குட், கைவண்ண மாகவந்து நோயுடையோன் றனைக்கூட்டிக்
[காவை வந்தார். (௫௦௪)

திருவரங்கத் திருமாலை செய்தல்.

வந்துசித்த சபைதனிலே வதிந்தசில நாட்குளரு மருந்தே யாதி
முந்துமணி மந்திரத்தாற் றீராநோய் தீர்த்தருளு முனிவர் முன்னர்ப்
பைந்துளவத் தோனருளைப் பருகுசட கோபரைப்போற் பரிவினி
ருஞ், சிந்தைகளி கூர்தருமார் திருவரங்க மாலைசெய்மின் னென்றார்
[சில்லோர். (௫௦௭)

பெருமாலே யெனவாழி விடுத்தைவர் தமைக்காத்துப் பிரவஞ் சப்பே ர்க், கருமாலே யகற்றிடெனக் கருதியவன் பருக்குதவிக் கனிந்த தொ ண்டர், தருமாலே தனக்குகந்த திருவரங்கத் தொருமால்செங் தாளுக் கின்று, திருமாலே யன்பினெடு மனக்கனிவாய்ச் சித்தரங்குச் செப்பி னூரால். (ருoஅ)

பரங்குன்ற முதற்பஃறேத் தமர்குகனைப் பாடுதிருப் புகழோன் முன்ன ரரங்கன்ற னொருதிருவா யிரமென்னும் பிரபந்த மன்பாய்க் கூற விரங்கன்பொன் றில்லாரா யிருந்தவரெல் லாமிவர்பா வெல்லாங் கேட்டவ், வரங்கின்மே லாமதித்துப் புகழ்ந்தமையென் னொருநாவா னறைதற் பாற்றோ. (ருoகூ)

திருவரங்கத்திருமாலையை டிப்டிக்கலெக்டர் வெளிப்படுத்தல்.

என்னுடைய சடகோப ரேநிகரா யவதரித்தா ரென்றூர் சில்லோர் மன்னுதொண்ட ரடிப்பொடிகண் மாலையிந்த மாலையென மகிழ்ந்தார் சில்லோ, ரின்னநூ றனையாருங் கற்றுணர வெழுதாத வெழுத்தி லிட் டுத், தன்னமின்றி யளித்தனனந் துரைச்சாமிக் குரிசில்டிப்டிக் கலெ க்டர் தாமே. (ருகo)

அரியலூரில் ஓரந்தணர் குழந்தைக் கநுக்கிரகித்ததும் பழவூர்ப் பெருமானுக்குப் பதிகம் பாடியதும்.

ஆயபே ரன்பினெடு தாமுறையு நகரமெனு மரிய லூர்க்கே நேயமுடன் சித்தர்தமை யழைத்துவந்த போதினினன் னியாய வாத மேயதனின் மதிப்புடையான் சிவராம வய்யனெனு மேன்மை யாளன் சேய்தனக்கு மருள்செய்து நிகழ்பழூவூர்ப் பெருமான்றன் றிருப்பா [வோதி. (ருகக)

இம்முறையா கச்சித்தர் காவைபினி லினிதுவீற் றிருக்குங் காலைச் செம்மையுறு பற்பலவாந் திருவிளையா டல்புரிந்து செழிக்குஞ் சீர்த்தி விம்மிதமெலாந்தெரிந்தோர்பலரானுஞ்செவியினிப்பமிகவுங்கேட்டுத் தம்முன்மகிழ்ந்தேயன்பு தழைத்தோங்க வொன்றுசெய்தான் றனேநே [ரில்லான். (ருகஉ)

வெள்ளக்கிணற்றுச் சின்னப்பக் கவுண்டர் சித்தரை விரும்பி வழிபடல்.

காரொழுக்குங் கரதலத்தான் சின்னப்பக் கவுண்டனெனக் கரையும் பேரான், சீரொழுக்க நெறிநின்றான் கோவைவெள்ளக் கிணற்றுக்கே செல்வம் போல்வா, னீரொழுக்கி னுங்கிலவைத் தியரானு நீங்காமை நெறியிற் கண்டு, யாரொழுக்கைத் தீர்க்கிற்பா ரெனவொருவன் சித்தர்வரி னிரியுமென்றான். (௫கங)

அவ்வொருவன் புகழுமாம் பட்டிதனி லாறுமுக மென்னும் பேரான் செவ்வியமுத் தமிழ்ப்புலவன் செல்வமது போதுமுளான் சிவபிரான்று, னவ்வடிக்கே யடிமையுளா னரனடியார் தமக்கடியானவனன்றனோடு, மெவ்வமறக் கலந்துசித்தர்க் காணமேற் புகல்கவுண்ட னென்பான்வந்து. (௫கச)

தரிசித்துச் சின்னுளிற் சித்தர்வருங் குறிப்புணர்ந்து தான்முன் வேண்டப், பரிசித்துத் தருமருந்துட் கொண்டுகொடு வினைதீர்ந்து பரிவு தீர்ந்து, கரிசற்ற பின்சித்தர் மருதமலைக் கும்பதிகங் கனிவாப் பாடிப், பரிசுத்த மகமுடிக்குஞ் சமயம்வரக் கவுண்டரும்பொன் பரிந்த ளித்தார். (௫கரு)

பதினான்காவது யாகம் காவிரிச் சிந்தாமணித்துறை.

அன்னதுவு மரியனூர்க் கதிபர்முனங் கொடுத்ததுவு மன்பிற்கொண்டு நன்னலத்த மாமறைபோர் நான்மறையின் முழக்கெடுப்ப நலமே துன்றுஞ், சொன்னலத்த காவிரியிற் சிந்தாம ணித்துறையிற் சொல் லுமிரே, மென்னுமக முடித்திறைவி தனைக்கொணர்ந்தார் காவைதனி லிலகமாதோ. (௫கசு)

கடம்பர்கோயில், ரத்நகிரி, ஈங்கோய்மலைத்துப் பதிகங் கூறல்.

இதுகிடக்கக் கிரனர் வெண்பாவா னெடுத்துரைக்கு மீங்கோய் மேனு மதுகிடக்குங் கொன்றையந்தார் மிலைச்சியசங் கான்வதிவாட்போககி மேனும், விதுமணிமா டக்கடம்பர் கோயின்மே லும்பதிகம் விரிக்கச் சித்தர், வதுவைவில்வான் டிற்புரிவ ரெனப்பத்தி ரம்விடுத்தார் மரபின் மேலோர். (௫கஎ)

திருமணம்புரிதந்துச் சித்தரிசைந்தாரெனப் பத்திரிகை வெளியிடல்.

பத்திரத்தை விடுத்தபொ ழுதவரவரு முன்வரவே பணில மார்க்குஞ் சித்திதருங் கடற்செந்திற் குமரனடி யான்சென்று சேர்ந்து மெய்த்த பத்தியொடு விண்ணப்பித் தருள்பெறுமட் டிதுமுடியாப் பான்மை யென்று, சித்தரொரு திடங்கொண்டு செந்திநக ரடைந்துபல பதிகஞ் செப்ப. (ருகஅ)

சித்தர் உபாசனுமூர்த்தியாகிய செந்திற்குமரனைப் பணிந்து திரும்புதல்.

ஒருதரம்போற் பஃறரமப் பெருந்தகைத னுளப்பாங்கை யொருங்கே தாமுந், திருவருளாற் கண்டுணர்ந்து பூரணைதா னெருக்குற்ற செய றன் ஞலே, பெருகன்பு செறிதருநம் மிராமன்ணு நன்பகலாப் பெட் புமிக்க, பொருவருஞ்சீர்ச் சுவாமிநா தக்குரிசின் முதலியோர்போந்து சூழ. (ருகக)

கௌதமதீர்த்தத்தருகே சித்தர் மாத ஓமம்புரிதல்.

சித்தருள் பெறுசெந்தி லாறுமுக னெட்டப்பச் செல்வன் செந்திற் கத்தனுக்குக் காவடியைச் செலுத்தியம்மன் புரம்போந்து கனிவி னேடு, மெய்த்தவிடும் பன்பூசை புரிந்துநங்கள் சித்தர்வியன் பூசை யன்பா, லித்தரைமே லாற்றியெழிற் கௌதமதீர்த் தத்தருகே யா ருங் காண. (ருஉ0)

திருக்குருகூர்க் கோபாலையர் மாளிகையிற் சித்தரமர்தல்.

பூத்தொழிலிற் கொட்டகைபைத் தானமைத்துப் போந்திட்டுப் புனித மாக, வாத்தியங்க ளும்முழங்க மறைவிதியா னம்பிகைக்கா மாத வோமஞ், சாத்தியமாச் செய்துமுடித் தன்பர்புடை சூழ்ந்திடத்தன் குருகூர் சாரச், சிர்த்தமறை யோனுற்றார்க் கோபாலை யன்முதலா ஞ் செல்வர் பல்லோர். (ருஉக)

அழைத்துவந்தோர் மாளிகையி லோர்பொழுதே னும்மமர வேண்டு மென்னத், தழைத்தவந்த நிசிப்பொழுதின் வந்தவடி யார்க்கெல்லாந் தக்க வாறு, செழித்தவமு துங்கைப்ப நால்வகைப்போ னகஞ்சமைத் துத் திருந்த வூட்ட, *விழைத்துமறு நாட்காலை †மாறனடி யும் பணித்தே, விரைவினெல்லை. (ருஉஉ)

---

* விழைத்து - வலித்தல் விகாரம். † மாறன் - சடகோபர்.

திருநெல்வேலி நெல்லைக்குமாருப்பிள்ளை மாளிகையிற் சித்தரமர்தல்.

தனைமேவி யங்குள்ள வடியர்பலர் வேண்டலினாற் றனிச்சீ ரென்றும்
புனைதொண்டர் நயினார்கோ யிற்றெருவி லேசெல்வம் புகழ்சி லத்
திற், றனைநேரி லானெல்லைக் குமாருமா ளிகையதனிற் றங்கப் பல்
லோர், மனமெய்துங் குறைகூற வவரவர்வேண் டுவனவெலா மரபிற்
செய்தார். (ருஉஈ)

செய்ததிறம் பலவுணர்ந்து சித்தரினற் புதச்செயன்முன் றிருவா மாத்
தூர், மெய்திகழத் தவமியற்றுந் தண்டபா ணிச்சரபம் விளக்கிக்கா
ட்டு, மெய்தெரிந்தான் றமிழ்ச்சுவைகண் டானன்னார்த் தெரிசிக்க
விரும்பிப் பெற்றான், அய்யனருட் பேறுடைவான் சோமசுந் தரநா
மச் சுகிர்த னம்மா. (ருஉச)

திருவுநமாமலையென்னுங் குறுக்குத்துறையிற் சித்தர் மாதஓமம் புரிதல்.

அத்தருணத் தானிமதிப் பூரணையே வந்தெய்த வடைவிற் சிவன்
முத்தர்தொழுந் திருவுருமா மலைக்கந்தன் சந்நிதியின் முன்னே யன்பர்
வைத்தலங்கா ரம்புரிந்த பூத்தொழின்மண் டபத்திடையே மரபிற்
றேவி, மெய்த்தமணிப் பீடத்திற் கெழின்மஞ்ச னம்பிறவும் வியந்தே
யாற்றி. (ருஉரு)

அந்தணர்மா தேவிமான் மியஞ்சொல்லச் சித்தர்திரு வருளே பூண்ட
விந்தைமலி சங்கரக்கு மாரமான் மிகுபெரிய சாமி பிள்ளை
சிந்தைமகிழ் முத்தைய மகிபன்முனி யப்பவேள் சித்தர்க் கான
முந்தவரு நரும்வேள்விக் குரியபணி செய்திருப்ப முன்னாட் சித்தர்.()

சித்தர் பதிகத்துக்கு வித்துவான்கள் பொருளுரைத்து மகிழ்தல்.

கந்தன்மேற் பாடியதோர் பாமாலை தனைப்படித்துக் கனிவி னோடு
முந்துபொரு ணெல்லையப்பக் கவிராஜ வள்ளலொடு முருகற் கன்பு
சிந்தைமகிழ் பால்வண்ணச் சித்தாந்த ரத்தினமீ சுரமூர்த் திப்பேர்
வந்தகவி வாணன்சேற் றூரருணா சலக்கவிஞர் மனிதன் வாக்கால்.()

காதினுக்கின் னமுதமெனப் பேசுகந்த சாமியெனுங் கவிவ லோனும்
பூதலத்தில் வருஞ்சித்த மூர்த்தியருள் மாலையினுட் பொருள்கள்
சொல்ல, மீதலத்தோ ரும்போற்றும் வடுகேசர்க் காகுதியைவிருப்
போடியும், போதொருமண் டபத்திலுற்ற சகாநதப்பெயருடையான்
புகழ்ந்தாங் கெய்த. (ருஉஅ)

ஆகுதி கொடுக்கும் அமையம் ஜகந்நாதராஜாசிரம் கல்லின் மோதுதல்.

தெய்விகத்தா லவன்சிரமு மண்டபத்தி லேமோதச் செந்நீர் வானிற் பெய்விசும்பே யெனப்பொழிய வயிரவர்தம் பிரசாதம் பேணி யஞ் சேன், மெய்வடுத்திர்ந் தினியுய்வை யெனக்கூறி விடுத்தெவர்க்கும் விழைந்து தேவி, மைதவிரு நிவேதனமே தரத்தொழுதிட் டவரவர்தம் மனையே புக்கார். (௫உ௯)

வெண்பாவினாற் சிரநோய் விலக்கல்.

அற்றைநா ளிரவினிலே சகநாதன் கனவிடையெம் மடிக ளார்வந் திற்றைநா ளுன்சிரத்தே காட்டியதெ லாநன்மைக் கென்று கூறப் பெற்றகுறள் வெண்பாவை யவன்விழித்து வரைந்தருளின் பெற்றி நோக்கி, மற்றைநாட் சித்தர்பால் வந்திவையெ லாம்புகன்று வாழ் விதாகும். (௫௩0)

எனக்கூறித் தன்சிரத்தே நெருநல்கண்ட துயரெனைத்து மின்றேயாக வனைத்துயிருமாண்டபரம்பரைசிவைபைரவிபுவனையருளென்றப்பாற் பிணைத்துயரொன் றின்றியே சித்தர்விடை பெற்றபின்னர்ப் பெயர வப்போ, துனத்தகுசங் கரக்குமா ருக்குரிசின் மனைநோயா னுடற் றப்பட்டாள். (௫௩௧)

சங்காரக்குமாரப்பிள்ளை பத்தினியார்க்குச் சித்தர் தண்ணருள் புரிதல்.

அக்குரிசின் மனைநோயாற் பிணிப்புற்ற துயரகற்றி யவடன் வெய்ய மிக்ககொடும் பிறவிநோ யையுந்தெறுக்கு மம்மையருள் விருப்பி னீய விக்கலியிற் படிக்கறியா வவளுமா யிரக்கணக்கா மிசைப்பா வின்றுங் கைக்குநெல்லிக்கனிபோன்முக்காலநிகழ்வினைக்கூறல்காணலாமால்.

கயத்தாற்றில் ஓர் கன்னிகைக்கு ஏவல்நோய் அகற்றல்.

இதுநிற்க நெல்லைதனக் கணுக்கமாங் கயத்தாற்றி னீண்ட நாளா விதுவனைய முகத்தொருபெண் வேண்டலர்தங் கொடுமையினுன் மே னி போர்த்த, சதுர்கொளா டையைச்செந்திப் பற்றல்சிகை தரித்தல் பல தன்மை கண்டே, கதுமெனவி ராயப்ப வுபதேசி யவட்கொண்டு கழல்சேர்ந் தானல். (௫௩௩)

அனையானை யவன்கொணர்வான் கருதியபோ தேசிறிதாங் ககலமுற் றுங், தனையில்சிர்ச் சித்தர்பிரான் றமதருட்பார் வையினீற்றுற் றுன் சென் றேக, வினையதொரு வகையந்தக் கயத்தாற்றின் முத்தையவே வின்றமாது, தனைவருத்து மேவனுமுன் சித்தரருட் பார்வையினுற் றணிந்த தன்றே. (௫௩௪)

சித்தர் திருமணஞ்செய்யப் பற்பலரும் எதிர்பார்த்தல்.

இதுவன்றிச் சித்தர்வது வைக்கிசைந்தா ரென்றமொழி யெங்கு
மோங்க, வதுபொழுதே தம்மாபுக் கியைந்தபல நகரினுள்ளோ ரழகா
ரும்பொற், பதுமையெனத் தத்தமகா ரிணைக்குறித்தார் நிச்சயம்பற்
பலவுஞ் செய்தா, ரெதுமுடிக்கப் புவனைதிரு வருளேயோ வதுபோ
லியா மிசைவ தன்றி. (௫௩௫)

பொன்னிரத கசதுரக மாளிகையா தியவுமொரு பொருளென் றெண்
ணே, மின்னுமிடை யன்னநடை மாதர்முக முறுவனப்பில் விருப்
பம் வையோ, மன்னைபுவ னும்பிகைசுந் தரிகௌரி யையையுல கனை
த்து மீன்ற, கன்னிமல ரடிக்கன்பு பிரியாது புரிபவளாக் காண்மி
னென்றார். (௫௩௬)

சின்னப்பக் கவுண்டர் தந்நகரத்துக்குச் சித்தரை வரவேண்டுதல்.

என்றபொழு தேவெள்ளக் கிணற்றுச்சின் னப்பவே ளென்போ
னன்பா, லின்றடியே னகரமட்டும் வந்தருள வேண்டுமென விறைஞ்ச
முன்னர்ச், சென்றுவரு கையைந்தெரிவித் திடவருகி லுள்ளசிகா
மணியைச் செல்லென், றென்றுசெய்தா ரோருரையா லனைத்துல
குந் தன்வயமா வுவக்குஞ் சித்தர். (௫௩௭)

ஆண்டருகி னின்றிடுநஞ் சாமிநா தக்குரிசி லன்பன் றன்பா
லீண்டுளகன் னிகைமார்க்கு ளாசாரந் தெய்வபத்தி யியற்கை யாகு,
மாண்டகுநற் குணங்கல்வி யுற்றவளாப் பார்த்துமுடித் திடுவா
யென்னக், காண்டகமே லோங்குமெழிற் கோவைநகர் தனையடைந்
தார் கனிவின் மிக்கார். (௫௩௮)

சித்தர் கோவையடைதலும், நாட்டுக்கோட்டை வேங்கடாசலஞ்
செட்டியார் வழிபடலும்.

சித்தரெழுந் தருளுவதைச் சின்னப்ப வேளுணர்ந்து சிறந்தோர்
மாடம், வைத்துநில விடும்பெரிய மாளிகையொன் றங்கமைத்துமற்று
மாஞ்சி, றுய்த்துமுடித் தெதிர்கொண்டு முபசரித்து மன்னவருக்
குண்மை யான, வத்தலத்தி னுறைநாட்டுக் கோட்டைவேங் கடாசல
மென் றறையும் பூமான். (௫௩௯)

தன்னிடத்துஞ் சித்தரினற் புதம்பலவு முரைத்தவன்முன் ருன்பின்னுக, மன்னுசித்தர் தமைத்தெரிசித் திடவரவுந் தற்செயலா வரைந்தபாவொன், றன்னதனிற் கடிதம்வந் ததுங்கவலை தந்ததென வமைதல் கண்டான், பின்வரும்பே ரனைவர்களும் பேசுவேங் கடாசலமாம் பிரபு மன்னே. (ருசO)

செட்டியார் சித்தர்நிலை தேர்ந்தன்பு செய்தல்.

இனையதொரு பாடலைக்கண் டிடலுமது தனக்கமைந்தே யிருத்தலாலே, நினைவிலொன்றுந் தோற்றுதிங் கிவரிடத்தே திருவருளு நிலைத்த தென்று, மனதுகந்து தன்குறையுங் கூறிமுன்னர்ச் சித்தராற் றியம கத்துக், கனைவருக்குஞ் செலுந்தொகையோ ராயிரமு மனுப்புவித்தா னடைவினம்மா. (ருசக)

இன்னபடி யிங்கிருப்ப முன்னுடித் திருநெல்வே லிக்கெய் துங்கான் முன்னுமக டனைக்கொள்வே மெனுஞ்சித்தர் மொழிப்படிநம் முனியப்பன்ருன், னன்னிருப மதுவெள்ளக் கிணற்றினுக்கே விடுப்பவவர் நயந்தே நங்கள், சின்னப்ப வேள்கருது வனமுடிக்குஞ் சித்தரிடந் தெரிவித் தாரால். (ருசஉ)

மணத்திற்காகப் பற்பலவிடங்களிலும் நிச்சயஞ்செய்தோர் உத்தரவை யெதிர்பார்த்தல்.

இப்பரிசே நிச்சயங்கள் செய்தபல விடத்திருந்து மெய்துஞ் செய்தியெப்பொழுது மோர்நிலையிற் சித்தரிடத் தன்புவைத்தோ னெழிற்கோ வைக்கண், முப்பொழுதுஞ் சிவனடிக்கே முன்னுமரு ளுசலவேண் மொழிய மற்ருேர்க், கொப்பினதா யொருவிடையும் விடுக்காம லூழ்வலியை யொத்தே நின்ருர். (ருசங)

பொன்னுக்கும் விருப்புடையோ ராயுன்மட்டும் பற்பலவாப் புகைத்திட் டாலுந், தன்னுக்கஞ் சிறிதடையார் சற்றுமதி லிச்சையற்ருேர் சலதா ரைக்குண், மன்னுக்கும் பொற்குவைய லாமெனமுன் னேருரைத்த வாசகம்போன், மின்னர்க்கே யிச்சைவையா தின்னேர்க்கே பலர்விரும்பல் விந்தையேயோ. (ருசச)

சாமிநாதமுதலியார் சித்தசபைக்கறிவித்தல்.

எல்லையிலாப் புகழாளன் சாமிநா தக்குரிசி லென்போன் றூனு
நெல்லைநகர் தனினின்று நீதிகுணங் கனமனைத்து நெறியிற் கண்டே
சொல்லரிய தவப்பேறே போர்வடிவாய்த் தென்காசிப் பதியிற் றோ
ன்றுங், துன்னியகண் மணியேபோற் பெண்மணியைக் கண்டதுஞ்
சித் தருக்குச் சொல்லி. (ருசரு)

ஆயவா றனைத்துமிந்த மதிக்குளே யாற்றிடுவ தன்றிச் சின்னாட்
போயதேற் பற்பலர்வேண் டுதற்கிரங்கிச் சித்தரெது புரிவாரோமே
லோயாத முயற்சியாற் செயினுமினி யுற்றதொரு வார மன்றோ
நேயமுளார்க் குரைப்பதெங்ங னெனச்சித்த சபைதனக்கே நிகழ்
த்து வாரால். (ருசகூ)

சித்தசபையார் திருமணப்பத்திரிகை வெளியிடுதல்.

மன்னுமா ஞானதலச் சித்தசபை யாரறிய வல்ல திங்ஙன்
கன்னிநாட் டினிற்றென்கா சிப்பதியிற் கங்கைகுலங் கதிக்க வந்த
தன்னிகரில் பழனியா பிள்ளைதரு சிதாலட் சுமிப்பே ராநம்
மன்னைதனைச் சித்தமூர்த் திகள்வதுவை செய்யுமென வறிவித் திட்
[டார். (ருசஎ)

பிலவவாண் டொருகன்னி மதிமுப்பா னொருதேதி பீடு சார்ந்து
நிலவியசித் திரைநன்னா டனிற்பானு வாரமா நின்ற சீர்த்தி
குலவியவிச் சுபதினத்திற் சித்தமூர்த் திகடிருக்கல் யாண மென்ன
நிலமுழுதும் பரவுதமிழ்ப் பத்திரிகை களிற்பதித்தார் நீடு கண்டார்.

வெள்ளக்கி னைற்றினுக்குச் சித்தசபை யினர்செய்தி விடுப்பச் சித்த
ருள்ளத்தின் மகிழ்ச்சியொரு புரமெய்த முன்னொருவர்க் குரைத்த
வுண்மை, தள்ளுதற்கு மனமின்றிச் சுகதுக்க மிரண்டுமொரு தரா
சாக் கொண்டு, விள்ளுதற்கோன் றறியாராய் நடுநிலைநின் றூர்மகி
மை விளம்பற் பாற்றோ. (ருசகூ)

சித்தரையன்பர்கள் சிந்தித்துப் போற்றலுங் காவை சேர்தலும்.

காலங்க டொறுமோமக் கடனாற்றிப் புவனைமகங் களிக்கச் செய்திஞ்
ஞாலமெலாம் புகழ்தரப்பெற் றிடுஞான சித்தரிங்ங னுடல் கண்டு
சீலகுணங் கல்விசிவ யோகநிலை யிற்சிறந்த சிடர் பல்லோர்
சாலவெழுந் தஞ்சலிசெய் தேசித்த மூர்த்திகள்பாற் சாற்றி னரால்.()

எழுநிலத்து முற்றமுன்பி னியல்புரைக்கும் பெருந்தகையே யெங்க ளன்பின், முழுதுநிறை யும்மதியே முனிவர்பல ராலாசி முழுதும்பெ ற்ற, செழுந்தகையே யடியேங்க ளாலுலகெ லாந்தெரித்த திரும ணத்துக், கெழுந்தருள வேண்டுமென விறைவிதிரு வருளேயென் றேகி னூரால். (௫௫௧)

சித்தர்திருக் கல்யாணந் திருவானைக் காவிலெனத் திசைபோய் நிற்கு மித்திறத்த சுபச்செய்தி யனைவோருங் கேட்டுளவி னிறும்பூ தெய்தப் பத்திபழுத் திடுமனத்தா னெம்பாலன் னையிற்பரிவே படைத்து நிற் பா, னத்தவிரும் வாலிமழ பாடிவா ழாறுமுக நன்ப னம்மா. (௫௫௨)

பற்பலதேயத்திருந்த அடியார்கள் பிரபுக்கள் திருவானைக்காவடைதல்.

புவனும்பாள் பத்தசன சித்தசபை யென்பதற்கோர் பொன்னே போல்வான், றவஞான சித்தர்மணக் கோலதரி சனமதற்காச் சபை யைச்சார்ந்த, சிவனடியார் பெரும்புலவர் சிற்றரசர் முதலோர்க் காஞ் சிறப்ப னைத்து, நவதவமாச் செய்திடப்பற் பலரைவிடுத் தன்பினொடு நடத்தி னூரால். (௫௫௩)

சித்தமூர்த்திகளின் மணமகள் நெல்லையினின்றும் வருகை.

சாற்றுசித்த சபைநோக்கிப் பற்பலநாட் டவரும்வந்து சாரா முன்ன ராற்றுதவத் தானுதித்த சிதாலக் குமியெனுநம் மன்னைக் கன்பாத் தோற்றுமுற வின்முறையா மங்கலநன் மகளிர்பலர் சூழ்ந்தே மேலும் போற்றுதற்கா மங்கைதனக் கன்பினொடு மங்களநா னம்பு ரிந்தார். ()

பொற்புறுபன் மணிகளினு லமைத்திடுமா பரணமெலாம் பூட்டித் தெய்வ, கற்பகப்பூங் கொடியனைய வன்னைதனக் கலங்காரங் கவினச் சாத்தி, முற்றுமுணர் மறையவரா னெல்லைதனி லுள்ளார்முன் முகூர்த்த காலந், தற்பரையி னருளதனு னிச்சயித்துத் தாம்பூலந் தனையு மாற்ற. (௫௫௫)

மங்கலவாத் தியமுழங்கச் சிவிகைதனை யலங்கரித்து மாண்பின் மிக்க பங்கயநல் வதனமுளாள் வீற்றிருக்கத் திங்கண்முகப் பாவை மார்க ளெங்கனுநின் றேத்தெடுப்ப வன்பர்குழா மெம்மருங்கு மிறும்பூ தெய்தப், பொங்குதிரு நெல்வேலி நகரைவலம் வரும்பவனி புகலற் பாற்றே. (௫௫௬)

என்னேபுண் ணியமிருந்த தெத்தனையோ பேர்கடத்த மெழின்ம காரை, முன்னேநிச் சயமுடித்துந் திருமணத்துக் காவவெலா மொய் ம்பிற் செய்து, மன்னோர்க்கு ளொருவரெனு மருகிருக்கும் பாக்கி யத்தை யடையா திந்த, மின்னேறு மிடையார்க்குக் கொடுத்து வைத்த தெனப்பலரும் விளம்பி னரால். (௫௫எ)

தனையறிந்த பருவமுடன் றக்கமதிப் புளபொருளுஞ் சனத்தின் கட்டு மனைவளமு நிலவளமு மாதரெழின் வளமுமிக வாய்ந்த தோரா வினையபல கன்னியர்க ளெதிர்நோக்கக் கண்பாரா திருந்த சித்தர் நினைவறிவா ரெவரேயோ விவட்கிசைந்தா ரென்றுபல நிகழ்த்தி னரால். (௫௫அ)

மாதர்கட்கு ளிவள்செய்த மாதவம்போ லொருவருக்கும்வாயா தென் பார், சாதனஞ்செய் ஞானசித்த சாமிதவத் துக்கியைந்த தைய லென் பார், எதிலார்க் கருள்புரியுங் காருணிய மிவண்முகத்து மிசைந்த தென்னத், தாதவிழ்பூந்தொடையணிந்த தருணிகளுந் தனித்தனியே சாற்றப் பின்னர். (௫௫௯)

நகரைவல மாகவந்து சிவிகைதனி னின்றிறங்கு நங்கை தன்னை வெகுவிதமாய் பற்பலபே ருபசரிக்க வவரவர்க்கும் விரைசேர் சாந்து, நிகரில்லாப் பன்னீரோ டடைக்காயு மிலாங்கனியு நெறியி னீந்து, பகருநால் வகையுண்டி யாறுசுவைக் கறியபூ பங்க ளோடு.()

வந்தவர்க ளனைவருக்கும் விருந்துசெய்த பின்சித்தர் மணநேர் கான முந்தவரு மிச்சையினுர் காவைநகர் நோக்கிவந்த முதிஞர் சில்லோர் சுந்தரிநஞ் சிதாலட் சுமித்தாயி னேடிவருஞ் சுற்றத் தாரோ டெந்தையன்புக் கேற்றதோர் சாமிநா தக்குரிசி லென்பார் வந்தார்.()

சிற்பரா பரபரம கல்யாணி மணவாள தேவ தேவ
வற்புதா கரவமல சின்மயசாம் பவவகில பூதநாத
வப்பரா வனிசடில வனகவெனச் சேயூரி லமர்வோ னெங்கள்
சுப்பரா யக்குரிசி னெல்லையினின் றடைந்தார்க்குத்தொலைவி லாதே.

திருவரங்கத்தில் வசித்த செய்யூர் ஜமீந்தார் மாளிகை யமைத்து வரவுபசரித்தல்.

மாளிகையுந் திருவரங்கந் தனிலமைத்து வந்தவர்தம் மரபுக் கேற்பப்
பாளிதமு திருசுவைய வகைக்கறி களுடனருத்திப் பயின்ற பின்னர்
வேளையுநல் லோரையுங்கண் டனந்தவித வாத்தியங்கண் மிளிர வெந்த
நாளுமினி துறுஞ்சித்த மணமகனை யழைத்துவந்தார் நண்பர் சூழ.

மணமண்டப மலங்கரித்தல்.

ஏதமில்சீர் மறைப்பொருளி லிணையிலா ரன்பர்பல ரினிதி னெய்தி
யாதிமுதற் கலியாணச் சடங்குநிறை வேற்றுவதற் கமைந்த நாளிற்
றீதிலா வோரைதனிற் றிருமுளைப்பா லிகையமைத்துத் தெருக்க
ளெங்கும், போதுகளா லிட்டபெரும் பந்தரிற்றோ ரணங்கொடிகள்
புனைந்தார் மன்னோ. (ருசுச)

சித்தசபைக்காட்சி.

சபைமுழுது மலங்கரித்துப் பூரணகும் பங்கண்மணி தயங்கு தாமஞ்
சுபமனைத்துந் தருந்தீப மாலையொடு மகிற்புகையாந் தூப மோங்கத்
தபதிகளாலியற்றுமணிப்பந்தர்நடு வேதிகையுஞ்சமைத்தே முன்னாட்
சபதமெலாந் தீரும்வனஞ் சித்தர்நடத் தியவனைத்துஞ் சாற்று
[வோமால். (ருசுரு)

மலர்தருநல் விரையடுத்த காவிரியி னீராடி மணிப்பட்[?]டாடை
சிலர்கொய்து தரவுடுத்து விபூதியுத்து ளனமணிந்து தியானஞ்செய்து
பலபலவாத் தியமுழங்குஞ் சித்தசபை நிறைந்தவர்கள் பரிவிற்
போற்றக், கலையுதவு குறுமுனிபோல் மனத்தவிசுற் றூர்பெருமை
கழறற் பாற்றோ. (ருசுசு)

எள்ளளவுங் களங்கமிலாப் பத்தியொடு சித்தர்மண மியற்றல் காண
வெள்ளக்கி னற்றினமர் சின்னப்ப வேளென்பான் மேவு மன்பா
லுள்ளத்தின் மகிழ்வெய்து வேங்கடா சலனெனுமு தாரன் றூனுந்
தெள்ளுநீள் வாவிமலி ஞானதலந் தனிற்சித்த சபைக்கண் வந்தார்.()

கலியாணமகோற்சவங் காணவந்தவர்களை யன்பர்கள் கனப்படுத்துதல்.

ஆவலுடன் சித்தசபை யடியர்களாய்ப் பற்பலதே யத்து முற்ற
மேவுகன தனமுடையோர் மெய்ம்மையுணர் யோகிகளும் விருப்பத்
தக்க, நாவலர்பற் பலருமரு மறையோர்க ளுங்காவை நண்ணிச் சித்
தர், தாவறுநற் சபைநோக்கி யெண்ணிலர்வந் தடைந்தனரத் தகி
யின் மாதோ. (ருசுஅ)

சித்தமூர்த்திகள் திருக்கல்யாணம்.

வந்தடைந்தோர் தமக்குபசா ரஞ்செய்பு நடேசனெனு மறைசொன் னுவான், கந்தனடி தொழுதேத்துஞ் சாமிநா தக்குரிசில் கடலென் றோதுஞ், செந்தமிழ்தே ராறுமுக நயினருஞ் சேஷய்யச் செம்மல் சீர்த்தி, முந்துறுபே ரிராமண்ணு சகநாதக் குரிசின்முதன் முன்னே நின்று. (ருசுகூ)

பரிவொடுகின் றவரவர்கட் கியைந்தவண முபசரிக்கப் பண்ப தாக மருவுகா ரியதரிசி யெனும்வேணு கோபாலு மகிப னென்போன் றிருவிளங்கு மணங்காண வந்தாரை யடிக்கடியே சென்று நல்ல வரவுவிசா ரித்துநின்றங் கவரவர்தந் தகுதிக்கா மகிழ்வு செய்தான்.()

வேதியர்மா முறைமுழக்க வாத்தியங்கள் பலவொலிப்ப வேள்விச் செந்தீ, நீதிமுறைப் படியேயா ரியர்வளர்க்க வன்பர்பலர் நெருங்கி நிற்பச், சோதிநுதற் பைந்தொடியார் மங்கலவாழ்த் துரைத்துமலர் சொரிந்து நிற்பப், பூதியணி ஞானசித்த மூர்த்திகளில் லறந்தனையும் புகழ்ந்து போற்ற. (ருஎக)

மங்கலஞ்செ யோரைவரச் சித்தர்கையான் மணமடந்தை மலர்க்கை தன்னிற், சங்கமொரு புறமுழங்கக் காப்புநாண் சாத்தியக்க தையுஞ் சாத்திப், புங்கமுறு மாகமமந் திரம்பலவும் புகன்றங்கட் பூசித்தேத்தி யெங்கடவுட் பெரும்பேற்றால் வருபவருக் காசிசெய்தா ரெல்லாம் வல்லார். (ருஎ௨)

ஒருமணத்தை மருவாயோ கியராயுங் குருபெற்றோ ருரைதப் பாமற் றிருமணத்தைக் கொண்டருளுஞ் சித்தர்கையிற் சிதாலட் சுமிகை யேற்றித், திருவனையா ருமக்குரிய ரெனப்பெரிய தந்தைசொலித் தெண்ணீர் வார்க்க, வருமிடற்றின் மங்கலநாண் புனைந்தனர்சித் தரும்புவனை மலர்த்தா ளேத்தி. (ருஎ௩)

வேறு.

தீயைவலம் வந்தேத்திக் குருதன் சொல்லாற் றிகழும்மி தனைமி தித்தே வடமீன் றன்னை, நேயமொடு தொழுதேத்தி மனையுட் புக்கு நிறைசுவைமுக் கனியொடுபா லன்ன மாதி, தூயனநற் பொருளுசார் ந்து பின்னர்ச் சாலத் தூரியமே முதலாய துவன்றி யார்ப்பப், பாய புகழ்ச் சித்தனர் வசிட்டரென்னப் பன்னியரோ டினிதிருந்தார் பார்க்கி னம்மா. (ருஎச)

வேறு.

தூற்றுக்குடி முன்சீப் கோர்ட் வக்கீல் ஆறுமுகம்பிள்ளை சித்தசபை யடைதல்.

திருமண நிகழ்ந்த பினர்ச்சில காலஞ் சித்தனு ராண்டெழுந் தருளப்
பெருமனைத்தன்ப *ரெருமைநாட் டினிய மங்களூர் முதற்பிற பதிநின்
றுருமணஞ் செயுமப் பெரியரைக்கான வுறுதல்போ னுவர்தவத் தந்
தை, தருமனைப் பொருளா ரறுமுகப் பிள்ளை நெல்லைமா நகரொரிஇச்
சார்ந்தார். (௫எ௫)

சொர்க்கபுரமடாதிபதி சதாசிவதேசிகர் வருதல்.

மந்திர நகர நியாயவா தியரா மாண்புளார் தமைமரு வுற்ற
வந்தர முடைய பிணிதவிர்ந் தின்ப மடைந்துற வருமருந் தருந்திப்
பந்தனை யகன்றங் கிருந்தநாட் சொர்க்க புரம்பயில் பண்டார வதிபர்
தந்துணையோடு மன்னவர்க் கண்டு தகவுரை யாடினா ரன்றே. (௫எ௬)

சித்தரைச் சோர்க்கபுரமெழுந்தருளத் தேசிகரழைத்தல்.

அன்னவ ராலும் பிறர்பல ராலு மழகுறு சித்தனுர் பெருமை
நன்னல முறவோர்ந் தன்பினிற் சித்த நாதரே நாமெலா முய்ய
மன்னுநம் மாதி னத்துற வேண்டும் வரந்தரு வீரென வேண்டச்
சொன்னல முடையார் பிறநலங் கருதா ரோமெனச் சூழ்ந்துரைத்
[தனரால். (௫எஎ)

திருநள்ளாறு முதலியதலங்கட்குச் சித்தர் பதிகம் பாடல்.

அப்புர மடைவார் பிரான்சி நன்னாட்டிற் றிருநள்ளா றாதிய தலங்கள்
செப்புறு முறைசென் றன்பினிற் றேவ தேவனைத் திருவடி வணங்கி
யொப்புரை யில்லாச் செந்தமிழ் பாடி யுறுதல்கண் டம்மட பதியார்
ப்பல வுபசா ரத்தெதிர் கொண்டு பரிவினி னழைத்தனர் பதிக்கே.()

சித்தர்சின்மயானந்தர்க்கு அருளுதலும், தேசிகர்சித்தர்மீதுபாமாலை பாடலும்.

எதிர்கொளு மவருக் கிரங்கி முன்பணியுஞ் சின்மயா னந்தருக் கின்ப
மதிகொள வருளி யாறணி சடையார் வாழ்தலந் தரிசித்து வந்தே
யதிசய சொர்க்க புரம்பதி யடைந்தா ரம்மடத் ததிபர்தம் மன்பு
முதிர்தரச் சித்த மூர்த்தியையினிய முதுதமிழ் மொழியினிற் றுதித்
[தார். (௫எகூ)

---

* இதனை இக்காலத்தார் மைசூர் எனவழங்குவர்.

வே று.

"*முக்குண முணர்த்து மூவழுக் குணர்த்து மூவிரா தாரமு முணர்த்து மொக்குமுப் பொறியு முணர்த்துமுப் பிணியு முணர்த்துமா சோதியு முணர்த்தும், பொய்ப்பிணி யாகுங் கைப்பதின் வெய்யிற் புழுவெனப் பதைத்திடு முயிர்கட், கப்பனே டன்னை யானெக்கா வுறையு மருட்சித்த மூர்த்திசே வையுமே."

என்னச்சிற் சிலபா வியிற்றினர் துதித்தார் யாகசம் பூர்ணத்துக் கியன்ற, தன்னவாம் பொருளு மளித்துளோ மென்று மன்பினர் தமக்கெலா மறைந்தே, யின்னவா றிவர்தா நடித்தது மன்றி யெத்தல மும்மதிப் புற்று, மன்னிடுந் துறைசைத் தேசிகரிடத்து மாதவர் புகழ்வழுத் தினரே. (ரு௮௦)

வே று.

திருவாவடுதுறைப் பண்டாரசந்நிதிகளைச் சித்தர் சந்தித்தல்.

திருநள் ளாறுந் தலத்திலெங்கள் சித்த மூர்த்தி யெழுந்தருளுஞ்
 செய்தி யறிந்தன் புடனழைத்தார் சிந்தை நன்று தெளிந்துள்ளார்
கருமா சகற்றுங் கயிலாய பரம்ப ரையினிற் கவினந்தி
 கருது மரபின் மெய்கண்டார் காமர் சந்தா னத்தழகார்
தருமா வரச வனமென்னும் பதியி லமருந் தனிக்குரவர்
 சாற்றும் பேரம் பலவாணர் தமிழ்ச்சை வத்துப் புரவலனுர்
பெருமா னன்பர் சொர்க்கபுரத் தவரோ டெழுந்து வழிக்கொண்டு
 பிடார் துறைசைப்பதியுற்றார்பெருமையெல்லாஞ்செயப் பெற்றார்.

வேறு.

துறைசைப் பதியி லமர்காலத் தூய குரவர்க் குரிமையினுற்
கறையார் கண்ட ரருள்பெற்றுக் கவினுஞ் சித்தர் சித்தாந்த
முறையான் வருநம் மவரின்வே றல்ல ரென்ன மொழிகாட்டி
யறையு மன்னர் பெருமைதனக் களவின் றென்று நாட்டினர். ()

---

‡ இது சித்தமூர்த்திகள் 'சிவத்தலயாத்திரை' என்னும் புத்தகத்துட் கண்டது.

சின்னப்பக்கவுண்டர் தந்நகர்க்கு எழுந்தருளச் சித்தரைப் பிரார்த்தித்தலும் பூண்டிவாண்டையாரைச் சந்தித்தலும்.

பன்னாளுந் தமக்கினிய சின்னப்பக் கவுண்டருரைப் பான்மை நாடிச் சொன்னாடுங் கோவைநகர்க் கெழுகாலை யளவினிதி சூழப் பெற்றார் மின்னாடும் பொழிற் பூண்டி வாண்டையார் விருப்பினெதி ரேற்க வேற்றுக், கொன்னாடு வேடத்தான் தமைத்தொடர வந்நகர்க்கே குறுகினரால். (ருஅங)

சோர்க்கடபுரத்தார் சூழ்ச்சி.

*கூடவே வருகின்ற வேடத்தாற் குறிக்கொண்டு குலவுஞ் சித்தர் வேடமிலராயினுமிங் கவர்க்கடியர் செயும்பணியும் விளங்கா நின்ற வோடெனவே பசும்பொன்னை யுதவுதலு மிருகண்ணு லுற்று நோக்கிக், கூடமார் கோலம்போற் பொருமையினற் குற்சிதங்கள் குயிற்றினரே. (ருஅச)

புறநாட்டுங் கீர்த்தியுடைப் புனிதமார் சித்த ருக்குப்
பிறநாட்டுந் தன்னாட்டும் பேணிவழி படுமடியர்
திறநாட்டுஞ் சின்னப்பக் கவுண்டர்முத லோர்செய்பு
மறநாட்டும் பணிகண்டாங் கழுக்காறு பொங்கினன். (ருஅரு)

பொங்கியெழு மனத்தொன்று புரிந்துதாஞ் சித்தனர்க்
கிங்கன்ப ரெனவுலகோ ரெனச் சித்தர் சிலகாலந்
தங்கவேண் டிடினவர்க்குத் தரும்பொருட்கி யான்சூழுந்
துங்கமார் தருசூழ்ச்சி செய்கவெனச் சொல்லுவான். (ருஅசு)

யாகத்துக் காம்பொருணி ரியல்வனவென் பெயரானே
யூகத்தி னளிப்பித்தா லுவரிருத்தல் கூடுமெனப்
பாகத்தி னமிர்தப்போற் பயின்றவர்கைப் பொருள் பெற்று
மோகத்தின் முழுகுற்றான் முரண்பாடு விரிக்கிற்பாம். (ருஅஎ)

பாங்குற்ற வெழுநூறு பரிசிற்றாந் தந்திடல்போற்
றீங்கற்ற சித்தர்க்குத் திருந்தவளித் தெஞ்சியன
தாங்கற்ற வஞ்சத்திற் றலைநின்றான் றன்கொண்டாங்
கோங்குற்ற தன்ன யத்தின் மற்றென்று முனைந்தினனல். (ருஅஅ)

---

* கூடம் வஞ்சகம்.

வேறு.

வேங்கடாசலஞ் செட்டியார் விரதமனுஷ்டித்தது.

கோவைநகர் தனிற்சின்னாட் குலவியவ னாட்டுக்கோட் டையினைக் கொண்டோன், றுவரிய பணமுடையான் வேங்கடா சலஞ்செட்டி தவமார் சித்தர், மேவரிய திறமோர்பா வானறிந்தங் கன்னவரை விழைந்தியானை, மாவதன னுபாசனையை விதியுளியே தரப்பெற்று மகிழ்வினனங்கே. (ருஅகூ)

மண்டலமே நீருளிருந் தாகுவா கனக்கடவுள் மனுவை யோதித் தொண்டர்திரு வுடையார்க ளங்கரிற் பலரறியச் சொல்லொ ணாத கண்டமது நீங்கிநல முறப்பெற்றான் றம்மிடத்துங் கைத்துக் கொண்டே, பண்டைமுறையேபகட்டும்வேடத்தானகன்றனன் றன் பதியின் பாலே. (ருகூ0)

வீறுகின்ற சாதியினாற் குலத்தினாற் கல்வியினான் மேப்பா டுற்றுத் தேறுகின்ற வறிவின லாச்சிரமத் தாற்பதத்தாற் செறிந்த சீர்த்தி யேறுகின்ற வேடத்தா லொழுக்கத்தா லெல்லாமு முடைய ரேனுங் கூறுகின்ற வுண்மையில ரெனினவரைச் சிறியரென்றே குறிக்கு மன் [னே. (ருகூக)

வேறு.

தேசிகர் புறங்கூறல்.

ஒழிந்தவர்வேட வஞ்சனையொழுக்க முவர்தலச் செல்வர்க ளானு மொழிந்தசீர்ப் பிறநாட் டன்பர்க ளானு முழுவதுந் தெரிந்தவா முனிந்தே, யிழிந்தவ ருறவைச் சித்தருந் துறந்தா ரென்றது மட பதி கண்டாங், கழிந்திடு மனத்தாற் பலபுறங் கூறி யகங்கரித் திருந் [தன ரன்றே. (ருகூஉ.)

பதினைந்தாவது யாகம் காவிரிச்சிந்தாமணித்துறை.

பூரணைக் குரிய வேள்வியை யோம்பிப் புகழ்மய மாகிய சித்தர்
வாரணம் பயிலுங் காவிரி யாற்று மருங்குள தலம்பல கடந்தே
யாரண வுருவா ரமர்திரு வானைக் காவினுக் கன்பர்க ளழைப்பத்
தோரண மருவு மாளிகை யடைந்து சூழ்ந்தன ராவன வன்றே. ()

திருவள ரன்பர் காவிரிச் சிந்தா. மணித்துறை திகழ்தர நடத்து
முருவளர் யாக சாலேவே திகையோ டோமகுன் டம்பிற வமைத்தே
மருவளர் மாலே தோரண முதல மருவிட வலங்கரித் திர்க்குங்
கருவள ரொழிக்கு முபகர ணங்கள் கண்டடி களுக்குணர் த்தினரால்.()

சிருறு சித்தர் தினக்கடன் கழித்துத் திரிபுவ னும்பிகை பீட
மேருறு சூல மினியபூங் கோயி லின்னிய மியம்பவேற் றிட்டுப்
பேருறு மினிய யாகசா லேயினிற் பிறங்குறு வேதிகைத் தலத்து
நாருற வினிதி னெழுந்தருள் வித்து நடத்தினர் நன்குறு மோமம். ()

விதிமுறை வழாது சடங்குகள் யாவும் விதவித மாகவே யாற்றித்
திதிதரு மூன்று காலமும் பூசை சிறப்புறச் செய்ததன் பின்ன
ரதிசுரத் தாற்பீ டித்தனர் சித்த ரதற்குறு காரண மன்று
மதிகிர கணத்தான் முன்னேய நியதி மட்டுக்கு மேற்பட வாய்ந்து. ()

தன்புன ரேய்தல் மிகவுப வாசஞ் சார்தலா தியவையச் சமய
மண்புக ழநேக வயித்தியர் சித்தர் மலர்க்கரம் பரிசித்து வருந்திப்
பண்புறு நாடி பிறழ்ந்தன மருந்து பற்றுதற் கிடமிலே பார்க்கிற்
புண்படு மிவரை மடத்தினிற் கொண்டு போய்ப்பயில் விப்பதே
[புரிமின். (ருகூஎ)

என்றன ரதுகேட் டிரங்கினர் யாரு மின்னலங் கடலினுள் ளிழிந்தா
ரன்றவர் பட்ட பாட்டினே யாவ ரளப்பவ ரையகோ வாங்கு, நின்ற
னர் சில்லோர் சித்தரை நெருங்கி நிகழ்த்துவ தென்னென்று நெடிது
வன்றுய ருழப்ப வதுகண்டு சித்தர் மலர்க்கையாற் குறிப்புரை
[வகுத்தார். (ருகூஅ)

அக்குறி யுரைமுன் பழக்கத்தா லறிந்தா ருருண்மொழி மறுமலப்
பொழுதே, மிக்குறு புவனம் பிகைதிரு வருளே வேண்டியே சென்
றுகா விரிநீர், தொக்கநூ றிரட்டிக் குடங்களிற் கொணர்ந்து தொழு
தகு சித்தர்மேற் சொரிந்து, பக்கநின் றனர்மேற் சித்தரு மெழுந்து
பரைபுவ னும்பிகை பாதம். ( ருகூகூ

தம்முளத் தெண்ணிச் சென்றுநான் சாகுஞ்சாமபூ சையுந்தவ முமன்
விம்முறு மன்பாற் பூரண குதியின் விளங்குறச் செய்ததன் மேலே
செம்மலாம் வடுக நாதர்பூ சனேயுஞ் செய்தனர் கண்டவர் திகைத்தா
ரம்மவற் புதமோ சித்தரா னேர்க்கி தரியதொன் றுலகினில் யாதே.()

வேறு.

சித்தரை வஞ்சித்துச் சென்றவர்.

ஆயிரமா யிரமடிய ரடிதொழுவாங் கவரவர்கள்
நேய்மது போலருளி நிலவியகற் பகநிகர்த்துத்
தாயனைய ஞானசித்தர் தரமோராத் தவறிழைத்துத்
தீயவினைக் காளானர் சிலர்கள்விளக் கும்மாறே. (கூ0க)

செங்கோட்டி னவிழ்தமதைத் திருடியகன் றவனொருவன்
றங்குநகர் தனிலப்பேர் தாங்கிநின்ற வொருவைசிய
னெங்கள்சித்த சாமியின்பே ரிட்டுவஞ்சித் தானிந்தத்
துங்கமறு வார்நிற்க சொக்கபுரத் தாரென்பார். (கூ0உ)

வேறு.

அருளுறு சித்தர் நிதியைவஞ் சித்தங் ககன்றது மன்றியன் னவரைப்
பருவர லாகத் தூடித்து வரைந்து பற்பல பத்திரா திபர்பால்
மருவியே யிதனைப் பத்திரத் தெழுதி வரவிடு கெனப்பல்கால் வருந்தி
யுரைசெய்தா ரவர்கள் சித்தர்தம் மகிமை யுள்ளவா றுணர்ந்தவ
[ரதனால். (கூ0௩)

மறுத்துநீர் போம்போ மெனச்சொக்க புரத்தார் மதிமிக மாழ்கிவன் றுயர, மிறுத்தனுஞ் சித்தர்க்கெவ்விதத் தேனு மிழுக்குறச் செய்வமென் றெண்ணிச், செறுத்துமுன் றம்மேற் பற்பல ரெழுதுந் திவசை மொழியெலாந் திரட்டி, மறுத்தரச் சித்த ரடியவர் தலைமேல் வைத்துப்போய் வழக்கிடத் துணிந்து. (கூ0ச)

கேடிலா வவர்தம் மேலவ தூறுக் கேசுவைக் கில்களைக் கொண்டு நீடிய தஞ்சைக் கோர்ட்டினிற் கொடுக்க நியாயமே யுலகெலா நிலவக் கூடிய நெடுங்கா டிப்பெயர் பூண்ட கோர்ட்டதி காரியுட் கொண்டு தூடிய நிசமா வெனவிசாரிக்கத் தொடங்கினனவ்விடஞ்சூழ்ந்தோர்.()

சித்தர்தம் பெருமை யவரடி யவர்தஞ் செந்நெறிச் செயல்களுங் கடல்சூ, ழித்தரை யெல்லாந் தெரியுமென் றுரைப்ப யாவையுங் கேட்டுளத் திருத்தி, மெய்த்தகு சாட்சி விசாரணை செய்து மெய்யன்று பொய்யென விடுவித், தித்தகு பொய்வி யாச்சியங் கொடுவந் திட்டதாற் பிரதிவா திகட்கு. (கூ0கூ)

செலவுறுந் தொகையைக் கொடுமெனல் போலத் தீர்ப்பது செய்த
னன் றெரிந்து, புலனெலா னைந்து மனமெலாந் துயரிற் புகுசொக்க
புரத்தினர் போனர், அலகிலாச் சித்தர் பெருமையப் போது மவனி
மேற் பரவின வடாத, துலகின்மேற் செய்தா ரொருபொழு தேனு
முருப்படா தொடுங்குவ ரன்றே. (சு0எ)

வே று.

யாகஸம்பூர்ணர்த்தம் சித்தரேழந்தநளுதல்.

காவைந்து நனிமல்கு காவையின வாசிவயின்
மூவைந்து மகஞ்சிந்தா மணித்துறையின் முடித்ததற்பின்
பூவைந்து கொண்டடர்வோன் புரமெரித்த புராரிமுதற்
றேவைந்துந் தொழும்புவனே திருவருளா னிதுபுரிவார். (சு0அ)

சிரபுரத்து வாழ்சுதே சச்சிறுவர் சென்னெறியின்
மருவிவள ரக்கல்வி மாத்திரமே யல்லாமல்
அரியமறைப் பொருளுணர்த்து மாரியர்தம் மாசாரத்
துரியனவெ லாமுலகுக் குதவுபெரு முபகாரி. (சு0க)

திருச்சி நாஷனல் ஹைஸ்கூல் ஹெட்மாஸ்டர் சித்தர் வநகையைப்
பாண்டித்துரைக்குத் தேரிவித்தல்.

அன்பறிவா தியகுணங்க ளத்தனையு மோர்வடிவாய்
முன்வந்த தெனவறிஞர் முகிழ்மனத்தா லேபுகழ
நன்குறுநா ஷனலைஸ்கூல் நாட்டிடநங் கவர்னர்பிரான்
றன்கரத்தா லெழுப்புவித்த தனிச்சேஷை யங்காரே. (சுக0)

சித்தரவா சியைநாடித் திரிபுவனே மகமுடிப்பா
ரெத்தகருத் தினெடேகு முட்கருத்தை மதுரையெனு
மத்தலத்து முன்னேபோன் றருந்தமிழை வளர்க்கிற்கும்
வித்தகச்சங் கத்தலைமை விளங்குபாண் டித்துரைக்கு. (சுகக)

சொலவேண்டு மென்றேமுற் றுனேவிஞெரு கடிதம் வரைந்
துலகோருக் கூருணிபோ லோங்கிரா கவமறையோர்
புலனுட விடுத்திடவப் போதவரு மதுகொண்டு
நலனுர்பாண் டித்துரையை நாடியுணர்த் தினரம்மா. (சுகஉ)

இன்னதிற வாஞான சித்தரரு ளிறையாடல்
துன்னியமா மதுரைவயிற் செல்லாது தோமிருந்த
நன்னியமத் துறைமேவு நெல்லைதனை நன்கடைந்தார்
கன்னிநா டதுசெய்த கவின்றவமே போல்கிற்பார். (சுகங)

வீராகவபுரம் வைக்கில் கிருஷ்ணசாமி ஐயர் சித்தரைச்சந்தித்தல்.

வீரரா கவபுரமே மேவுவோன் மயிலேறும்
வீரனே யல்லாது வேறெவரை யுந்நாடாச்
சீரனேர் மலிகிருட்ண சாமியாஞ் செம்மல்குரு
கூரனர் தமைக்கண்டு குறைவிலன்பு கொண்டழைத்து. (சுகச)

பூரணைதோ றும்புவனும் பிகையோம மாற்றுவதும்
நேரினிலாண் டாண்டுதொறு நிமலைமக முடிப்பதுவுஞ்
சீரினிலாஞ் சித்தர்சபைச் சிறப்புடனே நடத்துவதும்
பாரிலெவர் தாமறியாப் பான்மையர்தாம் பேசிடினே. (சுகரு)

அன்னதனு லேயவருக் கரியமகக் காமுதவி
தன்னையே புரிகிற்பத் தான்பெறிஇ யடியரொடு
மன்றுமேட் டுத்தெருவில் வாய்ந்தமனைக் கெழுந்தருளி
யன்னவர்தாம் வேண்டியாங் காவனசெய் திருந்தாரே. (சுகசு)

அப்பதிதன் னிற்றெண்டர் நயினர்கோ யிற்கருகே
யொப்புரவன் புணர்வுடைமை யுரியபல நண்பர்க்கு
ளற்புதசங் காக்குமா ரரியமடக் கொடிக்கன்பு
பிற்படலி லருள்புரிந்து பெரியசா மிக்கருளி. (சுகஎ)

பின்புசங்க ரக்குமா ருப்பிள்ளை நண்பனு
மின்பமுறு புதுக்குளம்வா ழிராமலிங் கம்பிள்ளை
யன்புமிகு மா றுமுகம் பிள்ளையென் லாமிருவர்
மன்புதுக் குளம்மென்னு மாநகர்க்குச் சித்தர்தமை. (சுகஅ)

தங்குவதற் கழைத்துவந்து சகலவுப சாரமுஞ்செய்
தங்கனுளார் வியப்பெய்த வரும்பொருளீந் தாரதற்பின்
பொங்குகார் காத்தகுல புண்ணியமோ ருருக்கொண்டோ
னெங்குமிசை பரப்புவோ னியல்பலகற் றுரைத்திடுவோன். (சுகக)

சாவடிப்பிள் ளையென்பான் முன்வந்து தரிசித்துப்
பூவடியைப் புகழ்ந்துமிகு பொருள்கொடுத்துப் புனிதமுற்று
ளுவடிய ரன்புக்கே யருளுருவ மானசித்தர்
தேவடிவார் நெல்லையின்கட் சிலபகல்வீற் றிருந்தனரே. (சுஉ0)

சித்தர் புதுக்குளத்துக் கெழுந்தருளல்.

சிலபகலே கழிந்ததற்பிற் றென்கூடற் றிருப்பதியி
லிலகியிரு வேறுலகத் தியற்கைதிரு வேறன்றிக்
குலவுதெள் ளியராதல் வேறென்னக் குறிக்கொளச்சென்
றுலவுகுறள் மாறுபட வோரிரண்டு மொருங்குடையான். (சுஉக)

சித்தர் பாண்டித்துரையைச் சந்தித்தல்.

அவஞானம் பாற்றியெமக் கருட்பேறு தருந்துறைசைச்
சிவஞான யோகிபத சேகரனென் பதுதனக்கே
பவஞான மோட்டுமொரு பரிசென்னுங் கருத்துடையான்
சிவஞான செல்வன்மகன் செம்மல்பாண் டித்துரையே. (சுஉஉ)

நேரிலடி களைக்காண நினைந்துநனி யுபசரித்துச்
சிரினியைந் ததுதம்மாற் செய்ததற்பின் வேண்டுவன
வார்விழைஞற் றிடுதுமென் றடிகள்கருத் தேயுணர்ந்து
தேரிரவிப் பெயருடைய சேதுபதி தனையன்மி. (சுஉ௩)

சித்தருளக் கருத்தனைத்துந் தெரிவித்துச் சேதுபதி
வைத்ததொகைக் குறிப்படிகள் மனமகிழத் தந்தருளிச்
சித்தமகிழ் தரநல்ல சிவனமர்மா ளிகைவயினஞ்
சித்தர்தமை யேயின்சொற் செப்பிநின் றுபசரித்தே. (சுஉச)

சேதுமன்னர் சித்தர்யாகத்துக்குக் கையோப்பமிடல்.

அன்னவர்மா ளிகைதன்னி லமரும்போ தொருஞான்று
துன்னுசிவ யோகநெறி துளக்கமற வருள்சுரந்திட்
டின்னபடி யதுதனைந்தே யெழிற்சாத்தூர் தனையடைந்து
தன்னமிலா தங்கரந் தனில்வாழ்கோ பால்சாமி. (சுஉரு)

எனுங்கனவா னும்பெருமாள் ராசவெனு மதிகாரத்
தனமுடையான் றன்பொருட்டுந் தாமதித்து விருதையின்கண்
முனமறிந்தோன் வைத்யலிங்க முத்தமிழ்தேர்ந் திடுபுலவன்
மனதுகனிந் தடைந்துவழி படற்கிரங்கி வதிந்தருளி. (சுஉசு)

சித்தர் சேரநாட்டுக் கெழுந்தருளல்.

அங்கர மகன்றுதிரு மந்த்ரநக ராம்பதியின்
முன்னவரோ் நல்லகண்ணு முற்றவத்தோன் றனக்கடர்ந்த
வின்னலெலாந் தீர்த்தருளி யெழுந்தனந்த புரமேகத்
தன்னடியர் புடைசூழத் தவமுனிவர் சென்றனரால். (சூஉஎ)

கடந்தருளிக் கடமலையா றுகள்பல்ல கனிவினொடு
நடந்துபல காவதங்க ணல்வழுதி நாடொருவி
மிடைந்துபல புழைக்கைவிர வுஞ்சேரர் திருநாடே
யடைந்தனராங் கவரடையு நெறிகண்ட நெல்லையின்கண். (சூஉஅ)

மெய்வசிக னுகவியன் கூடன்மே யாற்பரவுஞ்
சைவசிகா மணிதேவத் தானதிகா ரத்தலைவன்
பொய்வளரா நெஞ்சினன் பொருவிறிரு மலையப்பன்
றெய்வநிலை யுணர்சித்தர் திருவருளை லாஞ்செறித்து. (சூஉகூ)

கானமா வாரணங்கள் கரிணியொடு செறிந்துலவும்
வானமா மலைமருவும் வயிணவமா சமயத்துக்
கானபீ டத்தலைவ ராஞ்சிய ருக்குணர்த்தித்
தானதிக நன்புரிமை தனைக்காட்டி யேயிருந்தான். (சூஙo)

கானவரம் புகள்பல்ல கதித்தோங்கு நன்னடாம்
வானவரம் பன்புரக்கும் வளநாட்டிற் றலைநகரா
ஞானவரம் புடையாரு நனிமேவு மனந்தபுர
தானவரம் பளந்தறியாத் தக்கபதி தாமடைந்தார். (சூஙக)

வலியமேலெழுத்துப் பிள்ளை மாளிகையிற் சித்தர் வசித்தல்.

செல்வநக ரடைந்ததற்பிற் செந்தமிழ்க்கார் கலியென்னு
நல்வரம்பின் முத்துக்கு மரசாமி நாவலனு
மெல்லையில்சீ ரான்வலிய மேலெழுத்தென் றியப்பிடுவான்
றொல்லையாற் றியபுண்ணி யந்திரண்ட சுகுணத்தான். (சூஙஉ)

நாசில் பரமேசுவரபிள்ளை சித்தரை வழிபடல்.

கலைக்கிடனாப் பலரோதுங் கடமைப்பா டேயுடையான்
இலக்குமண வேளென்ன யாவருஞ்சொன் மேதக்கான்
இலக்கிருந்து வாழ்போழ்தத் திருங்கடனூர் பரப்புணர்ந்து
தலக்கிலங்கும் பரமேசு வரப்பேர்த்தா சிலென்பான். (சூஙங)

தனைச்சந்தித் தப்பெரியான் றன்னுலத் தலத்தெங்கு
நினைக்கருஞ்சீர் வேதாத்ரி தாசநீ தித்தலைவன்
றனக்குநிக ரில்லமைச்சன் சருவாதி காரியின்பாற்
றனித்தனியே சொலிச்சித்தர் தாம்வந்த பரிசுரைத்தான். (ருகச)

வேறு.

மாலகன்ற மனமுடையான் சித்தபிரான் றன்பாலே வைத்த பத்தி சாலவிவ ஞேங்கவொரு மனவாக்குக் காயத்தாற் சாரச் செய்து ஞாலமெலாம் போற்றுமெங்கள் வேந்தனுக்கோர் பனுவலே நல்க வெ ன்னப், பாலினுமிக் கெவருளத்துங் கனிதருமா றெழுசெய்யுள் பகர் ந்தான் மாதோ. (ருகரு)

திருவாங்கூர் மகாராஜாவுக்குச் சித்தர் திருமுகமனுப்புதல்.

"மாமேவு கடலாடை யுடுத்தநில மாதுமணி மகுட மென்னப்
பாமேவு புலவர்புகழ் பொதிகைமலைக் கரசாகிப் பரிந்து போற்றும்
பூமேவு மணிமாதி சித்தியெலா மொருநொடிக்குட் புரிய வல்ல
தேமேவு மகத்தியமா முனிவனடிக் கமலமலர் சிரமேற்கொண்டு."

"சீர்பூத்த சித்தகணத் தொருவரியாம் பொருநைவளஞ் செழிக்குஞ் செய்ய, பார்பூத்த திருக்குருகூ ரெனுமாழ்வார் திருநகரிப் பதிக்க ணென்றும், பேர்பூத்த வுலகுபுகழ் தரச்சித்த ராலயத்தைப் பெரி துங் கட்ட, நேர்பூத்த விச்சைகொளும் ஞானசித்தன் மகிழ்ந்தெழுது திருபமீதால்."

"திருமேவும் புயசயிலா திருவனந்தைப் பதிராஜ்சிங்கமேநீ, யருண் மேவிப் புவிபுரக்கும் பெருமையினைக் கண்டுவகை யடைந்தே மாயன் குருமேவு மணிச்சுடிகை யரவணைமேற் றுயில்புரியுங் குறிப்பைக் கண்டோந், தெருண்மேவு மதிவலிமை மன்னவரி னினக்கிணையார் செப்புங் காலே."

"நாவலூ ரன்பனுக்கு நிதியீந்து வடகயிலை நாதன் பாங்கர், மேவின னுன் குலத்தொருவ னம்பிகைபா லன்புறுமெம் வேட்கைதீர்த்துப் பூவுலகும் பொன்னுலகும் புகழ்பதவி பெற்றின்பம் பொருந்தி வாழ் வோய், காவளஞ்சேர் மலைநாட்டு வேந்தர்பெரு மானெனவாழ் கரு ணைக் கோவே."

"முன்னுளி லூனுறக்க மின்றிமலை மீதுதவ முயலுங்காலை, யென்னுளு மெமையாளுங்குருநா தன் றிருவருளா லெம்மையீன்ற, பொன்னுளுங் கலைமகளும் போற்றுபுவ னாம்பிகைத்தாய் போந்திட் டன்பாச், சொன்னதிரு வருணெறியே சித்தயா கம்புரியத் தொடங்கி மேலே."

"சென்றசர்வ தாரிமுதற் பதினைந்து வருடம்வரை சிறந்த யாகந் தன்றுபுகழ்ச் சிவதருமப் பயனுணர்வா ரொவ்வொருவர் சூழ்ந்து வேண்டு, மென்றபொரு ளுதவிநிறை வேற்றினர்சம் பூரணமிவ் வருடந் தன்னி, னன்றுபெற மூன்றுபிரி வாகமுடித் திடவுளத்து ளூடினேமால்."

"அரியதிரு வருட்புவனை யாகமியற் றுவித்தலுனக் கரிதன் றெல்லாந், தெரிதருமப் பயனுணர்வா யுபசார முனக்கென்ன தெரிவிப் போம்யாம், புரிதருமிச் சித்திரைநற் பௌர்ணமியா கத்தைநன்கு பூர்த்தி செய்து, பரிவினொடு நிறைவேற்றிப் பெருந்திருவும் வாழ்நாளும் பலித்து வாழ்க."

வாழியவென் றருளியதோர் பதுவலினைக் கண்டுமுக மலர்ச்சி பூப்பக் காழிவந்தா னிவனென்னக் கருத்தினிற்கொண் டிலக்குமணக் கவிஞன் பாங்க, ரூழிவரை நிலைநிற்கு முரையெழுதித் தாமுமதற் கொத்தே யாங்கோர், நாழிகைத னக்குமுன மொழிபெயர்த்தங் கச்சிலிட்டா னலக்க வன்றே. (௬௩௬)

வேறு.

அந்நாட்டு மொழியானே யரசர்பிராற் கறிவிப்பான்
முன்னுய வாறுணர்த்தி முழுதுமறி யப்பெற்று
மின்னேரு மிடையார்சூழ் மிக்கவல கம்புகழுந்
தன்னேரில் சரவணப்பேர்ச் சாமிமூ லமதாக. (௬௩௭)

பத்திரிகை யொடியோகப் பிரசாதம் பரிவொடுதான்
மெய்ப்பரிவா னரசனிட மேவுவித்துச் சித்தருடை
யொப்பில்வர வினையுணர்த்த வுடனேநம் மரசர்பிரா
னிப்பொழுதே யழைமினென விவாங்கே யடைந்தனரால். (௬௩௮)

மகாராஜாவைச் சித்தர் சந்தித்தல்.

ஆங்கடைந்து மன்னர்பிரா னேடளவ ளாவியிவண்
பாங்கினைத் தனைப்போது பரிந்தடிகே ளிருப்பதென
ஈங்கிறையே யின்னேயா னிருமூர்த்தத் திற்செல்வேன்
திங்கில்வேள் வியுமொருமுத் தினமாணக்கா வெய்த. (ருகூக)

அஞ்சல்வைத்தே யானடைவே னரசேயென் கருத்திதுவென்
றெஞ்சலில்சீர்ச் சித்தபிரா னிருக்கையைவந் தடையுங்கால்
விஞ்சியநம் மமைச்சரொடு வினவியினி வருவேள்வி
செஞ்செவே புரிவிப்பா மெனச்செப்பி விடுத்தருள. (ருச0)

அம்மொழியைப் பரமேசு வரம்பிள்ளைக் கன்பாகச்
செம்மையினச் சரவணச்சா மியுஞ்செப்பச் சித்தர்தமை
மெய்ம்மையிற்பல் லுபசாரம் விரைந்துபுரிந் திம்மகந்தான்
விம்மிதமா மெட்டைய புரவேந்தன் றனைக்கொண்டே. (ருசக)

செய்வித்துக் கொள்கவெனச் செப்பிடுமுன்னே தெரிந்து
மெய்வைத்த பால்வண்ண மெனும்பெயரோன் றனைக்கூவித்
தெய்வத்தின் றிருவருளாற் செலவிடுத்தார் மாதவத்தின்
கைவைத்த சித்தர்பிரான் காறுைத துண்டுகொலோ. (ருசஉ)

வேறு.

சித்தர் எட்டயபுரம் வருதல்.

கலைநாடு மந்தணரி லளப்பிலார்க் கனதானங் கனிவி னுற்று
மலைநாடு தனையொரீஇ யிலங்கியதன் னெடுமாங்கு வந்தார் தம்மை
நிலைநாடு மெய்யன்பர் பரவுங்கா வைக்கேக நிறீஇப்பின் சித்தர்
குலைநாடு பொழிலெட்டை யாபுரஞ்சென் றிடத்தாமுங் குறிக்கொண்
[டுற்றார். (ருசஙு)

முன்னெருஞான் றெட்டயா புரத்திற்குச் சித்தர்வர முல்லை வேய்ந்த, மன்னவனு மனந்தபுரஞ் சென்றுவரு கையினீண்டு வருத னன்றென், றன்னவுரை தனைத்திவான் சண்முகவே ளாலறிவித் தன்றி மற்றுஞ், சின்னதுரை தன்னிடத்துந் திருமுகமொன் றனுப்புவதுந் தெரிவிப் பேமால். (ருசச)

சின்னத்துரைக்கு திருமுகமனுப்பல்.

"இன்றுபணங் கையிலிலை யென்றுசொலா தோநாளை யாஞ்செய் வேள்வி, நன்றுமுடித் திடவேண்டும் நல்லதற்கு விக்கிநமா னூறே யென்று துன்றுபெரி யோருரைத்த வாக்கியத்துக் கிலக்கணமாண் டாண்டு தோறும், இன்னபடி முடிகின்ற தென்செய்வோம் புவனியருள் வீதெ ன்றோதி." (௬௫)

அன்னவர்பா லனுப்பவவ ரும்முணர்ந்தங் கதுபோ லுஞ் செய்க வென் ன, முன்னசுர ரவுணர்முத லோர்வேள்வி தமைமுடிய வொட்டா வண்ணம், உன்னிநடத் தியவாறே யொருங்கிஞ்ஞான் றுயர்வேள்வி முடியாவண்ணம், நின்றுபலப் பலவிடையூ றுகள்செய்தார் கொடிய வெந் நிரயம் போல்வார். (௬௬)

அறிகொன்றே யறியாதா னெனினுமா யிருஞாலத் தரச னுக்கே யுறுதியுறை யிருந்தானே கூறல்கட னென்றுரைத்த வுரையிற்கேற்ப நெறிவழா வமைச்சனெனுஞ் சண்முகவே ளரசனுக்கு நெடுந்த வத் தோர்க், கிறையுமழ கல்லனசெய் திடல்பழுதாய் முடியுமென நினை த்தி யம்ப. (௬௭)

இறையுணர்த்துஞ் சித்துயிர்தா னுணருஞ்சித் தெனயாண்டு மிறைவ னூல்கள், நெறிமுறையி னுணர்த்துவன வுணர்ந்தரனை யல்லதொன்றை நினையாமெய்ம்மை, பொறைபீகை முதலகுணங் கோட்டிகொண்டே யோங்குகின்ற புனித னந்த, இறைதனக்கே சிறுதாதை யெனுஞ் சின்னத் துரையாகு மெழிற்சி மான்பால். (௬௮)

யாதுசெய லெனக்கேட்ட விறைதனக்கிவ் வடிகட்கிங் கெதுசெய் தா லும், போதநலம் விளைக்குமா லற்புதம்பற் பலவியற்றும் புதுமை தன்னை, நீதிநூல் வல்லபெருந் தகையாங்கிருட் டிணசாமி நிகம யோ ர்ந்த, வேதியரே முதலானோர் விளக்கினரென் றுல்யாமோ விளம்ப லாமே. (௬௯)

அன்னபொழு தங்கிருந்த விருதையமர் சிவஞான யோகியென்னத் தென்மொழியில் வியாசசூத் திரந்தன்னை மொழிபெயர்த்த செல்வ ராண்டுத், துன்னியிருந் தவர்தம்மைச் சித்தர்மகம் புரிதற்காஞ் சுரு தியீண்டு, நன்னரெடுத் துரைப்பேமற் றவர்சினங்கொள் ளாதபடி நடத்தி ரென்றார். (௭0)

எட்டயபுர மன்னரைச் சித்தர் சந்தித்தல்.

சின்னதுரை மொழிகேட்டுச் சிறிதருத்தந் தந்துபின் செய்வேமென்னுச், சொன்னபொழு திராக்கதர்நேர் சில்லோர்சூழ்ந் தன்னவன் முன் றீச்சொற்கூறி, நின்றமையைச் சித்தருணர்ந் தருளானேர் பாமொழிந்து நிறுத்துமுன்னே, அன்னகவி கொண்டுமுற்று முடியாத படிசெய்தா ரமைச்ச னுரும். (சுருக)

இதுநிற்க முன்சித்த சாமியின் டெய்தியே யிருக்கு ஞான்று, முதுமொழிபெற் றேங்குமுனி வோர்கள்சூழா மொழியுங்கோ ரக்கர்தர்ட்கே, பதியுமனத் தானடியார் பத்திசிறந் தான்ஞான சித்தர்பான்மெய்க், கதிநிலையை யுணர்தோங்குஞ் சோமசுந் தரநாமக் கலைவலோனும். (சுருஉ)

சித்தசுவா மிக்கன்ப னெனச்சிறந்தத் துரைத்தனத்திற் சிறப்புற்றேங்கு, முத்தமகு னத்தெட்டை யப்பனெனும் பெயரானு முடனேதோன்றி, அத்தவந்தக் கொடும்பாத கத்தர்மொழி செவிக்கொள்ளே லரச னுக்குப், புத்திரசந் தானமறை வேள்வியினுற் றரவேண்டிப் புகல்புக்கேமால். (சுருங)

வேறு.

சித்தர் காவைநோக்கிப் புறப்படுதல்.

எனவு ரைத்தவ னேகிட வின்றுதான் வேள்வி
தனையு ஞற்றிடுந் தினமினிச் சார்வதெப் படியால்
அனக னுனைக்காப் பதிதனக் கென்றல மந்து
கனலி லிட்டதோ ரிழுதெனக் கரைந்திட லானுர். (சுருச)

சித்தர்நம் பராபரை தனைத்திக ழான்மார்த் தமதா
வைத்திட் டங்கனு ராதனஞ் செயும்வழக் கத்தில்
ஒத்த பூரணை பிறவர வோமமாற் றியுமச்
சித்தி ரைக்கணே வருஞ்செழும் பூரணைத் தினத்தில். (சுருரு)

மகமு ஞற்றியும் வருவது காண்கிலா ரெவரோ
நகம ளித்தவட் கிச்சோப கிருதுநல் லாண்டின்
மிகம தித்திடுஞ் சித்திரா பூரணை மேவத்
தகநி லாவுசோதியும் வந்து சார்ந்திட மாதோ. (சுருசு)

வழிகடந் தெந்த வாறுதான் காவைமா நகர்சென்
றிறைவ கிர்ந்தநுண் ணிடைப்புவ னம்பிகைக் கியற்றும்
பழித புத்திடு மகம்புரி கிற்பதெப் படியாற்
பொழுது பட்டது போந்ததிங் கிரவென நைவார். (சுருஎ)

கன்றி ழுந்ததோர் காலிபோ னெஞ்சகங் கரையும்
இன்று தான்மக மியற்றிட லெற்றெனக் கிளத்து
மன்ற மாமக மாற்றிடுந் தோறுமே மரபா
னின்றெ னைத்துய ருறச்செய னீதியோ வென்னும். (சுருஅ)

என்று சித்தரு மிரங்கியே காவைவந் தெய்தி
அன்றி னூர்புர மட்டவ னருள்வலி தன்னாற்
கன்றி டாதுளங் காப்பதற் கேகடன் பூண்டு
நின்றி டப்பரை நினைப்பதென் பிறிதென நின்றார். (சுருகூ)

இன்ன வேலையிற் சித்தருங் காவைவந் திடுங்கால்
தன்னிடத் தன்பு சான்றமெய் யன்பரும் பிறருஞ்
சென்னை தஞ்சைமா மதுரையே செந்திலே முதலா
மன்ன தேத்தினின் றயனின்றும் காணிய வடைந்தார். (சுசுo)

மகத்தை நாடிய வருத்தமுற் றிவ்வுமை யடைந்தேஞ்
சுகத்தை யேதரு சுந்தரி புவனைதன் வேள்வி
முகத்தை யெப்படிக் காண்குவ மென்னுமுன் வந்தார்
அகத்தி னன்புகொண் டவ்வுமை யிருந்தசில் லோரே. (சுசுக)

வேறு.

அன்பர்கள் காவிரியில் வேள்விச்சாலை யமைத்தல்.

சேலமாற் றாரிலம ரிராசாத்தி னப்பெயர்த்த சீர்மை யோனும்
வேலவற்கே யன்புசெய மாறுமுக நயினாரும் விளம்பா னைக்காப்
பாலமரு நன்பினடே சச்சுகுண வேதியரும் பரிவின் மிக்க
சீலமிகு குமரப்ப வேளுமடைந் தார்சித்தர் வரவு காணார். (சுசுஉ)

பதினறாவது யாகம் காவிரிச் சிந்தாமணித்துறை.

இன்றுதான் வேள்விநா ளெங்கேனு மவராற்றி னுற்ற நாமுஞ் சென்றுசெயற் பாலவெலாஞ் செய்திடுவே மெனப்புந்தி தெருண்டு சால, நின்றுநாங் கடமைபூண் டனசெய்வேம் பொழுதுநீட் டித்தி டாதென், றன்றிரவைப் பகலாக்கி யன்புடனற் காவிரிசென் றணுகி னூரால், (சுசுங)

இன்னபொழு திற்சித்தர் சபையெய்தி யென்செய்வ தென்று நைய
அன்னைதிரு வருளேயோ வவரன்பின் பெருக்கேயோ வறியோ மீண்டுப்
பொன்னியிடைச் சிந்தாம ணித்துறையிற் காணாத புதுமை மேய
தென்றியா வருங்கழற மகச்சாலை யொன்றுங்கே யெழுந்த தன்றே.

அம்மகச்சா லையிற்கருப்பக் கிருகமத்த மண்டபமாங் கணிகள் வாய்
ந்த, விம்மிதமா மணிமண்ட பம்மகா மண்டபமே மிளிர வந்தச்
செம்மைபெறு மகச்சாலை பன்னிறப்பூ மாலைகளாற் செறியத் தெய்
வக், கம்மியனே புவனையருள் கொண்டுசமைத் தானென்னக் கவினு
[மாலோ. (சுசுரு)

இன்னமகச் சாலைவயி னெழுந்தபெரு வேதிகையோ டெதிரே சித்தர்
மன்னிருக்கை யாயதோர் பீடமதிற் புலியதளும் வயங்கா நிற்பத்
தென்முகமா வயிரவருக் கழகியசிங் காதனமுஞ் செறிய வெங்க
ளன்னைபுவ னம்பிகையெண் சத்தியொடு வீற்றிருக்க வமைத்தார்
[மாதோ. (சுசுசு)

மரகதத்தால் வகுத்தனபோற் பாசிலையாற் பந்தரிட்டு வரிசை யாகப்
பொருவில்கத லியுங்கமுகு மிகநாட்டி மகரதோ ரணம்பொருந்த
இருவியெழிற் படிகவிளக் குகள்பரிதி யெனமிளிர வெம்மருங்குங்
விரவுதுகில் பவம்போம்போம் வம்மினெனச் சொல்வார்போன் மேவிற்
[றன்றே. (சுசுஎ)

திருவரங்கத் தலத்திருந்து வரும்வழக்கம் போலவுந்தேர்ச் சிரைகாதி
வருசுருட்டி யசைந்தாடி யசமான கிரிகொடிமட் டற்ற தான
விருதுகளா லலங்கரித்து மருகிலொரு பொய்கையதும் விரைவிற்
செய்ய, குருமணியாம் ஞானசித்தர் வந்ததுணர்ந் தார்சுபமே கூற
[ஊற்றூர். (சுசுஅ)

சித்தர்முனந் தெரிவிக்க விப்படியுந் திருவருட்சம் மதமோ முன்ன
ரெத்தனையாம் பிறவிகளிற் றவஞ்செய்தே மென்றுள்ளத் தெண்ணிக்
கம்பன், இத்தலத்திற் சிறுமையைக்கன் டவர்பெருமை கண்டலது
தேறு ரென்ற, வத்தகுமா மொழிதானு நாடியே யிதுபுரிந்தா ரடிக
[ளாரும். (சுசுகூ)

ஸ்ரீபுவனாம்பிகை வேள்விச்சாலைக் கெழுந்தருளல்.

அம்மையகி லாண்டவல்லி யாலயத்தி னுலவட்டஞ் சிவிறி யென்னச் செம்மையினிற் கொடுசெறியப் பல்லியமார்த் திடத்தேவி புவனை யென்னு, மும்மைசில மும்புரக்கு முருகனைநல் கிடுங்கருணை முதல்வி பீடம், விம்மிதச்சு லப்படையோ டொருமானத் திடையேவீற் றிருக் கச் செய்து. (கூஎ0)

செய்யாத மொழியென்னு மருமறைநான் கையுமறையோர் செப்ப வோர்பான், மெய்யார ணத்தைவடித் தெழுந்ததமிழ் மறையொரு பால் விரித்தேயோதப், பொய்யாத மனமுடையா ரெம்மருங்கு மடை ந்துசெய போற்றி யென்றே, கையாரத் தொழுதேத்தக் காவையெ னுந் திருப்பதியைக் கடந்து தென்பால். (கூஎக)

நந்தாம ணிவிளக்கேய்ந் தெம்மருங்குஞ்சுடர்ஞாயி றென்னத் தோன் றுஞ், சிந்தாம ணித்துறைநே ரமைத்தமகச் சாலையிடச் செல்லும் போது, முந்தாதி மறைதேர்ந்து பலவேள்வி செய்துசித்தர் முன்னே மெய்யன், புந்தாவந் தனர்நங்க ளிராமபிர பந்து முன்னு முறுவர் [பல்லோர். (கூஎஉ)

கருவிலே திருவுடையாய் கவினரவ முத்துடையாய் கலைகள் யா வும், திருவருளா லுணர்வுடையாய் சித்தியருண் மிக்குடையாய் சிறியேற் குற்ற, வெருவலெலாம் நீக்குடையாய் விதேகமுத்தி பெற் றுடையாய் மேதினிக்க, ணருமகம்பல் செய்துடையா யம்மையருள் பெற்றுடையா யருளா யென்றும். (கூஎங)

வேறு.

இன்னப டிப்பெரி யோர்பல ருந்துதித் தேசிற்ப
அன்னை யெனைத்தொண் டேகொளு மம்பிகை தன்பீடந்
தன்னிக ரில்லா மாமக சாலை தன்னைவலந்
துன்னி யவண்மா னத்தொ டமர்ந்தது சொல்கிற்பாம். (கூஎச)

சங்க முழங்கப் பேரிகை யார்ப்பத் தவில்சின்ன
மெங்கு மொலிப்ப வம்மி னெனச்சொல் லியபோல
மங்கல மாருந் தீப மெடுத்தே மறையோரும்
புங்கவ ராற்றுங் கிரியை வழாது புகல்கிற்பாம். (கூஎரு)

வேறு.

புனைந்த நல்லிடத் தேவாத் துசாந்தியும் புகல
நினைந்த மிர்த்துசங் கிரகண நிலமிசை யோங்கு
முனைந்த வங்குரார்ப் பணமிரட் சபந்தன முன்னு
வனைந்தி டும்பெருங் கலசத்தா பனமுறை வகுக்க. (கூஎசு)

பொன்னகர்க் கன்வாழ் தகுபுல வோரென மதிப்பான்
மன்னும் வைதிக சிலர்க ளாமறை யோர்ம
கன்னியா சஞ்சி ருத்திர முதலன கருதி
யுன்னி தற்கிணை யோவென யாவரு முரைப்ப. (கூஎஎ)

தேவ துந்துமி யெனநிக ரியம்பல செறியப்
பூவி னுற்புனை தம்மையாம் புவனைபீ டத்துக்
காவ யிற்றிரு மஞ்சன மாட்டியொப் பனையு
மேவு மூவிலைப் படைதனக் கம்முறை விளங்க. (கூஎஅ)

தூப தீபங்க ளுளுற்றியுஞ் சொன்முதற் காலம்
நீப மேபுனை குகன்றனக் கன்னையாய் நினைக்கிற்
பாப மேதவிர்த் தாட்கொளும் பராபரி புவனை
யூப சாலையி னடப்பதுஞ் சிலச்சில வுரைப்பாம். (கூஎகூ)

வேறு.

நீக்கமிலாப் பசுவினெய்க் குடநவதா னியமாதி நிலவு றுஞ்செந்
தேக்குடங்குன் றன்னவிளங் குஞ்சமித்து தருப்பைபொரி செறிய
வேகாண, பார்க்குள்ளந் திடுக்கிடச்செய் வலம்புரிகா ளமிடக்கை
பனில மார்ப்ப, மாக்கனகத் தோரிதுபோ லெங்குளதென் றதிசயிப்ப
வயங்கு மாலோ. (கூஅ0)

தனக்கொருவ னப்பாலைக் கப்பாலா யிதுவென்னச் சாற்றும் வேதம்
அனைத்துமுறை யிடுவதனுக் கிணங்கநந்தி மேடையுமொன் றவிர நந்த
மனக்குறையை யகற்றுமந்தப் புவனையரன் றுய்மகவாய் மனையாய்
நிற்கி, னினிக்கடையே னென்புகல்கே னங்கிருந்து விளங்குவதுங்
கணிப்பதேயோ. (கூஅக)

வயிரமொடு சங்காழி யெஃகம்பூங் கழைவின்மலர்க் கணைக ளுளுஞ்
செயிரறுதன் கரத்துடைய தேவிதனை வழிபடுமத் தேவர்க் கெல்லாந்
தயவினளிப் பவளவள்கை தயங்கியஎழு விலையயிலாந் தனிப்ப டைக்கே
வியனிலத்தொப் பிலைபந்தப் படையுநடு நாயமா விளங்கச்செய்தார்.()

பொய்கைதனி னீராடிப் புனிதநீ றணிந்துபௌத் திரங்கை பூண்டு
மெய்யினில் வெண் பட்டுடுத்து த்தருப்பித்து வியன்புலித்தோ லாற்
செய்திட்ட, செய்யவா தனத்தமர்நஞ் சித்தர்விநா யகபூசை செய்து
வேள்வி, மைதவிர்குண்டடத்து மூன்றுவாரணத் தேவதைகள் மந்தி
ரத்தும். (சுஅஉ)

தேவிசடாக் கரங்கொண்டு நவமுத்திரையு மியற்றித் திகழ்குண்ட
த்தின், மேவுறுமா லரசாயி ரத்தெட்டுக் காலமொன்றில் விரவி யிட்
டே, யாவயினற் றருப்பையினற் பஞ்சகௌவி யங்களொடுத் தனற்
கண் பெய்து,நாவொரே ழிருசிரமுப் பதங்கையேழ் நாயகனை நயந்
தே யேத்தி. (சுஅங)

மந்திரமா மலரிட்டுத் திக்குபந்த னந்தாளத் திரையஞ் செய்து
நந்தலில்செந் திவளர்த்து நல்லாவி னெய்பசுந்தே னற்சு ருக்கா
அந்திற்பெய் தொருநவதானியம்பொரியுமோருருவுக்காங்கேபெய்து
விந்தைமலி யாகுதிகொ டுக்குமமை யத்தின்வே தியரா வோரும். ()

வேறு.

மறைந வின்றிட நிவேதன மாதிய மரபா
னிறைவி மேவுபி டத்தினுக் கியற்றி மெய்த் தூப
முறையிற் செய்திடச் சித்தர்முன் னகுதி முடிப்பக்
கறையில் யாமமோவ் வொன்றினுஞ் செயக்கடமையபோல், (சுஅடு)

வயிரவபூசை முடித்து சித்தர் அவபிருது நானமிடல்.

முழுக்கெடுத்திட வின்னிய முதலன வெடுத்தே
முழக்கெ டுப்பநான் காவதா மியாமத்து முறையான்
வழுக்க மாகும்பூர் ணகுதி வழங்கநம் மிறைவிக்
கிழுக்கின் மற்றைநாள் வயிரவ பூசனை யியைத்தே. (சுஅசு)

வன்னிமாலய மாலைமுற் சாமத்தும் வயக்கி
நன்னர் கும்பாபி டேகமொ டவபிர்து நானம்
துன்ன வேள்வி செவ் வேநிறை வேறிடத் தோமின்
றென்னை யாளுடை யிறைவியா லிதுநடந் ததுவே. . (சுஅஎ)

அவ்வக் காலத்தி லருமறை யோர்க்குணை வளித்துஞ்
செவ்வி தின்மகே சரவெழிற் பூசனை செய்தும்
எவ்வ மேதெறு மிரும்புல வர்க்கியை வனவே
பவ்வ நீருல கத்திடைப் பரிவினிற் புரிந்தார். (சுஅஅ)

## வேறு.

ஸ்ரீ புவனம்பிகை பவநி.

நவமலி மூவிலை வேற்படையோடு நமையாளும்
புவனைதன் பீடம் புட்ப ரதத்திற் பொலிவித்தே
தவவிபு தருமித் தகையெவ ரேசெய் தாரென்னச்
சிவமலி யானைக் காவிடை யேசேர்ந் ததுவன்றே. (௬அகூ)

நாவ னிழற்கண் மேவிய நம்பன் நலமாருந்
தேவியை யேவல மாகத் திருவீ திகணான்கு
மேவி யியம்பல வார்த்திட வியனு ருஞ்சித்தர்
தாவில் சபைக்க ணுற்றது வானத் தவர்போற்ற. (௬கூ0)

இன்னப டிக்கே யெய்திய பின்ன ரெழிற்சித்தர்
அன்னையை நாடி வந்தவ ருக்கே யன்பாக
மன்னிய பூதி குங்கும மாதி வழங்கப்பின்
அன்னவர் தங்க ளிருக்கையை யெய்தி யமர்ந்தாரே. (௬கூக)

## வேறு.

இவ்வியாகம் நடாத்துதந்துப் பொருளுதவினோ ரின்னுரெனல்.

இறைவிதிரு வேள்வியொரு மூன்றுநாளிவற்றின்முன்னு ளிங்கெஞ் ஞான்றும், தறைபுகழுத் தமிழ்ச்சங்க நிதீஇப்புலவோர் தமைப்புரக் குந் தண்டாச்சீர்த்தி, பொறைமெய்ம்மை யிகைமுன்னுங் குணங் கொண்டபுனிதனொருபொன்னுச்சாமி, நிறைதவத்து வரும்பெரிய சுகுணபாண் டித்துரையா நிருபன்றானும். (௬கூஉ)

மற்றையிரு நாளுமோ ரெட்டையபுர மாபுரத்துவரு மன்ன னுறும் இற்றையவேள் விக்கன்றிப்பலவேள்விக்காயிரமாயிரம்பொன்னீந்த பெற்றியான் சின்னப்ப வேணல்கும் வெள்ளியங்கி ரிப்பேர்கொண்ட கொற்றவனு மம்மீண்டு முடிந்தமையென் னொருநாவாற் கூறற் பாற்றோ. (௬கூங)

அவிசொரிந்தா யிரம்வேள்வி யாற்றலினு மாருயிரி லொன்ற னுக்கே தவவிங்ஙன் கோறல்புரிந் தின்னுமை நன்றென்னுந் தக்கோன் சொன்ன, நவமுறுசொற் கிலக்கியமாய்ச் சீவன்முத்தர் முதலோர்நா னூரு மாற்றுஞ், சிவைபுவனம் பிகையம்மை திருவருள்பெற் றிடு வேள்வி சிறந்த தம்மா. (௬கூச)

### ஓஷதிதேட அடியரை யுய்த்தல்.

### வேறு

இன்ன வாமதி முழுக்கலை யாகங்க ளியற்றி
யன்னை போலகி லத்தவர்க் குதவிய தாக
மன்னு சிர்ப்பச்சை மாமலை வரதனர் தமக்கு
முன்ன னுக்கிர கஞ்செயு முறைமையை முன்னி. (சுகரு)

உரைக்கு மோடதி சிற்சில முடித்திட வுளங்கொண்
டொருப்ப டுந்தொண்டர் தமையுயர் வரைகள்கா வனங்கட்
கருத்தி யாகவே விடுத்துமற் றதற்குரித் தாகத்
திருப்புல் லாணியே யாதியாந் திருப்பதி சேர்ந்து. (சுகசு)

### சித்தர் இராமேசுவரம் சேர்தல்.

சேது மேவிய விராமநா தன்றனைத் தெரிசித்
தேதி லாசையா லெய்தியாங் கிருந்தமிழ்ப் பதிக
மோதி யேயொரு பக்கமத் தலத்திடை யுவந்தே
யாதி நாயகி யருளுடை யண்ணலா ரமர்ந்தார். (சுகஎ)

### சித்தர் சேதுமன்னரைச் சந்தித்தல்.

இவரி ருக்கையி லிவர்புகழ் கேட்டெழி லாரும்
நவம லிந்தசிர் முகவைமா நகரையா ளிறைவன்
சிவம லிந்தவேள் விக்கொரே ழாயிரஞ் செம்பொ
னிவண ளிப்பமென் றியம்பிய பெருந்தகை யேந்தல். (சுகஅ)

சித்தர் தம்மைத்தாந் தரிசனை செயவுளஞ் சேர்ந்து
பத்தி யாலடுத் தெம்பிரான் சினகரப் பரப்புள்
ளத்த ரம்பிகை திருமண மண்டபத் தப்போ
தொத்த பற்பலர் குழாத்தொடு தொழுதுகண் டுவந்தார். (சுகக)

மன்ன ராதிப ரடிதொழச் சேதுவாழ் மன்ன
ரின்ன வாவனக் கஞ்செயப் பெறுமிவ ரெனைய
ரென்ன வாய்தலி னுளஞ்செல வினவினர்க் கேந்தல்
சொன்ன வாசகத் தொருசிறி தெடுத்திவண் சொல்வாம். (எ00)

வேறு

நிலவியிவ னெழுந்தருளு நெடுந்தகையா ருறுந்தகுதி நீர்மை முற்றுஞ், சொலவெனக்கு வலியிலது தெரிந்தமட்டி லொருசிறிது சொல்வே னிந்தத், தலமலிசீர்க் குருகூரி லவதரித்த பெருந்தகை சங்கரி கௌமாரி, கலகவிழி யுமைபுவனை திருவருள்பெற் றுய்ந்தவருட் கலைவ லாளன். (எ0க)

ஆண்டுதொறு மொவ்வொன்றுப் பதினறு தவவேள்வி யகிலங் காண வேண்டிமுடித் தவன்முடிவேந் தருஞ்செய்தற் கரியவற்றை விரைந்து செய்வோ, னீண்டபுகழ்ப் பச்சைமலைச் சித்தரருள் பெற்றுலகி னிலவுகிற்போன், மாண்டதவ வொழுக்கத்தான் ஞானசித்த வபிதான வள்ளி யோனே. (எ0உ)

வேறு

இன்னவனை யறியாதா ரிவ்வுலகி லியாருமிலை
மன்னர்தமிழ் நாடனைத்து மகிழுவவ னரும்புகழே
யன்னைபுவ னையினருளா லலகிலற்பு தம்புரிவான்
றன்னிகரா வேவரையுந் தானினைக்குந் தன்மையினன். (எ0௩)

என்னவிவர் தன்மைசிறி தெடுத்தோதி யளவளாய்
மன்னிநெடும் போதுறைந்து மகிழ்ந்துவிடை கொண்டகன்றுன்
பின்னையருட் சித்தர்பிரான் பெற்றுறுமெய்ஞ் ஞானநிலைக்
கன்னியமா யினுமேனேர்க் கதுவேண்டு மெனத்தெளிப்பான். ()

சிந்தைகொடு தடாதகையைத் திருமணங்கொ ளருட் சோம
சுந்தரபாண் டியர்பூசைத் தோற்றம்போ லவண்மருவுஞ்
சிந்துமுதற் றீர்த்தமெலாஞ் சென்முடிச் சினகரத்துள்
வந்துகன்ம விதிப்படியே வாய்ந்து தரிசனை புரிந்தார். (எ0ரு)

*இல்லாரை யெல்லாரு மெள்ளுவர்செல் வரையெனிலோ
வெல்லாருஞ் செய்வர்சிறப் பென்றதிருக் குறட் கெதிராக்
கல்லாருங் கற்றவருங் காவலருஞ் சிறப்பியற்றச்
செல்லாருங் குழற்புவனை திருவருள்சேர் சித்தர்பிரான். (எ0சா)

---

* இத்திருக்குறள் சேரமான் பெருமாணயனர் திருக்கைலாய ஞான வுலாவில் எடுத்துரைக்கப்பட்டது.

சித்தர் மதுரையம்பதி வருதல்,

நனைபவரைச் சிவனுலகி னுளுமுறப் புரிமகிமைக்
கனைகடற்சே துவைக்கடந்து கௌரியற்குத் தலைநகரா
மனகநகர் தனையடைந்தாங் கருந்தமிழ்ச்சங் கத்திறமை
புனைபாண்டித் துரைப்பெருமான் புகழ்ச்சங்கந் தனையுற்றார். (எ0எ)

நன்றிபிறர்க் கியற்றுதலே நாளுந்தன் செயலென்ன
வென்றுமித யங்கொண்ட வெழிற்பாண்டித் துரைமாலு
மன்றுதன தவைக் கெழுந்த வடிகட்கே பலவுதவி
நின்றுபுரிந் திடவாங்கு நிலவிவீற் றிருந்தனரால். (எ0அ)

அன்பர்கள் போதியமலைக்கெழுந்தருளும்படி சித்தரை அழைத்தது.

இனையர்சில நாட்குமுன மினிதினனுப் பியசில்லோர்
வனமருவுஞ் செந்தமிழை வகுத்தமுனி வாழ்மலையந்
தனையண்மி யோடதிகள் தாங்கிடையா தனவாக
மனவலிகுன் றினர்வந்தார் மற்றவருட் டலையன்பன். (எ0௯)

சகாரத னடிபரவுந் தக்கோனெல் லைப்பதிவாழ்
சகாரத வள்ளியோன் றகவுறுமவ் வோடதிக
ளகன்ஞாலத் தெழிற்பொதியி லமைவுடைய வெனவுணர்த்தச்
சுகனேருஞ் சித்தர்பிரான் றனைவினெழுந் தனரம்மா. (எக0)

திருக்குற்றாலத்திற் சித்தரமர்தல்.

யாவருக்கு முபகார மாமெனவும் புறப்பட்டு
மேவருமன் பின்பெருக்கால் விரைந்துவர லாகுமென
மூவரையுந் தாலாட்டு முதல்விபுவ னையைநினைந்து
தாவருஞ்சீர்க் குற்றாலந் தனையடைந்தா ரருண்மிடைந்தார். (எகக)

சித்தர்செயு மொருநவராத் திரிப்பூசா தெரிசனைக்கே
பத்தர்பல ரனைக்காப் பதிக்குறுவா ரிஃதறிந்தும்
வித்தகனு ருளங்குழைந்து மேவுதிருக் குற்றாலத்
தித்தகுநல் விழவெய்த வென்னுவங் கினிதிருந்தார். (எகஉ)

அம்பாசமுத்திரம் இராமசாமி முதலியார் சித்தரை வழிபடல்.

ஆதிசத்தி திருவருளா லாகூழ்வந் தடுத்திடலுஞ்
சாதுசங்கத் தவன்ராம சாமிமா *லம்பை நின்று
மோதுதிருக் குற்றாலத் துறனேக்கி யருள்புரிந்தா
ரீதுபற்றிப் போலுமிவ ணெழுந்தருளி யிருந்ததுவே. (எகங)

வேறு.

நவராத்திரியோமம் வடவநவியிற் சித்தர் நடாத்தல்.

நவநி சிப்பெரு நாளடுத் திடவினி நம்மா
தவம லிந்திடுஞ் சித்தருங் காவையைச் சார்ந்து
சிவையைப் பூசனை செய்தற்கு நாளிலா மையினு
லவண டுத்தவர் தவத்தினு லாற்றின ரங்கண். (எகச)

சித்தர் கூடலைத் திரும்பவும் அடைதல்.

அதுக ழித்தபின் சித்தர்தென் கூடலை யணுகத்
துதிமி குத்திடு தமிழ்ச்சங்கம் புரக்கின்ற தோன்றல்
கதுமெ னப்பல்வே றுபசரிப் பியற்றலுங் களித்து
விதியை வென்றிடுஞ் சித்தராங் கிருந்தனர்மேவி. (எகரு)

வேறு.

பண்டிருந்த வசிட்டமுனி முதலோர்க்கு மக்காலம் பராள் வேந்த
ரண்டியருந் துணைபுரிந்தா ரவனிபர்க்கு மம்முனிவ ரடுத்தடுத்துக்
கொண்டுபல வாசிசொலி யரியவினை முடித்தா ரிக்கொள் கையாலே
தண்டமிழ்ப்பான் டித்துரையுஞ் சித்தருமன் புற்றுறைதல் தகவா
மன்றே. (எகசு)

இன்ன வாறுநஞ் சித்தரு மாங்கினி திருப்ப
வன்னை யம்பிகை யெழுந்தரு ளானைக்கா வடுத்து
மன்னு கின்றமுத் தீச்சுரத் தைந்தென வழுத்தும்
நன்ன லக்குரு பூசைநா ளணுக்கமா நண்ண. (எகஎ)

முத்தீச்சுரத்தில் ஐந்தாவது குருபூஜைக்குச் சித்தரெழுந்தருளல்.

உரைசெ யிக்குரு பூஜைவந் துற்றதைப் பாண்டித்
துரைய றிந்துவே ண்டியபொரு ளளித்தனர் தூய
பரைவி ரும்புற நவநிசி விழாக்குறும் பலாவில்
வரைவில் வண்மையிம் மன்னனே நடத்தினன் மன்னே. (எகஅ)

* அம்பை - அம்பாசமுத்திரம்.

சங்கத்ததிபர் தம்பாலுறைதல்.

கதியெ னக்கருள் சித்தருங் காவையை யணுகி
விதுவு லாமெயி லோங்குமுத் திச்சுர மேவிக்
கதுமெ னக்குரு பூசனை கனிவொடு நடாத்தி
மதுரை யம்பதி நாடியே பின்னரும் வந்தார். (எகக)

வேறு.

நீண்டபுகழ்ச் சித்தரிங்ஙன் வரவேற்றுப் பல்சிறப்பு நிகழச்செய்தா னீண்டியசீர்ப் புகழ்ப்பாண்டித் துரைமகா ராஜவள்ள லென்னவேஹும், வேண்டினுநன் ருமுயர்ந்தோ ரென்றறிவி ஞுலுயர்ந்த விழுமியோர்கள், காண்டொறுஞ்செய் வார்சிறப்பென் றுரைத்தநாலடியார்க்குக் காட்டிதாமே. (எஉ0)

இளமைகல்வி யறிவுமுத லியவுறுபா ண்டித்துரைநன் கிட்ட மேன்மேல், வளர்பொருள்கள் சித்தர்மக முடித்தருளோங் குதற்குமிக மகிழ்ந்து தந்து, தளர்வுறுபே ரன்பினு மருட்குழவி பொருட் செவிலித் தாயி ஞலே, யுளமகிழ வளருமெனு மொருகுறட்கோ ரிலக்கியமா வுறச்செய் தானே. (எஉக)

முனிவருமன் னருமனத்தின் முன்னுவவெல் லாம்பொன்னுன் முடியுமென்று, கனிவுமிகு திருவாத வூரடிகள் சொன்னதற்கோர் காட்டுமாக, மனிதரினுந் தேவரினு முயர்பாண்டித் துரைத்தேவ மன்னரேறு, தனிமகிமைச் சித்தருளங் கருதுபெருந் தவமுடிக்கத் தக்கோன் மன்னே. (எஉஉ)

வேறு.

வாழ்த்து.

அன்னைபிதா மகன்மூவ ராண்டநா டதுவாழி
மன்னுகுரு கூர்வாழி மற்றதனி லவதரித்த
வென்னுடைய குருமுதல்வர் வாழியிவ ரியற்சரிதந்
தன்னைவா சித்தறிவோர் தழைத்துமிக வாழியவே.

திருவருட்சகாயம்.

திருக்குருகூர்ச் சித்தமான்மியம்,

முற்றுப் பெற்றது.

---

# சாற்றுக்கவிகள்.

எட்டயபுரத்தில் வசிக்கும்
ஸ்ரீமத்—விருதை-சிவஞான சுவாமிகள்
இயற்றியது.

எழிற்பரம சிவசத்தி யாம்புவனை வேள்வியுல கிசைக்குஞ் சித்தி விழுப்பமுறப் புரிகுருகூர் ஞானசித்தற் கொருபுகழ்நூல் விருப்பி னீந்தான், வழுத்தடியர் தமைச்சிவமாத் தொழுமுறையா லம்முறை யின் வழாத பத்தி, பழுத்தமனத் தின்னமுத வாக்கினன்சண் முகப் பேர்கொள் பாவல் லோனே.

---

திருநெல்வேலி ஸ்ரீஅனவரத விநாயகர் கோயில்
மகாவித்வான் மகா-ள-ள-ஸ்ரீ
நெல்லையப்பன் கவிராஜரவர்கள்
இயற்றியது.

கருமயிலை ஞானசித்த சாமிசரி தையினிற்
கவினுநா னன்காம்பா கம்வனையி னுள்ள
வருமயிலை கதுவுபொழிற் றிருக்குருகூர்ச் சித்த
மான்மியமதை யுள்ளன்பின் வரன்முறைய தாகப்
பொருமயிலை யூர்தருவை வேற்குமரன் பாதப்
போதகத்து வைத்துநித்தம் போற்றிடுமுத் தமனாஞ்
திருமயிலைச் சண்முகவேள் செந்தமிழ்ப் பாடிச்
சீர்த்திபெற்றான் தினகரன்வாழ் தினம்வரையு மாதோ.

---

பாளையங்கோட்டை
தமிழ்ப்பண்டிதர் மகா-ள-ள-ஸ்ரீ
மு. பொ. ஈசுரமூர்த்திபிள்ளை அவர்கள்
இயற்றியவை.

வெண்பா.

அஞ்ஞான மெல்லா மகற்றி யருள்வடிவாம்
மெஞ்ஞான சித்தரென வேவியே—இஞ்ஞாலத்
தேற்றவருக் கெல்லா மினிதருளு மூர்த்தியதாம்
தேற்றமொழி மான்மியமிது தேர்.

கட்டளைக்கலித்துறை.

தெய்வப் புலவ னிவனுமென் றென்னுறத் திண்மயிலை
சைவத் திறத்திற் றமிழ்நலந் தோய்ந்தெழு சண்முகனிவ்
வையத் தவர்க்கு வரந்தரு சித்தர்தம் வண்மையெல்லாம்
உய்யத் தகுமுறை யாமென வோதி யுணர்த்தினனே.

---

திருநெல்வேலி இந்துகாலேஜ் தமிழ்ப் பண்டிதர்
மேலகரம் மகா-ள-ள-ஸ்ரீ
சொ. சுப்பிரமணியக் கவிராஜரவர்கள்
இயற்றியவை.

குருகையம் பதிசெய் தவத்திறைற் றேன்றிக் குவலயத்
துயிர்க்கெலா நெஞ்சிற்
செருகையம் பதிபற் றெறுபெரு மானே பரமெனத்
தெளிந்தமெய் யறிவிற்
றிருகையம் பதிலி லாதுசேர் ஞானத் திறத்
திறற் கல்வியா லுவமை
தருகையம் பதிக முறுகடன் ஞாலந் தனிலிலை
யெனத்தகுந் தகையான். (க)

பத்தியின் யாகம் பலப்பல வாகப் பண்ணிய
புண்ணிய வானற்
சத்திய ஞான சித்தசா மியெனத் தகும்
பெயர் கொளுமவன் சரித
மெத்திய ஞாலத் தவர்நல முறமோர் நூல
தா விளம்பினெ னெவரு
நத்திய சீர்சால் வித்துவான் மயிலைச்
சண்முக நாவல ரேறே. (உ)

---

நாகூர் தர்கா வித்துவானும்
மதுரைத்தமிழ்ச்சங்கப் புலவருளோருவருமாகிய
ம-ள-ள-ஸ்ரீ
வா. குலாம்காதிறு நாவலரவர்கள்
பாடியவை.

தேனைக்கா மரம்பயில்வன் டுண்டுதிரி தலினடியார் தினைப்ப ஞானம்
எனைக்கா விடலுகா வெனக்கருதி யுலகுமுழு திகந்து சீர்சால்
ஆனைக்கா விடைமெழுந்து பல்கித்தாங் கிளைபடர்த்தி யலர்ந்த காரு
மானைக்கா வல்கெழுமு ஞான சித்த சாமிகதை மகிமை போர்ந்து.

சொல்வளனும் பொருள்வளனும் பழுநியமு தொழுகுபஃ றாக்கிற்
ருகப், பல்வளன்சார் திருக்குருகூர்ச் சித்தமான் மியமெனும்பேர்
பயந்தாங் கோர் நூல், வெல்வளனி னிலவியசெய் தெந்நூலும் பின்
னூலாய் வெரீஇப்போ கட்டான், கல்வளனும் பொருவாது கின்
னென்ற தடந்தோளின் கவிஞர் கோமான்.

எச்சங்க முந்தரள முமிழ்பண்ணைத் தென்மதுரை யிருந்த பண்டை
மூச்சங்க முந்திரளா விச்சங்க மாயதென முதுநூல் காணும்
அச்சங்கப் புலவருட னமரியமாச் செந்தமிழ்மற் றனைத்துந் தேர்ந்து
கச்சங்க முலைமடவார் மால்கொள்ள வேளாங்கு கவின்ற நீரான்.

இருமயிலை மணந்துவடி வேலேந்தித் தன்னடியா ரிதயந் தோறும்
ஒருமயிலை யூர்ந்துவரு மலைகிழவோற் கன்மொழியா யுற்ற நாமங்
கருமயிலை யிடுகுறியா யினவாற்றுற் சைவரெலாங் களித்துக் கூறுந்
திருமயிலைவயி னுதித்தசண்முகமாலெனுங்கலைக்கட்டெள்ளியோனே.

---

திரிசிரபுரம் எஸ். பி. ஜி. காலேஜ்
மாஜி பிரதம தமிழ்ப் பண்டிதரும் இலக்கண உபாத்தியாயருமாகிய
ஸ்ரீமாந்—ஆ. கா. பிச்சைஇபுராகிம் புலவர் அவர்கள்
இயற்றியவை.

பிறநிலத்தின் பொறைபொருங்கு மேற்றுங்கித் தனையாளும் பெட்
பின் வேந்தற், குறவிறைபற் பலநேருந் தகையுடைத்தாய்ப் பொழு
தா று முயர்வின் மிக்க, திறனுடைப்பல் வழியானு மேவுநருக் கிருங்
களிசெய் செம்மைத் தாய, அறனிருக்குந் திருக்குருகூர் மீக்கூற்றுன்
விளக்கமுற வாதரித்தே.

பொய்பாத மொழியுடைநற் புலவர்பிரான் றேன்றினெனப் புகன்ற
முற்சொன், மெய்யாருந் திருக்குறளுக் கிலக்கியமே தானாகி வேதத்
தாருஞ், செய்யாத வகைமறையென் பெயர்க்கியையப் புகன்மகங்கள்
சிறக்கச் செய்யுங், கையாருந் திருஞான சித்தனெனு மொருமுனிவன்
கதைதனை யாய்ந்தே. (2)

பண்புடையார் தொடர்பென்னப் பயிறோறு நயன்விளங்கும் பாக
மாய, எண்புடைய வொருநூலா வியற்றியருஞ் சிறப்பொருங்கு
மியையப் பெற்றான், மண்புடைய தமிழுலகிற் றமிழ்ப்புலமைத் தலை
மைகொளு மாட்சி மேய, நண்புடைய திருமலைச் சண்முகப்பேர்
படைத்தபெரு நாவ லோனே. (3)

---

ஸ்ரீமத்முருகதாசசுவாமிகள் மருகரும், மாணாக்கருமாகிய
கோபாலசமுத்திரம் வித்வான்
மகா-ள-ள-ஸ்ரீ
## சண்முகதாச பிள்ளை அவர்கள்
இயற்றியவை.

பொன்மலையிற் றிகழ்வுறுநா வலந்தீவி னிற்பரத பூமி யூடு, தென்
மலையிற் பிறந்திழிந்துட் கொள்வார்தம் மலமுதலாந் தீமை தீர்த்துத்
தன்மலையிற் சிறந்தளித்துச் சாகாசசெம் மலைத்தழுவிச் சலன மின்றி
மன்மலையிற் புறுபொருநை நதிக்கருகின் மாகநகர் வளம்போ லோ
[ங்கி. (௧)

சிந்தமரத் திடைப்புகுநம் மாழ்வார்நேர் பலகோடி சிட்டர் வாழ்த்தி
வந்தனைசெய் துய்ந்ததிருக் குருகூரில் வசிட்டமுனி வரன்போ லிந்
நாள், வந்தபுகழ் ஞானசித்தன் வல்லபுவ னம்பிகைத்தாய் மகிழ்ச்சி
பூத்துச், சொந்தமலர்க் கன்னைருளாற் செய்தளினை யாடலெலாந்
தொகுத்துப் பூமேல். (௨)

திருமயிலைப் பதியில்வரு சண்முகப்பா வலனரிய செந்தே னென்று
கருமயிலைத் துணைநயனக் கலைவாணி நிகர்புலவர் களிக்கும் வண்ண
மொருமயிலை யன்கருணை யாற்கலச மாமுனிவ னுண்டு செய்பு
மருமயிலை பணிதமிழ்ப்பா டலிற்பாடி யளிர்புகழ்ச்சி ரடைந்திட்
[டானே. (௩)

சிவகங்கை சமஸ்தானம்
புத்தூர் மகா-௱-௱-ஸ்ரீ
வெள்ளையசுவாமிகள்
இயற்றியது.

ஆர்ச்சித்த புண்ணியத்தி னும்பயனுத் தாயகுரு
கூர்ச்சித்த மான்மியத்தைக் கூறினன்—நேர்ச்சியுள
முத்திநெறிச் சைவ முறையொழுகுஞ் சண்முகவேள்
சத்திபிபா நத்திலுற்ற தால்.

---

☞ இச்சிறப்புப்பாயிரங்கள், நூன்முடிந்தபின்னர் வித்துவான்கள் அனுப்பியவையாதலின், முறைபெற வைத்தலின்றி அவ்வப்போது கோத்து இறுதியிற் சேர்க்கப்பட்டன.

குறிப்பு.—இந்நூல் திருவானைக்காச் சித்தசபைக் காரியதரிசியிடம் வி. பி. யில் பெற்றுக்கொள்ளலாம். விலை அணா அ.

---

# பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| உ | ரு | அறி | அரி (முகவுரையை) |
| க | உ | முகஞவல | முகநாவல சிறப்புப்பாயிரம் |
| எ | உச | றன்ணி | தன்ணி |
| ங | ரு | விதியி | விதியின் (நூல்) |
| கூ | சா | மாற்றின் | மாற்றி |
| ரு | ஙங | றுனைக்கப் | றுனைக்க |
| எ | சா | பேமிறன்றே | பேமென்றே |
| ,, | ஙக | சதுரிஞெரி | சதுரிஞெரு |
| உகூ | சா | திகழந்தன | திகழ்ந்தன |
| ங௰ | கஅ | பெரும்யோக | பெருயோக |
| ஙச | உ | யேக | வேக |
| ,, | கூ | கறை | கரை |
| ஙரு | உசா | வுடலெள | யுடலென |
| சங | கஉ | நாள்வழி | நாள்விழி |
| சச | உஎ | யரிப | யுயரிய |
| சகூ | உஉ. | பாதவி | பரிதவி |
| ருசா | உங | வண்மகி | முண்மகி |
| சா௰ | அ | சித்திரை | சித்தரை |
| சாஉ | உகூ | திகழ்ச் | திகழச் |
| சாசா | கச | யகத்தை | யகந்தை |
| சாகூ | கரு | முறையிடை | முறையிட |
| எரு | கச | யாமனழ | மாமனழ |
| அ௰ | கஎ | முண்டி | ருண்டி |
| அக | உங. | மியாரு | நாரு |
| அஉ | க௰ | லெதறு | லெதரு |
| அங | உ | காமை | காவை |
| கூஉ | க௰ | வனன்ற | வன்ற |
| கூஅ | சா | துன்னியகண்மணியேபோற் | துல்லியவில்கண்மணியாம் |
| கூகூ | உ௰ | கன்னி | சிங்க |
| ௱ | உக | னவினவரு | ளவினவரு |
| ௱உ | கஉ | முறை | மறை |
| ௱க௰ | கங | சபைச் [ந்தருளச் | சபை [வைத்துக்கொள்க. |
| ௱கக | சா | சித்தர்புதுக்குளத்துக்கெழு | சாகஅ-வது பாட்டுக்குமேல் |
| ௱கங | ங௰ | வோய் | வாய் |
| ௱ககூ | சஅ | மருங்குக் | மருங்கும் |
| ௱உ௰ | சச | சாலையிட | சாலையிடை |
| ௱உச | உஉ | வேகாண | வேகாண் |
| ,, | ஙங. | நாயமா | நாயகமா |






வந்தபொழு தப்பதியா ளதிகார முறுசெங்கல் வராயன் றன்னல்
நந்தமையாள் சித்தர்பெரு மிதங்கேட்டு நாடாதே நங்கேள்விக்குச்
சிந்தையுவப் புறவன்னுர் செப்புவரேல் வேள்வியாஞ்செய்விப்பேமென்
றந்தவித மடிகளொடு மளவளா யுண்மையறிந் தகம கிழ்ந்தார்.

மனமகிழ்ந்தெந் தாய்நீதா னினிமுடிக்கு மகப்பொருள்கள் வழங்கு
வாமுட், கனிவொடுமுன் கையொப்ப மிட்டார்க ளளித்தாலுங் கருத்
திலாதே, யினியளியே மென்றாலும் யானேயப் பொருண்முழுது மீவே
னீவிர், பனிரண்டாம் வேள்விசெயு நாளுணர்த்தல் வேண்டுமெனப்
[பகர்ந்து சென்றான்.

இவ்விரண்டு பாடல்களையும், ௧௬-ம் பக்கம் ௬௬அ-ம் செய்யுட்கடுத்து வைத்துக்கொள்க.

---

☞ யாழ்ப்பாணத்துச் சுன்னுகம் பிரபல வித்துவான் ஸ்ரீமத் அ. குமாரசுவாமிப் பிள்ளையவர்கள் முதலிய சில வித்துவான்களனுப்பிய சிறப்புப்பாயிரங்கள் இப்புத்தகம் முடிந்தபின்னரே வந்தமையால் இப்பதிப்பிற் சேர்க்கக்கூடாவாயின. அடுத்த பதிப்பிலும் வசனநூலினும் அவை பதிப்பிக்கப்பெறும்.